# சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்

**பாரதிதாசன் பல்கலைக்கழக (பிஎச். டி) முனைவர் பட்டத்திற்காக**

**அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**ஆய்வாளர்**

**ஜோ. முத்துமீனாள் எம். ஏ., டி. பி. டி.,**

**பதிவு எண்: Ref. No. 36264/Ph.D.K6/Tamil/F.T/Oct. 2014**

**நெறியாளர்**

**முனைவர் ம. செல்வராசு எம். ஏ., எம். ஃபில்., பி. எட்., பிஎச். டி.,**
**இணைப்பேராசிரியர் & துறைத்தலைவர்**

**தமிழ் உயராய்வு மையம்**
**கணேசர் கலை அறிவியல் கல்லூரி**
**மேலைச்சிவபுரி – 622 403**
**புதுக்கோட்டை மாவட்டம்**



**பிப்ரவரி – 2020**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் ம. செல்வராசு எம். ஏ., எம். ஃபில்., பி. எட்., பிஎச். டி.,**
இணைப்பேராசிரியர் & துறைத்தலைவர்
கணேசர் கலை அறிவியல் கல்லூரி
மேலைச்சிவபுரி – 622 403.

“**சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்”** என்னும் தலைப்பில் மேலைச்சிவபுரி கணேசர் கலை அறிவியல் கல்லூரித் தமிழ் உயராய்வு மைய ஆய்வாளர் ஜோ. முத்துமீனாள் (பதிவு எண்: **Ref. No. 36264/Ph.D.K6/Tamil/F.T/Oct.2014)** அவர்கள் செய்துள்ள முனைவர் பட்ட ஆய்வேடு என் நெறியாள்கையின் கீழ், அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டதென்றும், இவ்வாய்வேடு மீது வேறெந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம்: மேலைச்சிவபுரி

நாள்:

நெறியாளர்

முதல்வர்

## ஆய்வாளர் உறுதிமொழி

**ஜோ. முத்துமீனாள் எம். ஏ., டி. பி. டி.**

பதிவு எண்: **Ref. No. 36264/Ph.D.K6/Tamil/F.T/Oct. 2014.**

முனைவர் பட்ட ஆய்வாளர்,

தமிழ் உயராய்வு மையம்,

கணேசர் கலை அறிவியல் கல்லூரி,

மேலைச்சிவபுரி – 622 403.

**"சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்"** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் பெறுவதற்காக என்னால் தன்னியலாகச் செய்யப்பட்டதென்றும், இதற்கு முன்னர் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டமும் பெற இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதி கூறுகிறேன்.

இடம்: மேலைச்சிவபுரி

நாள்:

ஆய்வாளர்

நெறியாளர்

## நன்றியுரை

**சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்** என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்வதற்கு அனுமதி வழங்கிய பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கும், தமிழ்ப்பணியில் தன்னலமற்ற சேவை செய்து நூற்றாண்டு கடந்து செம்மாப்புடன் திகழும் மேலைச்சிவபுரி கணேசர் கலை அறிவியல் கல்லூரிக்கும் நிர்வாகப் பெருமக்களுக்கும் முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தமிழ் உயராய்வு மையத்தில் முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்துவதற்கு அனுமதி வழங்கிய கல்லூரி முதல்வர் முனைவர் **சிவ. சொர்ணம்** அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது. முனைவர் பட்ட ஆய்வு சிறப்பாக அமைய ஆய்வு நெறிமுறைகளைச் செம்மையாக எடுத்துக்கூறி வழிகாட்டிய நெறியாளர் துணை முதல்வர், துறைத்தலைவர் முனைவர் **ம. செல்வராசு** அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சிறந்த ஆய்வுக்கு சிறந்த ஆலோசனைகள் வழங்கி ஆற்றுப்படுத்திய கல்லூரியின் மேனாள் முதல்வர் முனைவர் **க. கனகராசு** அவர்களுக்கும் மேனாள் துறைத்தலைவர் முனைவர் **தெ. திருஞானமூர்த்தி** அவர்களுக்கும் என் நன்றி உரியது.

ஆய்வுக்குச் சிறந்த ஆலோசனைகளை வழங்கிய தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியினை உரித்தாக்குகிறேன். ஆய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கி ஆற்றுப்படுத்திய கணேசர்

கலை அறிவியல் கல்லூரியின் நூலகர் முனைவர் **டி. ஆர். தெய்வானை** அவர்களுக்கு என் நன்றி. ஆய்வுக்கான தரவுகள் பெற உதவிய திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழக நூலகர்கள், சென்னைப் பல்கலைக்கழக நூலக நூலகர்கள், சென்னை கன்னிமார நூலக நூலகர்கள் ஆகியோருக்கு என் நன்றி.

என்னைத் தெய்வமாக இருந்து வழி நடத்தும் என் அண்ணன் **ஜோ. வெங்கடேசன்** அவர்களுக்கு என் நன்றி. கல்விக் கண் தந்து உதவிய அப்பா **ஜோதி**, அம்மா **நல்லம்மாள்** ஆகியோருக்கும் உடன் பிறந்த சகோதரி **இந்துமதி** மாமா **செந்தில்குமார்** குழந்தை **ஜெசிகா ஸ்ரீ** மற்றும் குடும்பத்தார்களுக்கும் உடன் பயின்ற **க. கனிமொழி, ப. பபிதாராணி, லட்சுமி** மற்றும் ஆய்வாளர்களுக்கும் நண்பர்களுக்கும் என் நன்றி உரியது.

அன்புடன்

# பொருளடக்கம்

# முன்னுரை

செவ்வியல் பனுவல்கள் என்று அழைக்கப்படும் சங்க இலக்கியங்கள் பண்டைத் தமிழர்கள் வாழ்வாங்கு வாழ்ந்த வாழ்வை எடுத்துக்கூறும் தன்மையவை. சங்க இலக்கியங்கள் மூலம் பண்டைத் தமிழர்களின் கலை, பண்பாடு, நாகரிகம், வாழ்வியல், இறைவழிபாடு, நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள் முதலானவற்றை அறிய முடிகிறது. மக்கள் வாழ்வின் அடிப்படையான கூறுகளுள் ஒன்று வழிபாடு. உலக வரலாற்றின் தொடக்கத்தில் நாடோடியாக வாழ்ந்த ஆதிமனிதன் காற்று, மழை, தீ முதலான இயற்கைச் சீற்றங்களில் இருந்து தம்மைக் காத்துக்கொள்ளப் போராடியபோது அவற்றை வணங்குவதால் இயற்கைச் சீற்றங்களில் இருந்து தப்ப இயலும் என்று எண்ணியதன் விளைவாக வழிபாட்டு முறை தோற்றம் பெற்றது. அச்சத்தின் காரணமாகத் தோன்றிய வழிபாட்டு முறை மனிதனின் அறிவின் காரணமாகக் காலந்தோறும் பல பரிமாணங்களைக் கடந்து பண்பட்ட நிலையினை எய்தியிருக்கிறது. இன்று வழக்கில் உள்ள சூரிய வழிபாடு, சந்திர வழிபாடு, தீ வழிபாடு, வருண வழிபாடு முதலான வழிபாட்டு முறைகள் இயற்கை சான்றனவாக இருப்பதே, வழிபாடு இயற்கையில் இருந்து தோன்றியது என்பதை அறிவதற்கான சான்றாகும். இயற்கையைக் கண்டு அச்சம் கொண்ட மனிதன் தம் அறிவால் தெய்வ உருவங்களைப் படைக்கக் கற்றுக்கொண்ட நிலையில் மனிதனை விடத் தெய்வங்கள் சக்தி மிக்கவை என்பதைக் காட்டுவதற்காகப் பல

தலைகளையும், கைகளையும் அச்சம் கொள்ளத்தக்க உருவை அமைப்பதையும் வழக்கமாகக் கொண்டான். மனிதன் அறவாழ்வை மேற்கொள்ள இறைவழிபாடு காரணமாக அமைந்தது. பண்டைக் காலத்தில் தோன்றி வளர்ந்த வழிபாட்டு முறைகளைச் சங்க இலக்கியங்கள் தெளிவாக உணர்த்துகின்றன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் இருதொகுப்புகளில் இடம்பெற்றுள்ள இறைவழிபாட்டு முறைகள் பண்டைத் தமிழர்களின் வாழ்வியல் முறைமையில் வழிபாடு எத்தகைய இடத்தைப் பெற்றிருந்தது என்பதை அறியச் சான்றாக விளங்குகின்றன. இயற்கை வழிபாடு – நடுகல் வழிபாடு – குலக்குறி வழிபாடு – உருவ வழிபாடு – பண்பட்ட வழிபாடு எனக் காலம் தோறும் வளர்ந்த வழிபாட்டு முறையினைச் சங்க இலக்கியங்கள் மூலம் ஆராய்வதால் பண்டைத் தமிழர்களின் வழிபாட்டு முறைமையினை அறிய இயலும்.

## ஆய்வுத் தலைப்பு

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் இரண்டு இலக்கியத் தொகுப்புகளும் பண்டைத் தமிழர்களின் வழக்காறுகளை அறியச் சான்றாக அமைபவை. அவ்வழக்காறுகளுள் தலையாயது வழிபாடு, இயற்கையில் இருந்து தோன்றிய மனிதன் தன்னைப் பூவுலக வாழ்வில் நிலைப்படுத்திக் கொண்டு பண்பட்ட வாழ்க்கை வாழ வழிபாடும், வழிபாட்டு முறைகளும் காரணமாக அமைகின்றன. பண்டைக் காலத்தில் இயற்கை வழிபாட்டு முறை, திணை நிலைத் தெய்வ வழிபாட்டு முறை, பெருந்தெய்வ வழிபாட்டு

முறை, சிறு தெய்வ வழிபாட்டு முறை என்பன வழக்கில் இருந்தன. வழிபாட்டு மரபினையொட்டி விழாக்களும், சடங்குகளும் தோற்றம் பெற்றன. வார நாட்கள், மாதம், ஆண்டு, பருவம் என்னும் அடிப்படையில் விழாக்கள் சூழல்களுக்கு ஏற்றவாறு இறை வழிபாட்டை முன்னிறுத்தி நிகழ்த்தப்பெற்றன. சங்க இலக்கியத்தில் கூறப்பட்டிருக்கும் இறையியல் சிந்தனைகளையும் வழிபாட்டு முறைகளையும் ஆராய்வதன் மூலம் இறையியல் சிந்தனைகளை அறிய இயலும் என்னும் நோக்கில் **"சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்"** என்னும் தலைப்புத் தேர்வு செய்யப்பட்டது.

## ஆய்வு நோக்கம்

பண்டைத் தமிழர்களின் வழிபாட்டு முறை தன்னில் நுட்பமான பல கூறுகளைக் கொண்டது. வழிபாட்டு முறை பொருளார்ந்த நிலையில் காரண காரிய முறையில் அமைந்தது. வாழ்வியலோடு இயைந்த நிலையில் வழிபாட்டு முறைகள் தமிழர்களின் வாழ்வியல் முறைமைகளையும் விளக்குவனவாக அமைந்திருக்கின்றன. எனவே சங்க இலக்கியத்தில் காணப்படும் இயற்கை வழிபாட்டுக் கூறுகள், திணை நிலைத் தெய்வங்களான திருமால், சேயோன், வேந்தன், வருணன் ஆகிய வழிபாட்டுக் கூறுகள், பண்டைக் காலத்தில் வழக்கில் இருந்த அணங்கு, சூரரமகளிர், மலை, நீர், தீ முதலான வழிபாட்டுக் கூறுகள், வழிகாட்டு முறையினையொட்டித் தோற்றம் பெற்ற விழாக்கள் சடங்கு முறைமைகள் என்னும் கூறுகளை ஆராய்வதை நோக்கமாகக் கொண்டிருக்கிறது.

## கருதுகோள்

சங்க காலத்தில் இருந்த வழிபாட்டு முறைகளின் தோற்றத்திற்கான காரணங்களை அறிதல் வழிபாட்டு முறைகளின் தோற்றத்திற்கான பின்புலங்களை அறிதல் என்னும் முறைமையில் சங்ககால வழிபாட்டின் தோற்றம் வளர்ச்சி ஆகியவற்றின் படிநிலைகளை அறிதல். இன்றைய வழிபாட்டு மரபுக்குச் சங்க இலக்கியம் துணையாக இருந்தமையை அறிதல். வழிபாட்டின் படிநிலை வளர்ச்சியில் தோன்றிய விழாக்கள் சடங்குகளின் தோற்றத்திற்கான மூல காரணங்களை அறிதல், வழிபாட்டு மரபு நிலைத்து நிற்பதற்கான காரணங்களை அறிந்து தெளிவுபடுத்துதல் என்னும் கருதுகோள்களை இவ்வாய்வு தலையாயதாகக் கொண்டுள்ளது.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் இரு இலக்கியத் தொகுப்புகளில் இடம் பெற்றிருக்கும் இயற்கை வழிபாடு, திணை நிலை வழிபாடு, சிவ வழிபாடும் பிற வழிபாட்டு முறைகளும் விழாக்கள் சடங்குகள் ஆகியன குறித்த தரவுகளைத் திரட்டி ஆராயும் நோக்கில் ஆய்வு எல்லை வரையறை செய்யப்பட்டுள்ளது.

## ஆய்வு மூலம்

**“சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்”** என்னும் தலைப்பிலான ஆய்வுக்கு இரு நிலைகளில் தரவுகள் சேகரிக்கப்பட்டுள்ளன. அவை,

1. முதன்மை மூலம்

2. துணைமை மூலம்

என்பன.

## 1. **முதன்மை மூலம்**

**“சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்”** என்னும் தலைப்பிலான ஆய்வுக்கு

1. அகநானூறு, பொ. வே. சோமசுந்தரனார் உரை, கழகம், சென்னை, 1970.
2. ஐங்குறுநூறு, பொ. வே. சோமசுந்தரனார் உரை, கழகம், சென்னை, 1966.
3. கலித்தொகை, நச்சினார்க்கினியர் உரை, ஏழாம் பதிப்பு, கழகம், சென்னை, 1967.
4. குறுந்தொகை, உ. வே. சாமிநாதையர் உரை, நான்காம் பதிப்பு, தியாகராச வெளியீடு, சென்னை, 1962.
5. நற்றிணை. ஒவை. சு. துரைசாமிப்பிள்ளை உரை, அருணா பப்ளிகேசன்ஸ், சென்னை, 1966.
6. பத்துப்பாட்டு, நச்சினார்க்கினியர் உரை, ஆறாம் பதிப்பு, தியாகராச விலாச வெளியீடு, சென்னை, 1961.
7. பதிற்றுப்பத்து, ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை உரை, கழகம், சென்னை, 1968.
8. பரிபாடல், பரிமேலழகர் உரை, நான்காம் பதிப்பு, தியாகராச விலாச வெளியீடு, சென்னை, 1956.
9. புறநானூறு. உ. வே. சா. பதிப்பு சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1971.

என்னும் சங்க இலக்கிய நூல்களில் இருந்தும் திரட்டப்பட்ட தரவுகள் முதன்மை மூலமாகக் கொள்ளப்பட்டுள்ளது.

## 2. துணைமை மூலம்

**“சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்”** என்னும் தலைப்பிலான ஆய்வில் ஆராய்ச்சி நூல்கள், கருத்தரங்கக் கட்டுரைகள், ஆராய்ச்சி கட்டுரைகள், இதழ்கள், மலர்கள், ஆய்வேடுகள் ஆகியவற்றில் இருந்து திரட்டப்பட்ட தரவுகள் துணைமை மூலங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

**“சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்”** என்னும் தலைப்பிலான இவ்வாய்வு பண்டைத் தமிழர்களின் வழிபாட்டு முறைமையினைச் சங்க இலக்கியங்களில் இருந்து திரட்டப்பட்ட தரவுகளைத் துணையாகக் கொண்டு விளக்கமுறைத் திறனாய்வினை நெறிபிடித்துச் செல்கிறது.

## இயல் பாகுபாடு

**“சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்”** என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்களாக நான்கு இயல்களாகப் பாகுபடுத்தப்பட்டுள்ளது. அவை

1. இயற்கை வழிபாடும் வழிபாட்டு முறைகளும்.
2. திணை நிலைத் தெய்வ வழிபாடும் வழிபாட்டு முறைகளும்.
3. சிவ வழிபாடும் பிற தெய்வ வழிபாட்டு முறைகளும்.
4. விழாக்களும் சடங்குகளும்.

என்பன.

## 1. இயற்கை வழிபாடும் வழிபாட்டு முறைகளும்

**“இயற்கை வழிபாடும் வழிபாட்டு முறைகளும்”** என்னும் முதல் இயல் அச்சத்தின் காரணமாகத் தோற்றம் பெற்ற வழிபாட்டு முறை இயற்கை சார்ந்த நிலையில் எவ்வாறு அமைந்திருக்கிறது என்பதைச்

சங்க இலக்கியத்தில் காணப்படும் இயற்கை வழிபாட்டுக் கூறுகளான சூரியன் – நிலவு – மலை – மரம் – தீ – அணங்கு – சூரரமகளிர் – காடுகளில் வாழும் தெய்வங்கள் – கோள் வழிபாடு முதலான அடிப்படையில் ஆராய்ந்து செல்வதில் சிறப்புறுகிறது.

## 2. திணைநிலைத் தெய்வ வழிபாடும் வழிபாட்டு முறைகளும்

**“திணைநிலைத் தெய்வ வழிபாடும் வழிபாட்டு முறைகளும்”** என்னும் இரண்டாம் இயல் நானிலத் தெய்வங்களான மாயோன், சேயோன், வேந்தன், வருணன் என்னும் தெய்வங்களின் வழிபாடு – நானில தெய்வங்களின் தோற்றம் – ஆயுதம் – வாகனம் – கொடி – மாலை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு திணைத் தெய்வ வழிபாட்டு முறை கட்டமைக்கப்பட்ட முறைமையினை ஆராய்ந்து செல்கிறது.

## 3. சிவ வழிபாடும் பிற தெய்வ வழிபாட்டு முறைகளும்

**“சிவ வழிபாடும் பிறதெய்வ வழிபாட்டு முறைகளும்”** என்னும் மூன்றாம் இயல் பண்டைக் காலத்தில் சிவ வழிபாடு – சிவனின் தோற்றம் – சிவனின் அருட்திறம் – சிவவழிபாட்டின் சிறப்புகள் – சிவனுக்கு நிகழ்த்தப்பெற்ற வழிபாட்டு முறைகள் – கொற்றவையின் தோற்றம் – கொற்றவை வழிபாட்டு முறை – திருமாலின் அவதாரங்கள் –பலராமன் – கண்ணன் முதலியன – பிற தெய்வங்கள் ஆகியவற்றின் வழிபாட்டு முறையினை ஆராய்ந்து செல்கிறது.

## 4. விழாக்களும் சடங்குகளும்

**"விழாக்களும் சடங்குகளும்"** என்னும் நான்காம் இயல் தெய்வ வழிபாட்டினையொட்டி நிகழ்ந்த விழாக்களில் மேற்கொள்ளப்பெற்ற நடைமுறைகள் – விழாக்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய சடங்குகள் – விழா சொற்பொருள் – விழா நிகழும் காலம் – விழா தொடர்பான நிகழ்வுகள் – திருவோண விழா – வெறியாடல் – பூப்பலி – நீர் வழிபாடு – முருகன் விழா – இந்திர விழா – காமன் விழா –முதலான பல கூறுகளைக் களமாகக் கொண்டு ஆராய்ந்து செல்கிறது.

## முடிவுரை

ஆய்வில் கண்ட முடிவுகள் முடிவுரையில் தொகுத்துரைக்கப்பட்டுள்ளது.

## துணை நூற்பட்டியல்

ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள் குறித்த தரவுகள் துணை நூற்பட்டியலாக அமைகிறது.

## பின்னிணைப்புகள்

ஆய்வுக்குப் பயன்பட்ட இன்றியமையாத குறிப்புகள் இணைப்புகளாகத் தரப்பட்டுள்ளன.

## மேலாய்வுக் களங்கள்

இவ்வாய்வின் தொடர்ச்சியாக ஆய்வினை மேற்கொள்ளும் பொருட்டு ஆய்வாளர்களுக்குப் பயன்படும் வகையில் எதிர்கால ஆய்வுக் களங்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

# இயல் – ஒன்று

# இயற்கை வழிபாடும் வழிபாட்டு முறைகளும்

உலக வரலாற்றில் வழிபாட்டு முறை மிகவும் தொன்மையானது. நாடோடி வாழ்க்கை வாழ்ந்த மனிதனின் மனதில் ஏற்பட்ட அச்சவுணர்வு வழிபாட்டின் தோற்றத்திற்குக் களம் அமைத்துக் கொடுத்தது எனலாம். அவ்வகையில் இயற்கைக் கூறுகளான மலை, நீர், மரம் முதலானவை எவ்வாறு வழிபாட்டிற்குரியனவாக அமைந்தன என்பதை இயற்கை வழிபாடு என்னும் இவ்வியல் ஆராய்கிறது.

## இயற்கை விளக்கம்

“இயற்கை (Nature) என்பது இயல்பாக இருப்பது என்னும் பொருள் கொண்டது. இயல்பாகத் தோன்றி மறையும் பொருட்கள் அவற்றின் இயக்கம், அவை இயங்கும் இடம், இயங்கும் காலம் ஆகியவை அனைத்தையும் இணைத்து இயற்கை என்கிறோம். உயிரினம் உயிரின் அறிவு போன்றவையும் இயற்கையில் அடங்கும்”[1] இதனால் இயல்பாக இருக்கும் உலகம் இயற்பியல், அண்டம் என்பன இயற்கையுள் அடங்குகின்றன. இயற்கை இயற்பியல் உலகின் தோற்றப்பாடுகளையும் உயிர்வாழ் இனங்களையும் குறிக்கிறது. மனிதனால் உற்பத்தி செய்யப்படும் பொருட்களும், மனித செயல்பாடுகளின் விளைவான பிறவும் இயற்கை என்பதற்குள்

அடங்குவதில்லை. இயற்கை பொதுவாக இயல்பு கடந்தவற்றில் இருந்து வேறுபாடானது. இது, "அணுவினும் சிறிய துகள்கள் சார்ந்தனவாகவோ அல்லது நாள்மீன் பேரடைகளைப்போல் மிகப்பெரிய அளவு சார்ந்தனவாகவோ இருக்கலாம்"[2] மேற்கண்ட கருத்துக்கள் இயற்கை, செயற்கை ஆகியவற்றுக்கான நுட்பமான வேறுபட்டினை எடுத்துக்காட்டுகின்றன. இதனால் மனிதனால் படைக்கப்படாத உலகத் தோற்றத்தால் உருவாக்கப்பட்ட பொருட்களை இயற்கை என்றும் மனிதனால் உருவாக்கப்பட்டனவும் மாற்றியமைக்கப்பட்டனவும் செயற்கையில் அடங்கும், என்றும் அறியலாம். இதனால் இயற்கையில் இருந்தே வழிபாடு தோற்றம் பெற்றது.

## வழிபாடு – விளக்கம்

"வழிபாடு என்பது வழிபடுதல் என்னும் பொருளுக்குரிய சொல்லாகின்றது. வழிபடு என்னும் தொழிற்பெயர் பெயர்ச் சொல்லாக மாறும் பொழுது ஈற்றயல் நீண்டு வழிபாடு என்றாயிற்று. 'பண்படு' என்பது பண்பாடு என்றாகியது போல் இச்சொல் பிறந்துள்ளது. வழி என்றால் நெறி என்றும் படு என்றால் செல்லுதல் பொருந்துதல் என்றும் பொருள் கற்பிக்கப்பட்டு ஞானிகளும், அறிஞர்களும் காட்டியுள்ள நெறியில் செல்க என்று அறிவுறுத்தும் பாங்கில் இச்சொல் ஆராயப்படுகிறது"[3]. "தமிழ் மொழி அகராதி வழிபாடு என்பதற்கு அப்பியாசம், ஆராதனை, தாழ்மை, வணக்கம், வழிபடல்"[4] என்னும் பொருள்களைத் தருகிறது. வழிபாடு என்னும்

சொல் வழியில் செல்லுகை பின்பற்றுகை, வணக்கம், பூசனை, சமயக் கோட்பாடு"[5] என்னும் பொருள் தருகின்றது என்பதை அ. அகத்தீஸ்வர் குறிப்பிடுகிறார். தற்காலத் தமிழ் அகராதி "வணக்கம் கோட்பாடு என்னும் பொருள்களைத் தருகின்றது"[6]. வழிபாடு குறித்த கருத்துக்கள் வழிபாடு என்பது நன்னெறிச் செல்லும் பொருட்டுத் தெய்வங்களை வணங்கும் முறை என்னும் சிந்தனைகளைத் தோற்றுவிக்கின்றன எனலாம்.

## இயற்கை வழிபாட்டின் தோற்றம்

உலக வரலாற்றில் மக்கள் நாடோடி வாழ்க்கை வாழ்ந்த காலத்தில் நிலையான வாழ்விடமும் நல்ல உணவும் இன்றி வாழ்ந்து வந்தனர். இக்காலத்தில் அவர்களின் வாழ்விடம் மரம் மற்றும் மலைக்குகைகள் சார்ந்ததாக இருந்தது. இத்தகைய சூழலில் வாழ்ந்த மக்கள் இயற்கைச் சீற்றங்களுக்கு அடிக்கடி ஆளாயினர். கடும் மழை, மின்னல், இடி, நில அதிர்ச்சி, புயல், நெருப்பு, வன விலங்குகள் முதலான இயற்கை மற்றும் இயற்கை சார்ந்த நிலையில் பெருந் துன்பங்களை அனுபவித்தனர். இத்தகைய சூழலில் தங்களைக் காத்துக்கொள்ளும் பொருட்டு அவர்கள் தங்களுக்குத் துன்பம் செய்யும் இயற்கையை வழிபடுவதன் காரணமாகத் தமக்கு வரும் இன்னல்களைப் போக்கிக் கொள்ளலாம் என நினைத்தனர். இச்சிந்தனையின் தொடக்கமே வழிபாடாகப் பரிணமித்தது எனலாம். ஆதி மனிதனின் வழிபாட்டுமுறை முதலில் இயற்கை சார்ந்ததாக

அமைந்தது. இதன் தொடர்ச்சியைச் சங்க இலக்கியங்களில் காணப்படும் நீர், மலை, மரம் முதலான வழிபாடுகளால் அறியலாம்.

## இயற்கை வழிபாடு

வழிபாட்டு நெறி பல்வேறு படிநிலைகளைக் கடந்து இன்றைய நிலையில் பண்பட்ட வடிவமாக நிலைபெற்றிருக்கிறது எனலாம். “மக்கள் இயற்கையின் ஆற்றல் மீது கொண்ட நம்பிக்கையே சமயத்தின் தோற்றத்திற்குக் காரணமாக அமைந்தது என்றும் அதன் அடிப்படையிலேயே இயற்கை வழிபாடு தோற்றம் பெற்றது”[7] என்றும் குறிப்பிடுவர். “மனித இனத்தவரிடையே சமயம் பற்றிய நம்பிக்கை முதன் முதலில் ஏற்பட்டிருக்குமாயின் அது இயற்கைப் பொருள்களின் ஆற்றலில் நம்பிக்கை கொண்டு அப்பொருள்களை வழிபட்டதன் மூலமே ஏற்பட்டிருக்கும்”[8] என்றும் மேக்ஸ் முல்லர் குறிப்பிடுகின்றார்.

“எகிப்திலும் பிற பகுதிகளிலும் செய்த அகழாய்வுகளின் மூலம் இயற்கை வழிபாட்டிற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. இப்பகுதியில் கண்டெடுக்கப்பட்ட பொருள்களை நுணுகி உய்த்துணர்ந்தால் தொன்மை மக்கள் இயற்கைப் பொருட்களின் மீது கொண்டிருந்த அச்சம் கலந்த வியப்பையும் மதிப்பையும் ஈடுபாட்டையும் போற்றத்தக்க எண்ணத்தையும் அறிய இயலும். இயற்கைப் பொருட்களை வழிபாட்டுப் பொருட்களாக ஏற்றுக் கொண்டதற்கு அவர்கள் தவறாகப் பொருள் கொண்ட முறையை இன்னும் மக்கள் வழங்கும் சொற்றொடர்கள் மூலம் அறியலாம். சூரியன் உதயமாகிறது, சூரியன் மறைகிறது, இடியும் மின்னலும்

மழையைக் கொண்டு வருகின்றன, மரங்கள், பூக்களையும் கனிகளையும் உண்டாக்குகின்றன. இவ்வாறான கருத்தாக்கம் சூரியன், இடி, மின்னல், மரம் போன்ற இயற்கை நிகழ்வுகள் அல்லது பொருட்கள் அதனுள் ஓர் உள்ளார்ந்த ஆற்றலைக் கொண்டுள்ளதன் மூலமே அவ்வாறு நிகழ்கிறது என்கிற எண்ணத்தால் ஏற்பட்டதாகும். உயிரற்ற இயற்கைப் பொருள்களில் உயிர்ப்புத்தன்மை இருக்கிறது. அதனுள் பெரும் ஆற்றல் உள்ளது என்று எண்ணினார். அதனாலேயே மாக்ஸ் முல்லர் தொன்மை மக்களின் சிந்தனைக் குறைபாடுடைய மனத்தால் விளைந்தது"[9] என்பர். எனவே மாக்ஸ் முல்லர் கருத்துப்படி இயற்கை வழிபாடு மனிதன் இயற்கையின் மீது உயிர்ப்படிச் சிந்தனை கொண்டதன் காரணமே இயற்கை வழிபாட்டின் தொடக்கம் என்பதைக் கூறுகிறது.

## சங்க இலக்கியத்தில் இயற்கை வழிபாடு

சங்க காலம் பண்பட்ட நாகரிக வாழ்வுடைய நகர வாழ்க்கை, திணை வாழ்க்கை, நாடோடி வாழ்க்கை என்னும் மூன்று வாழ்க்கை முறைகளும் வழக்கில் இருந்த காலம். இக்காலத்தில் வாழ்ந்த மக்கள் பெருந் தெய்வங்களையும், சிறுதெய்வங்களையும், நடுகற்களையும், இயற்கையினையும் வழிபட்டமைக்குச் சங்க இலக்கியங்கள் சான்று தருகின்றன. மனிதன் தன்னைச் சுற்றியுள்ள இயற்கையை வழிபடுவதை இயற்கை வழிபாடு எனக் கொள்ளலாம். தமிழ் மக்கள் சூரியன், தீ, நிலவு முதலான இயற்கைப் பொருள்களை வழிபட்டனர். வாழ்த்தும் மரபு பண்டைக் காலத்திலேயே தமிழர்களிடம் இருந்தது

என்பதை சிலப்பதிகாரத்தில் இடம்பெறும் மங்கல வாழ்த்துப் பாடல் அறிவிக்கிறது. இயற்கையை வாழ்த்தி வணங்குவதன் மூலம் தம்மை இயற்கை காக்கும் என்னும் எண்ணம் உடையவர்களாக மக்கள் இருந்தனர். கொடிநிலை, கந்தழி, வள்ளி என்னும் மூன்று இயற்கைத் தெய்வ வழிபாடுகளும் வலிமையின் காரணமாக மனிதர்களை அச்சம் கொள்ளச் செய்தமையினைச் சங்க இலக்கியங்களும் தொல்காப்பியமும் தெளிவுப்படுத்துகின்றன.

"இயற்கையில் மறைந்து கிடக்கும் மாபெரும் சக்தியால் இந்த உலகம் இயங்குகிறது. கடவுள் என்பது இயற்கைச் சக்திகளின் ஒட்டுமொத்த உருவமாகும். எனவே அவற்றை மனிதன் உருவாக்கி வழிபட்டால், தானும் அந்த சக்தியைப் பெற முடியும் என்று நம்புகின்றான். இதுவே இயற்கைக் கோட்பாடு"[10] அதன் அடிப்படையிலே மக்கள் இயற்கையை வழிபடத் தொடங்கினர். பண்டைத் தமிழ் இலக்கணமான தொல்காப்பியம் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்பன இயற்கைக்குரியனவாக இருந்தமையினைக் குறிப்பிடுகிறார். கொடிநிலை என்பது உச்சியில் சூரியன் நிற்கும், கந்து + அழி என்பது பற்றுக்கோடுடன் அழிப்பது தீ. வள்ளி என்பது குளிர்ச்சி தரும் நிலவு இம் மூன்றையும் வாழ்த்துவது கடவுளை வாழ்த்துவதாகவே எண்ணப்பட்டு வந்தது. இதனைத் தொல்காப்பியர் புறத்திணையில்,

**"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
**வடுநீங்கு சிறப்பின் முதலான மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"**[11]

என்று கூறுகிறார்.

சங்க இலக்கியங்களில் மலை, காடு, மரம், சோலை, நீர்த்துறை, சூரியன், நிலவு, கிரகணம் (ஒளி மறைப்பு கோள்கள்), நாட்கள் முதலான இயற்கையின் கூறுகள் வழிபாட்டிற்கு உரியனவாக இருந்தமையினைச் சங்கப் பாக்களின் வழியாக அறிய முடிகிறது. சங்க இலக்கியங்கள் கூறும் இயற்கை வழிபாட்டு முறைகளை,

1. இயற்கை வழிபாடு
2. கோள் வழிபாடு
3. நாள் வழிபாடு

எனப் பிரிப்பர்.

## இயற்கை வழிபாடு

பண்டைத் தமிழர்கள் இயற்கைப் பொருள்களில் இறைவன் உறைவதாக நம்பி வழிபட்டனர். அவ்வகையில் அவர்களின் வழிபாட்டு முறையில் மலை வழிபாடு மலையில் இயற்கையாய் உறையும் வரையர மகளிர், அணங்கு, காட்டில் உறையும் தெய்வம், சோலைகள் மற்றும் மரங்களில் உறையும் தெய்வம், நீரில் உறையும் தெய்வம், துன்புறுத்தும் இயற்கைத் தெய்வம் ஆகியவற்றை வழிபட்டு வந்தனர்.

### மலை

“மணல் நாளேற ஒன்றுடன் சேர்ந்திறுகிப் பெரும் பாறைகளால் நின்ற பூமியின் மேட்டுப் பாங்கான உயர்நிலை”[12] என்று அபிதான

சிந்தாமணி மலைக்கு விளக்கம் தருகிறது. மலையின் வெவ்வேறு அளவுடைய வடிவங்களாகக் குன்று, வரை, கரடு முதலான சொற்கள் வழக்கில் உள்ளன. பண்டைத் தமிழ் மக்கள் மலைகளில் தெய்வங்கள் உறைவதாக நம்பினர். குறிஞ்சி நிலப் பகுதியாகிய மலை நிலம், அம்மலை நிலத்திலேயே மனித வாழ்வு தொடங்கியிருக்க வேண்டும். அவ்வாறு வாழ்வு தொடங்கிய இனமே பண்டைத் தமிழர் இனம். அவர்கள் மலைபடு பொருட்களைக் கண்டு வளமுற வாழ்ந்தனர். மொழி வகுத்து இசை பயின்று அரசு நிறுவி நாகரிக வாழ்வினையும் கண்டனர்”[13].

“இயற்கை வனப்பின் வடிவமாகத் திகழும் மலை கடவுளின் திருத்தோற்றமாகும். மலையில் விளையும் பொருள்களும் மலையிடத்தில் வாழ்வோரும் பிற உயிர்களும் கடவுளின் வடிவங்களான இயற்கை வடிவங்களே. இயற்கை வனப்பினோடு உயர்ந்து விளங்கும் மலை, மனித வாழ்வுக்கென்று இறைவனால் படைக்கப்பட்ட மனிதன் இயற்கையோடியைந்து இன்பம் சான்ற வாழ்வு நடத்தினான்”[14] மனித வாழ்வுக்குத் தேவையான பொருள்களை எல்லாம் மனிதனுக்குக் கொடுத்துதவிய மலை அதன் வளர்ச்சியாலும், வலிமையாலும் வழிபாட்டிற்கு உரியதாக விளங்கியது. அத்தகைய மலையில் வரையர மகளிரும் அணங்குகளும் உறைவதாக எண்ணிப் பண்டைத் தமிழர்கள் வழிபட்டனர். மலையில் உறையும் தெயங்கள் வலிமை மிக்கவை என்னும் சிந்தனை மக்களிடம் இயல்பாகவே இருந்தது. இதனை அகநானூறு,

“**அருந்தெறல் மரபின் கடவுள் காப்ப**
**பெருந்தேன் தூங்கும் நாடுகாண் நனந்தலை**
**அணங்குடை வரைப்பின் பாழ் ஆங்கண்**” (அகம். 372 : 1 - 3).

என்னும் அடிகளில் குறிப்பிடுகிறது. சங்க இலக்கியங்களில் மலை என்னும் நிலத்தோற்றம் “வரை” (அகம். 23: 1), “கவாஅன்”(அகம். 72: 11), “குன்றம்”(அகம். 378: 22) என்னும் பெயர்களால் வழங்கப்பட்டு வந்தமைக்குச் சங்க இலக்கியங்கள் சான்று தருகின்றன. மலை உறை தெய்வங்கள், அதிகமான சக்தி கொண்டவை என்றும் அவை துன்புறுத்தும் தன்மை வாய்ந்தவை என்றும் மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதைப் புறநானூற்றுப் பாடல்,

“**ஈர்ந்தண் சிலம்பின் இருள்தூங்கு நளிமுழை**
**அருந்திறல் கடவுள் காக்கும் உயர்சிமை**
**பெருங்கல் நாடன் பேகனும்**” (புறம். 158: 10 - 12).

மேற்கண்ட கருத்துக்கு அரண் செய்கிறது. மலைகளில் உறையும் தெய்வங்கள் பெரும்பான்மையும் “அணங்கு” (நற். 165: 3) “வரையர மகளிர்” (கலி. 52: 10) என்னும் பெயர்களால் அழைக்கப் பெற்றமையை அறிய முடிகிறது. வரையர மகளிர்கள் அளவற்ற சக்தி உடையவர்கள் என்றும், அவர்கள் மலையில் உறைபவர்கள் என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

பண்டைக்கால மக்கள் மலைப்பகுதியில் பயணம் செல்லுவதும் அங்கு நீண்ட காலம் தங்கியிருப்பதும் துன்பம் வருவதற்கான வழிகள் என்றும் நம்பினர். நன்னன் சேய் நன்னனைச் சந்தித்துக் கலை நிகழ்த்திப் பரிசு பெற்ற கூத்தன் ஒருவன் வழியில் எதிர்பட்ட

கூத்தனை நன்னன் சேய் நன்னனிடம் பரிசில் பெறுவதற்காக ஆற்றுப்படுத்தும்போது சுனைகளில் மலர்ந்திருக்கும் குவளை மலர்கள் மலைக் குகைகள் ஆகியவை வரையர மகளிர் உலாவும் இடங்கள் என்றும் அவர்களுக்குப் பிடித்தமான இடங்கள் என்றும் குறிப்பிட்டு அவ்விடங்களில் நீண்ட நாட்கள் தங்கியிருக்கலாகாது என்று கூறுவதைக் காணலாம்.

"**அணையது அன்று அவன் மலைமிசை நாடே**
**நிரையிதழ்க் குவளை கடிவீ தொடினும்**
**வரையர மகளிர் இருக்கை காணினும்**
**உயிர்செல வெம்பிப் பனித்தலும் உரியர்**
**பல நாள் நில்லாது நிலநாடு படர்மின்**" (மலைபடு. 188 - 192).

வரையர மகளிர்கள் அடர்ந்த மலைகளில் விளையாடி மகிழும் தன்மையர்கள் என்றும் அவர்கள் விளையாடுகின்ற காரணத்தால் மலைகளில் மலர்ந்துள்ள மலர்கள் எல்லாம் சிதறிக் கீழே விழுந்து கிடக்கும் என்றும் குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகிறது.

"**வரையர மகளிரின் சாஅய் விழைதக**
**விண்பொகும் சென்னிக் கிளைஇய காந்தள்**
**தண்கமழ் அலரிதாஅல் நன்பல**
**வம்புவிரி களத்தின் கவின்பெறப் பொலிந்த**
**குன்று கெழு நாடன்**" (குறிஞ். 195 - 199).

வரையர மகளிர்கள் அழகுமிக்கவர்கள் என்றும் கண்களுக்குப் புலப்படாத தோற்றத்தை உடையவர்கள் என்றும் இவர்களை இலக்கியங்கள் சிறப்பிக்கின்றன.

“**வரையர மகளிர் புரையும் சாயலன்**

**………………. தொடாஅ**

**நீர் இழி மங்கில் கல்லளை கவந்தஅவ்**

**வரையா மகளிரின் அரியன்**”

என்ற அடிகளின் மூலம் அறியலாம். மேற்குறித்த இலக்கியச் சான்றுகளால் வரையர மகளிர் மலைகளில் வாழ்ந்ததையும் அவர்கள் மிக்க வலிமை பெற்றுத் திகழ்ந்த காரணத்தால் அவர்கள் மேல் அச்சம் கொண்டு வணங்க முற்பட்டனர் என்பதையும் அறியலாம்.

“பண்டைக்கால மக்கள் மலைகளில் பல்வேறு தெய்வங்கள் வாழ்வதாக நம்பினர் அவர்கள் எல்லாத் தெய்வங்களையும் அணங்கு”[15] என்று நம்பினர்.

மலையில் உறையும் அணங்குகள் வருத்தும் தன்மையவை என்னும் சிந்தனை குறிஞ்சித்திணைப் பாடல்களில் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இரவுக்குறியில் தலைவியைச் சந்திக்க வரும் தலைவன் அணங்குகளால் துன்புற நேரும் என்பதை அறிந்த தலைவி அவனை இரவுப் பொழுதில் வர வேண்டாம் பகல் பொழுதில் வருக என்று குறி மறுத்து மொழிவதனை,

“**மணம் கமழ் நாற்றத்த மலைநின்று பலி பெறூஉம்**

**அணங்கு என அஞ்சுவர் சிறுகுடியோரே**” (கலி. 52: 9 - 10)

என்று கலித்தொகை சுட்டுகிறது.

அணங்கு மலையில் உறைவதைச் சங்கப் பாடல்கள் பலவும் எடுத்துக் கூறியுள்ளன. அணங்கிற்கு மக்கள் அனைவரும் பயந்து

இருந்தனர். "அணங்குடைச் சிலம்பில்" (அகம். 198: 14), "அணங்குடை நெடுங்கோட்டு" (அகம். 272: 3), "சூருடைச் சிலம்பில்" (அகம். 158: 8), "அணங்குடை நெடுங்கோட்டளையகம்" (புறம்.52: 1), "அணங்குடை வரைப்பகம்" (அகம். 266: 19), "அணங்குடைச் சாரல்" (பெரும். 494) என்னும் சான்றுகள் இதனை வலியுறுத்துவதாகும்.

## வழிபாட்டு முறை

மலையைப் பற்றுக் கோடாகக் கொண்டு வாழ்ந்த மக்கள் மலையில் கிடைத்த பொருட்களைக் கொண்டு வாழ்ந்ததோடு மட்டுமல்லாமல் தங்களுக்குக் காவல் நிற்பது அம்மலையே என்று நம்பியதன் காரணமாகப் பல்வேறு பொருட்களைப் படைத்து வழிபடுவதைத் தம் வழக்கமாகக் கொண்டிருந்தமையினை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. மலை தெய்வத்தைத் தாங்கி நிற்பது அதனை வணங்க வேண்டும் என்னும் எண்ணம் கொண்ட மக்கள் தம் சுற்றத்தாருடன் சேர்ந்து வணங்கியதனை,

> **"அணங்கொடு நின்றது மலை வான்கொள்கெனக்**
> **கடவுள் செங்கு வரை வேண்மார் வேட்டு எழுந்து**
> **கிளையொடு மகிழும் குன்ற நாடன்"** (நற். 165: 3 - 5)

என்னும் நற்றிணைப் பாடலடிகள் வலியுறுத்துகின்றன.

மலையில் வாழுகின்ற மக்கள் மலையுறை அணங்குகளுக்குத் தேன், மாங்கனி, பலாச்சுளை, தேன் கொண்டு செய்யப்பட்ட முதிர்ந்த 'கள்' ஆகியவற்றைப் படைத்துத் தாமும் உண்டு களித்துக் குரவையாடிய பான்மையினை அறிய முடிகின்றது. மலைவாழ்

தெய்வங்களை வணங்குவதன் காரணமாக அச்சத்தில் இருந்து விடுபட இயலும் என்னும் நம்பிக்கை கொண்டதும் தம் வளமான வாழ்விற்கு அத்தெய்வங்களே காரணமாகும் என்னும் நம்பிக்கை நிலவியமையும் காரணமாகலாம்.

**"தேந்தேர் சுவைய திரளரை மாஅத்து**
**கோடைக்கு ஊழ்த்த கமழ் நறுந்தீம்கனி**
**பயிர்ப்புறப் பலவின் எதிர்ச்சுனை அளைகு**
**இறாலொடு கலந்த வண்டுமூசு அரியல்**
**நெடுங்கண் கடமை பழூநி கடுந்திறல்,**
**பாம்புக் கடுப்பன்ன தோப்பி வான்கோட்டுக்**
**கடவுள் ஓங்கி வரைக்கு ஒச்சி குறவ**
**முறித்தழை மகளிர் மடுப்ப மாந்தி**
**அடுக்கல் ஏனல இரும்புனம் மறுத்துழி**" (அகம். 348: 2 - 10)
**"வரை உறை தெய்வம் உவப்ப உவந்து**
**குரவை தழீஇ யாமாட குரவையுள்**
**கொண்டு நிலை பாடிக்காண்"** (கலி. 39: 27 - 29)

மேற்கண்ட செய்திகளால் மலையில் தெய்வம் உறைவதாக நம்பியமையினையும் அவற்றை மகிழ்விப்பதற்காகப் படையல் இட்டுக் குரவையாடியமையினையும் அறியமுடிகின்றது.

## காடுகளில் வாழும் தெய்வங்கள்

மலையிடங்கள் மலைச் சாரல்கள் மட்டுமல்லாமல் காடுகளில் தெய்வங்கள் வாழ்கின்றன என்னும் நம்பிக்கை பண்டைக் காலத்தில் நிலவியது. பெண் தெய்வங்களே வாழ்ந்துள்ளன. பதிற்றுப்பத்து,

பொருநராற்றுப்படை இலக்கியக்கியங்களில் காடுறை (காட்டிலுள்ள) தெய்வங்களை வணங்கியமைக்கான குறிப்புகள் காணப்படுகின்றன. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பாடும்போது பெருங்காடுகளில் கோயில்கள் இருந்தன என்றும் காடுகள் அல்லாத பிற இடங்களில் கள்வர்களும் கடவுளர்களும் இருந்ததாகக் குறிப்பிடுவதால் ஊருக்கு வெளியில் உள்ள காடுகளில் தெய்வங்கள் உறைந்ததையும் அதனை மக்கள் வழிபட்டுப் போற்றியமையினையும் அறியலாம். ஆற்றுப்படை இலக்கியங்களில் மன்னர்களைச் சந்தித்துக் கலைகள் நிகழ்த்திப் பரிசில்பெறச் செல்லும் கலைஞர்கள் ஆங்கு உரையும் தெய்வங்களுக்கு வழிபாடாற்றியமைக்கு,

**“பெடைமயி லுருவின் பெருந்தகு பாடினி**
**பாடின பாணிக்கு ஏற்ப நாள்தோறும்**
**களிறு வழங்கு அதிர கானத்தல்கி**
**இலையில மராஅத்த எவ்வந்தாங்கி**
**வலைவலந் தன்ன மெல்நிழல் மருங்கில்**
**காடுறை கடவுள் கடன்கழிப்பிய பின்றை**” (பொருந. 47 - 52)

என்னும் அடிகள் சான்றாகின்றன. இவ்வடிகளில் பாலை வழியில் வள்ளலைக் காணச்செல்லும் பாணனும் பாடினியும் இலைகளற்ற மரத்தின்கீழ் உறையும் காடுறை தெய்வத்திற்குத் தாளம் பொருந்த இசைப்பாடல் பாடி வழிபட்டமை கூறப்படுகிறது. தங்களால் இயன்ற பொருட்களைப் படைத்து வழிபட்டமையினைக் கூறுகிறது.

## சோலைகள் மற்றும் மரங்களில் வாழும் தெய்வங்கள்

பூக்கள் நிறைந்த சோலைகள் மரங்கள் ஆகியவற்றிலும் தெய்வம் உறைவதாக எண்ணி மக்கள் வழிபட்டனர். திருமுருகாற்றுப்படை காடு, சோலை, அழகான இடங்கள் ஆகியவற்றில் முருகப்பெருமான் உறைந்ததைக் குறிப்பிடுவதனால் சோலை மரங்கள் ஆகியவையும் வழிபாட்டிடங்களாக விளங்கியமையினை அறியலாம். மரங்களின் அடியில் தெய்வங்கள் உறைவதாக எண்ணிய நம்பிக்கை பழங்காலத்தில் நிலவியது என்பதற்கு மலைபடுகடாம் "நல் அரை மராஅத்த கடவுள்" (மலை. 395) என்னும் சான்றால் விளக்குகிறது. மர வழிபாடு தொன்மையானது, உலகளாவிய நிலையில் மர வழிபாடு சிறந்து விளங்குகிறது என்பதனை "இயற்கையை வழிபடத் தொடங்கிய மனிதன் மரங்களையும் சக்தி வாய்ந்தவையாக எண்ணி வழிபடத் தொடங்கினான். அதன் தொடர்ச்சியே மர வழிபாடாக நிலை பெற்றிருக்கிறது. தொடக்கக் காலங்களில் மரங்களின் அடியிலும் மரங்கள் அடர்ந்த காடுகளிலும் வழிபாடுகள் நிகழ்த்தப்பெற்றன"[16] என்னும் சிந்தனையை பதிவு செய்கிறது. "நன்மை தரும் மரங்கள் மீது மக்கள் கொண்ட நன்றியுணர்வும் நச்சு மரங்களைக் கண்டு அஞ்சியதால் ஏற்பட்ட அச்ச உணர்வும் தழைத்துப் பூத்துக் காய்த்துக் கனி நல்கும் மரங்களைக் கண்ட பொழுது அவர்கட்கு ஏற்பட்ட வியப்புணர்வும் இது போன்ற வளத்தை இவை நமக்கு நல்கும் என்ற நம்பிக்கை உணர்வும் மரங்கள் இடம் விட்டு இடம்பெயரும் மனிதனுக்கு உணவளிக்கும் தாயாகவும் ஓய்வு கொள்ளும்

உறைவிடமாகவும் இருந்த நிலையும் மர வழிபாட்டின் அடிப்படைக் காரணங்களாகும்."[17]

"மரங்களை வழிபடும் வழக்கம், கிரீஸ், பிரான்ஸ், போலந்து முதலிய நாடுகளில் நிலவியிருந்ததென அறிஞர்கள் கூறுகின்றனர். ஆப்பிரிக்காவிலும், அமெரிக்காவிலும் மக்களிடையே மரங்களை வழிபடும் நிலை இன்னும் நிலவுகின்றது. இந்து சமயத்தினரால் வழிபாட்டிற்கு உரியதாகக் கொள்ளப்படும் மரங்களில் ஒன்றான அரசமரம் சிந்துவெளி முத்திரைகளில் காணப்படுகிறது."[18]

"பண்டை நாட்களில் மரவழிபாடு மிக உன்னத நிலையில் இருந்திருக்கிறது. மரத்துக்குத் தெய்வத் தன்மையைத் தந்து இன்ன மரத்தில் இன்ன தெய்வம் உறைகிறது என்று நம்பி வழிபட்டனர். அத்தகைய மரங்களை வெட்டுவது தீது என்று நம்பினர். சில மரங்கள் சில மக்கள் குழுக்களின் அடையாளச் சின்னங்களாக அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு மரமும் ஒரு குழுவின் வழிபடும் தெய்வமாகவும் அடையாளச் சின்னமாகவும் மதிக்கப்பட்டன"[19] என்னும் சிந்தனைகள் மரவழிபாட்டின் தொன்மையினை உணர்த்தும்.

சங்க காலத் தமிழகத்தில் "பனை" (நற். 300: 3 - 4), "வேம்பு" (அகம். 309: 4), "ஆலமரம்" (குறுந். 15: 1 - 2), "மாமரம்" (குறுந். 87: 1 – 2), "கடம்பு" (பதிற். 88: 6), "வேங்கை" (நற். 216: 6 - 7), "ஓமை" (அகம். 297: 11), "மருது" (பெரும். 232), "கள்ளி" (புறம். 260: 5) முதலான மரங்கள் வழிபாட்டுக்குரியனவாய் இருந்தமையை அறிய முடிகிறது. மரங்களில் உறையும் தெய்வங்கள் அச்சம் தருபவை என்னும்

நம்பிக்கை நிலவியது. "மரத்தில் உறையும் தெய்வம் முதிர் தன்மை உடையது என்றும் அச்சம் தரத்தக்கது என்றும் குறுந்தொகை குறிப்பிடுகிறது" (குறுந். 87: 1).

மரங்களில் உறையும் தெய்வங்களுக்கு வழிபாடாற்றுவதை மக்கள் தங்களின் வழக்கமாகக் கொண்டனர். இதனைக் கலித்தொகை ஏறுதழுவுதலுக்கு உவமையாக எடுத்தாள்கிறது. இதனை,

**"ஏறுதம் கோலம்செய் மருப்பினால் தோண்டிய**
**ஞாலம் கொண்டு எழூஉம் மருந்தின் வாய்வழீஇ**
**மாலைபோல் தூங்கும் சினை"** (கலி. 106)

என்னும் அடிகளால் அறியலாம். மரங்கள் தெய்வத் தன்மை வாய்ந்தவை என்று மக்கள் நம்புகின்றனர். மரங்களில் உறையும் தெய்வங்கள் வலிமையானவை என்றும் அத்தெய்வங்களை மகிழ்விப்பதற்காக மக்கள் மாலைகளைத் தொங்கவிட்டு வழிபட்டனர் என்றும் அவற்றுள் ஆல், கடம்பு ஆகிய மரங்கள் வழிபாட்டிற்கு உரியனவாக இருந்தன என்னும் சிந்தனைகளைக் கலித்தொகை விளக்குகிறது. மரங்களின் அடியில் வாழுகின்ற தெய்வங்களுக்கு உணவு படைத்தல் (பலி) உயிர்களைப் பலியிடல் ஆகிய வழக்கங்களும் நிலவின என்பதை அறிய முடிகிறது. மக்கள் மரங்களின் அடியில் உறையும் தெய்வங்களுக்கு உணவு, பலிச்சோறு இடுவதையும் அதனைக் காக்கைகள் தம் இனத்தோடு சேர்ந்து உண்டமையினையும் நற்றிணை குறிப்பிடுகிறது,

**“நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து**
**உடுபலி அருந்திய தொகுவிரற் காக்கை**
**புன்கண் அந்தி கிளைவயின் செறிய**” (நற். 343: 4 - 6)

தெய்வத்தை மகிழ்விக்க விலங்குகளை, குறிப்பாக ஆட்டினை அறுத்துப் பலி கொடுத்தலும் இரத்தம் கலந்த சோற்றைப் பலி உணவாக இட்டதையும் வெறியாடல் முதலான நிகழ்வுகள் உணர்த்தும். அவ்வாறே மரத்தில் உறையும் தெய்வங்களுக்கும் ஆடு அறுத்து இரத்தம் கலந்த சோற்றைப் பலியாக இட்ட நிகழ்வினை அகநானூறு விளக்குகிறது.

**“தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்**
**கொழுப்புஆ எறிந்து குருதி தூஉய்**
**புலவுப் புழுக்கு உண்ட வான்கண் அகலறை**” (அகம்.309:4 - 6)

## நீர் நிலைகளில் வாழும் தெய்வம்

மலை, மரம், சோலை ஆகியன வழிபாட்டிற்கு உரியதாக இருந்த பான்மையில் பண்டைத் தமிழர்களால் நீரும் வழிபாட்டிற்கு உரியதாக இருந்தது. வள்ளுவர் நீரின் முக்கியத்துவத்தை “நீரின்றி அமையாது உலகு” (குறள். 20) என்று குறிப்பிடுகிறார். அவ்வாறே நற்றிணையும் “நீரின்றமையா உலகம் போல” (நற். 1: 6) என்று நீரின் முக்கியத்துவத்தைப் பதிவு செய்கிறது. சங்க காலத்தில் நீர்த்துறை, குளம், ஆறு, சுனை, ஆற்றிடைக்குறை, உண் நீர்த்துறை முதலான இடங்களும் கடல், கழிமுகம், ஆறு கடலுடன் கலக்கும் இடங்கள் முதலானவும் வழிபாட்டிற்கு உரியதாக விளங்கின. நீர்நிலைகளில்

இருந்த தெய்வமும் “உண் துறை அணங்கியவள்” (ஐங். 28: 1, 53: 1) என்றே அழைக்கப்பட்டமையினை அறிய முடிகிறது.

நீரை அள்ளிச் சூளுரைப்பதும் தெய்வத்தைச் சுட்டி ஆணை இடுவதும் நீர் சார்ந்து நிகழ்ந்தமையைச் சங்க இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. கழிமுகத்தில் தெய்வம் உறைந்தமையினையும் அத்தெய்வத்தை முன்வைத்துச் சூளுரைத்த தன்மையினையும் அகநானூறு தெளிவுபடுத்துகிறது.

“**கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கி**
**கடுஞ்சூழ் தருகுவன் நினக்கே**” (அகம். 110: 4 - 5)

இப்பாடலடிகள் தோழி செவிலிக்கு ஆணையிட்டுக் கூறும் பொருளில் அமைகிறது. ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் என்னும் முந்நீரும் கலந்திருக்கும் கடல் பரப்பில் வலிமை பொருந்திய கடல் தெய்வம் நிலைபெற்றிருப்பதாகவும் அதனை முன் வைத்து ஆணையிடும் வழக்கமும் நிலவியது.

“**பெருங்கடற் தெய்வம் நீர்நோக்கித் தெளித்தென**
**திருந்திழை மென்றோள் மறைந்தவன்**” (கலி. 131: 1 - 2)

உவா நாட்களில் கடலுக்கு மீன் பிடிக்கச் செல்லாத பரதவர்கள் கடல் மண்ணில் சுறாக் கொம்பை நட்டு மலர்கள் சூட்டி அக்கொம்பில் கடல் தெய்வத்தை இருத்தி வழிபட்டமைக்குப் பட்டினப்பாலை சான்றாகிறது. இதனை,

“**சினைச் சுறவின் கோடு நட்டு**
**மனைச் சேர்த்திய வல்லணங்கினான்**” (பட்டினப். 86 - 87)

என்னும் அடிகள் உனர்த்தும் குளிர்ச்சி மிக்க நீர்த்துறையில் தெய்வம் இருந்ததாகவும், அதனை வழிபடும் வழக்கம் நிலவியதாகவும் அகநானூறு குறிப்பிடுகிறது.

"**அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி**
**யாயும் ஆயமொடு அலரும்**" (அகம். 240: 8 - 9)

நெய்தல் நிலத்தில் வாழ்ந்த மக்கள் கடல்படு பொருட்களான முத்து வலம்புரிச்சங்கு முதலான பொருட்களைக் கொண்டு கடல் தெய்வத்தை வழிபட்ட பான்மையினை அறிய முடிகிறது.

"**வினை கவில் யானை விறற்போர்ப் பாண்டியன்**
**புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்றுறை**
**அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து**
**தழை அணிப் பொலிந்த கோடேந்து அல்குல்**
**பழையர் மகளிர் பனித்துறை பரவ**" (அகம். 201: 3 - 7)

என்னும் பாடலடிகளால் அறியலாம். நெய்தல் நில மலர்களான ஞாழல், நெய்தல் ஆகியன கொண்டு கடலில் வாழும் தெய்வம் தன்னை அலங்கரித்துக் கொண்டதாக,

**"……….. ஞாழல்**
**வண்டுபடத் ததைந்த கண்ணி நெய்தல்**
**தண்ணறும் பைந்தார் துயில்வர அந்தி**
**கடல்கெழு செல்வி கரைநின் றாங்கு**" (அகம். 270: 9 - 12)

என்னும் அகப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன. உயிர்களைப் பலியிட்டு வணங்கும் வழக்கம் பெருங்கடற்கும் வழக்கில் இருந்தது என்பதை அகநானூறு பதிவு செய்கிறது.

**“கள்ளும் கண்ணியும் கையுறையாக**

**நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅல்**

**நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி**” (அகம்.156:13 - 18)

என்னும் அடிகள் உணர்த்தும்.

## சூர் (வருத்தும் தெய்வம்)

சங்க இலக்கியங்கள் வருத்தும் தெய்வத்தைச் ‘சூர்’ என்னும் சொல்லால் ஆள்வதைக் காண முடிகிறது. குறிப்பாக அணங்கு என்னும் சொல்லும் பல இடங்களில் இப்பொருளிலேயே ஆளப்பட்டிருக்கிறது. மு. சண்முகம்பிள்ளை. “மலை, மரம், நீர் ஆகியவற்றில் உறையும் தெய்வங்களில் பெரும்பாலனவும் வருத்தும் தெய்வங்களேயாம். அச்சமும், வருத்தமும் விளைவிக்கும் காரணம் பற்றி இத்தெய்வங்களை அணங்கு என்பது தெய்வத்தைக் குறிக்கும் பொதுப் பெயராகவும் வழங்கப்பட்டிருக்கிறது”[20] என்பர்.

சூர் வருத்தும் தன்மையது. மலையை இடமாகக் கொண்டு மலைவழிச் செல்வாரையும் தனக்குரிய பொருட்களைத் தொடுவாரையும் வருத்தும் தன்மைமிக்கது என்பதைக் குறிஞ்சிப்பாட்டு தெரிவிக்கின்றது. தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கும்போது,

**“உருவும் சூரும் இரைதேர் அரவமும்**

**ஒருங்கிருங் குட்டத்து அருஞ்சுழி வழங்கும்**

**கொடுந்தாள் முதலையும் இடங்கரும் கராமும்**

**நூழிலும் இழுக்கும் ஊழடி முட்டமும்**

**பழுவும் பாந்தளும் உளப்படப் பிறவும்**

**வழுவின் வழாஅ விழுமடம் அவர்**

**சூழுமலை விடரகம் உடைய வால் எனவே**" (குறிஞ்சி.255-261)

என்றவாறாகச் செவிலியிடம் பேசும் பகுதிகள் இதனை அறிவிக்கின்றன. உடல் மெலிவு கண்டு தாயானவள் தலைவிக்கு வெறியாட்டு நிகழ்த்த எண்ணுகிறாள். அதனை அறிந்த தோழி தலைவியின் காதலைச் செவிலியிடம் வெளிப்படுத்துகிறாள். தலைவன் தலைவியைச் சந்திக்க வரும் இயற்கை வழி துன்பம் நிறைந்தது என்பதை விளக்கும்போது சூரும் துன்புறுத்தும் கூறுகளுள் ஒன்றென்பதைப் பதிவு செய்கிறாள். சூர் கொல்லும் தன்மை மிக்கது என்னும் சிந்தனையும் நிலவியது என்பதை உரையாசிரியர் நச்சினார்க்கினியர் பதிவு செய்கிறார்.

"இவை (சூர்) பிறரைக் கொன்று ஒறுக்கும் இன்னாச் செயலில் நின்று நீங்கா இயல்புடையனவாம். இங்கே சூரும் என்பதற்கு கொடுந்தெய்வமும் என்று விளக்கம் தருகிறார் நச்சினார்க்கினியர்". சூர் என்னும் அச்சுறுத்தும் தெய்வங்கள் மலைவழிச் செல்வாரையும் தாம் உறையும் தாவரங்களைத் தீண்டுவாரையும் தண்டிக்கும் இயல்புடையவை என்பதை அறிந்து மலை ஆடுகள் அவற்றைத் தீண்டாது என்று நற்றிணை குறிப்பிடுகிறது.

"**வாடல கொல்லோ தாமே – அவன் மலைப்**

**போருடை வருடையும் பாயா**

**சூருடை அடுக்கத் கொயற்கு அருந்தழையே**" (நற். 359: 7 - 9)

சங்க இலக்கியங்களில் சூரர மகளிர் என்னும் பெண்களைக் காண முடிகிறது. இவர்கள் மலைகள் காடுகளில் வாழ்பவர்கள் என்று அச்ச மூட்டும் தன்மையர்கள் என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. சூரர மகளிர் அழகிய தோற்றம் உடையவர்கள் கண்ணுக்குப் புலப்படா இயல்புடையவர்கள் என்னும் சிந்தனைகளை இலக்கியங்களால் அறிய முடிகிறது. "கொடுமை செய்யும் தெய்வ மகளிர் துர்மகள் எனப்படுவர்" என்று சூரர மகளிர் என்பதற்கு மு. சண்முகம்பிள்ளை விளக்கம் தருகிறார். தலைவியை இயற்கைப் புணர்ச்சியில் சந்தித்த தலைவன் அவனைப் பிரியமாட்டேன் என்று மலையில் இழியும் அருவியில் உறையும் சூரர மகளிரிடம் சத்தியம் (சூள்) செய்து கொடுத்தல் உண்டு என்பதைக் குறுந்தொகை விளக்குகிறது.

**"எக்கர் நண்ணிய எம்மூர் வியன்றுறை**
**நேரிறை முன்கை பற்றி**
**சூரர மகளிரொடு உற்ற றுளே"** (குறுந். 53: 5 - 7)

சூரர மகளிர் மலைகளில் மட்டுமல்லாமல் அருவிநீர் சுனை ஆகியவற்றிலும் உறைந்ததாக அறிய முடிகிறது. அகநானூற்றுப் பாடல் ஒன்று மலர்கள் நிறைந்த சுனையில் உறைபவள் சூர் மகள் என்று குறிப்பிடப்படுகிறது.

**"ஆஅய் நல்நாட்டு அணங்குடைச் சிலம்பில்**
**கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்**
**ஏர்மலர் நிறைசுனை உறையும்**
**சூர்மகள் மாதோ"** (அகம். 198: 14 - 17)

சுனைகளில் மலரும் குவளை மலரையும், மலையில் மலரும் செங்காந்தள் மலரையும் கலந்து அணிந்து கொண்டு மலைச் சாரல்களில் ஆடுவார்கள் என்றும் அவர்களுக்கு அருவியின் ஒலியே பின்னணி இசையாகக் கொண்டு விளங்கும் என்றும் நற்றிணைப் பாடல் குறிப்பிடுகின்றது.

**“கடவுட் கற்சுனை அடையிறந்து அவிழ்ந்த**
**பறியாக் குவளை மலரொடு காந்தட்**
**குருதி ஒண்பூ உருகெழக் கூட்டி**
**பெருவரை அடுக்கம் பொற்பச் சூர்மகள்**
**அருவி இன்னியத் தாடும் நாடன்”** (நற். 34: 1 - 5)

சூரர மகளிரின் செயல்பாடுகளைப் பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றான திருமுருகாற்றுப்படை விரிவாகக் குறிப்பிடுகிறது.

**“மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்**
**கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடி**
**கணைக்கால் வாங்கிய நுசுப்பின் பணைத்தோள்**
**கோபத் தன்ன தோயாப் பூந்துகில்**
**பல்காசு நிரைத்த சில்கா சல்குல்**
**கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பின்**
**நாவலொடு பெயரிய பொலம்புனை விரிழைச்**
**சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனி**
**…………………………….**
**சூரர மகளி ராடுஞ் சோலை”** (திருமுருகு. 12 - 41)

சூரர மகளிர்கள் மலைப்பகுதிகளில் ஒலி எழுமாறு ஆடும் தன்மை உடையவர்கள். ஒருவரால் கைக்கொண்டு அழகுபடுத்தப்படாத

இயற்கையான அழகும் உடையவர்கள் இவர்கள், செம்மை நிறமான துகிலும் நாவலம் (சம்பூநதம்) என்னும் உயரிய பொன்னாலான அணிகலன்களும் அணிந்தவர்கள், இடையில் மேகலை என்னும் அணிகலன் அணிந்தவர்கள், சிறிய அடிகளையும் திரண்ட கணுக் கால்களையும் வளைந்து ஒடிவது போன்ற மெல்லிய இடையினையும் மூங்கில் போன்ற பணைத்த தோளினையும் உடைய இவர்களின் மேனி ஒளி வானுலகையும் கடந்து செல்லத்தக்கது என்றவாறாக இவர்களின் அழகு பதிவு பெற்றுள்ளது. "சூரர மகளிர் ஆரவாரத் தன்மை மிக்கவர்கள் என்பதைப்" (புறம். 259: 5 - 6) புறநானூறும் பதிவு செய்கிறது. மேற்கண்ட கருத்துக்களால் சூர் என்பது மலை, மலையிடங்கள், அருவி, சுனை ஆகிய இடங்களில் வாழும் தன்மையது என்பதையும் அச்சுறுத்தும் தன்மையது என்பதையும் அறிய முடிகிறது.

## கோள் வழிபாடு

பண்டைத் தமிழர்கள் இயற்கையைத் தெய்வமாக வணங்கிய தோடல்லாமல், வானில் வலம் வரும் இருசுடர்க் கோள்களான சூரியன், நிலவு முதலான கோள்களையும் வழிபாட்டிற்குரியதாக எண்ணி வழிபட்டமைக்குச் சங்க இலக்கியங்களில் சான்றுகள் காணப்படுகின்றன.

"சூரிய சந்திர (ஞாயிறு திங்கள்) வழிபாட்டு முறை ஒளியை வணங்குதல் என்னும் அடிப்படையில் வழிபாடாக நிலை பெற்றிருக்கிறது. ஞாயிறு திங்கள் ஆகியன இயற்கையின் கூறாகவே

பண்டைய மக்களால் நோக்கப்பட்டு வந்துள்ளமையினை இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. க. காந்தி”[21] பழந்தமிழரின் வழிபாடு அச்சத்தை அடிப்படையாகக் கொண்டதாகவே காட்சி தருகின்றது. இயற்கைக் கூறுகளான மலை, ஞாயிறு, கடல், நெருப்பு ஆகியவற்றை வணங்கிய நிலையைத் தெரிவிக்கும். இயற்கையின் பாதிப்பிற்குட்பட்ட மனிதன் அவற்றின் தாக்குதல்களிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய கடவுள் கொள்கையும் வழிபாடும் தோன்றின என்று வழிபாட்டின் தோற்றத்திற்கான காரணங்களை குறிப்பிடுவர். கலைக்களஞ்சியம் மனிதன் மனிதனாக வாழ்வதற்கு உதவியது வழிபாடு என்னும் பான்மையில் “ஆதியில் விலங்குகள்போல் வாழ்ந்து வந்த மக்கள் மனிதப் பண்புடன் வாழ்வதற்கு வழிகாட்டியாக விளங்கியது தெய்வ நம்பிக்கையாகும். இந்நம்பிக்கை காரணமாக இயற்கைப் பொருள்களான ஞாயிறு, திங்கள், மின்னல், இடி, புயல், மழை, வெள்ளப்பெருக்குப் போன்றவற்றில் கடவுளைக் கண்டு வணங்கினர். இவ்வாறு வழிபடப்பட்ட இயற்கை நாளடைவில் அறிவு வளர வளர தந்தையாகவும் தாயாகவும் நண்பனாகவும் அவர்களுக்கு உதவி செய்கின்ற கடவுளாகவும் மாறிற்று. இதனையே மேநாட்டினர் கடவுள் கொள்கை என்பர்”[22] என்கிறது.

முதலில் தோன்றிய வழிபாடு ஒளி வழிபாடாக இருத்தல் வேண்டும் எனக் கூறப்படுகிறது. “உலகம் தழுவிய ஒளி என்பதனுள் இயற்கை யொளியும் உண்டு செயற்கையொளியும் உண்டு. சூரியன், சந்திரன், விண்மீன்கள் எல்லாம் இயற்கை ஒளி”[23] என்பர் செ.

வைத்தியலிங்கன். ஒளி வழிபாட்டில் ஞாயிறு வழிபாடும் திங்கள் வழிபாடும் தமிழரின் வழிபாட்டு முறையில் முக்கியத்துவம் உடையனவாகத் திகழ்கின்றன.

பண்டைய தமிழ்ப் புலவர்கள் ஞாயிறு, திங்கள் என்னும் இரு கோள்கள், அவற்றின் தன்மைகள் செயல்பாடுகள் ஆகியவற்றைத் தம் படைப்புகளில் விரிவாகக் கையாண்டுள்ளனர் எனலாம். உலகிற்கு ஒளி தரும் ஞாயிறும் திங்களும் "இருசுடர்" (புறம். 65: 7) என்னும் சொல்லால் குறிப்பிடப்பட்டன. "இவ்விருகோள்களும் உலகின் இருளைப் போக்கி உலகைக் காத்து வருவன என்னும் சிந்தனை குறிப்பிடப்பட்டுள்ளது" (புறம். 56: 21 - 25).

"நாடாளும் மன்னர்கள் தம் திண்ணிய குணத்திற்குத் திங்களும் தெறும் குணத்திற்கு ஞாயிறும் உவமையாகக் கூறப்பட்டன" (புறம். 6: 27 - 29). "இரவையும் பகலையும் உருவாக்கித் தரும் தேவர்களாகத் திங்களும், ஞாயிறும் போற்றப்பட்டமையினை மதுரைக்காஞ்சி தெளிவுப்படுத்துகிறது" (மதுரைக். 7 - 8). ஞாயிறு, திங்கள் இரண்டன் தன்மையினையும் கூறுமாற்றான் இரண்டன் பெயர்களும் தண்டமிழ்ப் புலவர்களால் குணம் வெளிப்படும் பாங்கில் கூறப்படுகின்றன. "சூரியனுடைய ஒளியை வெயில் என்றும் திங்களின் ஒளியை நிலவு என்றும் வழங்குவர். வெம்மை தரும் வெயில் ஒளியைக் காலும் சூரியனோ செம்மை நிறமுடையவன். நிலவு காலும் சந்திரனோ வெண்மை நிறமுடையவன். இந்த இயற்கை வண்ணத்தை உட்கொண்டு செந் ஞாயிறு, வெண் திங்கள் என்று

குறிப்பிடுதல் மரபு. இவர் செய்யும் ஒளியின் வெம்மை, தண்மை கருதி வெங்கதிர் ஒண்சுடர், என்று ஞாயிற்றையும் தண்கதிர் தண்சுடர் என்று திங்களையும் சுட்டுதல் உண்டு”[24] என்று குறிப்பிடுகிறார் மு. சண்முகம்பிள்ளை.

இரு சுடர்களின் முக்கியத்துவம் கருதிச் சங்க இலக்கியப் புலவர்கள் அவற்றின் தன்மைகளை நாடாளும் தன்மைகளை நாடாளும் மன்னர்களுக்கு உவமையாக எடுத்தாண்டு தெறலுக்கும் அளிக்குமான விளக்கமாக ஞாயிற்றையும் திங்களையும் முன் வைக்கின்றனர். இதற்கு,

“**தண்கதிர் மதியம் போலவும்**
**ஒண்சுடர் ஞாயிறு போலவும்**
**மன்னிய பெரும நிலமிசை யானே**” (புறம். 6: 27 - 29).

“**செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்**
**வெண் திங்களும் வெயில் வேண்டினும்**
**வேண்டியது விளைக்கும் ஆற்றலை**” (புறம். 38: 7 - 9).

“**திங்கள் அன்ன வெண்குடை**
**ஒண் ஞாயிறு அன்னோன் புகழ் மாயலவே**” (புறம். 231: 5-6)

என்னும் புறப்பாக்களைச் சான்றாகக் கூறலாம். உலகைப் புரத்தலில் ஞாயிறும் திங்களும் தலையாய கோள்களாதலின் சிலப்பதிகாரமும் மங்கல வாழ்த்தில் ஞாயிறு திங்கள் ஆகிய இரு கோள்களையும் போற்றி வணங்குகிறது.

## ஞாயிறு வழிபாடு

ஞாயிறும் இயற்கைக் கதிர்களும் வலிமையானதாகக் கருதிக் காலந்தோறும் வழிபாட்டிற்குரியதாகக் கருதி வழிபட்டிருக்கிறது. பண்டைய சங்கப் புலவர்கள் ஞாயிறு என்னும் பெயரைக் கூறுவதினின்றும் அடைமொழி சேர்த்து வழங்குவதிலேயே அதிக இன்பம் கண்டனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. கலித்தொகையில் "இரு இடங்களில் மட்டும் ஞாயிறு" (கலி. 108: 13, 143: 22) என்னும் பெயர் பயின்று வருதலைக் காண முடிகிறது. ஞாயிறு அதன் தன்மை ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு புலவர்கள் பெயர் வழங்கி அழைத்தனர் என்பதற்குச் சங்கப் பாடல்களே சான்றாக விளங்குகின்றன. ஞாயிறு "மண்டிலம்" (பெரும். 442, புறம். 175: 9, நெடுநல். 161, புறம். 8: 6, பரி. 17: 32, அகம். 367: 1), "கதிர்ச் செல்வன்" (பட்டினப். 122), "கனலி" (புறம். 35: 6, 397: 24), "வெங்கதிர்" (அகம். 1: 10), "ஒண்கதிர்" (புறம். 160: 1), "சுடர்" (கலி. 100: 1, நற். 283: 7) என்னும் பெயர்களால் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

## ஞாயிற்றின் இயல்பு

ஞாயிறு தன் வலிமையான கதிர்க்கற்றைகளைக் கொண்டு உலகின் இருளை நீக்கும் தன்மையது. அதன் வெண்ணிறக் கதிர்களால் உலகில் இருள் அகன்று ஒளி பரவுகின்றது. கால மாற்றத்தால் வடக்கும் தெற்குமாக இடம் மாறுவதுபோல் தோற்றம் கொள்கிறது. மாலை வேளையில் நிலவு எழுதற்கு முன் மாலையில்

மேற்குத் திசையில் மறைகிறது என்று ஞாயிற்றின் இயல்புகளை கபிலர் புறநானூற்றுப் பாடல் ஒன்றில் எடுத்துக்காட்டுகிறார்,

"**கடந்தடு தானை சேர லாதனை**
**யாங்கணம் ஒத்தியோ வீங்கு செலல் மண்டிலம்**
**பொழுதென வரைதி புறக்கொடுத்து இறத்தி**
**மாறி வருதி மலை மறைந்து ஒளித்தி**
**அகலிரு விசும்பினானும்**
**பகல் விளங்குதியால் பல்கதிர் விரித்தே**" (புறம். 8: 5 - 10)

## செயல்கள்

ஞாயிறு காலை உதித்தது முதல் மாலையில் மறையும் வரையில் செயலாற்றும் தன்மையினைப் பாடல்கள் பலவும் பதிவு செய்துள்ளன. ஞாயிறு வலிமையான தன் கிரணங்களால் உலகைக் காக்கும் பொருட்டாக ஏழு குதிரைகள் பூட்டிய தேரில் உலகை வலம் வருவதாகவும் ஒற்றைச் சக்கரம் தாங்கிய தேரில் வலம் வருவதாகவும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

"**ஒரு கால் ஊர்திப் பருதிஅம் செல்வன்"** (அகம். 362: 2)

**"நிரை செலல் இவுளி கடைஇ**
**அகலிரு விசும்பில் பகல்செலச் சென்று**
**மழுசுடர் மண்டிலம் மாமலை மறைய**" (அகம். 363: 1 - 3)

என்னும் சான்றுகளால் அறியலாம். ஞாயிறு தன் இடைவிடாத செயல்பாடுகளால் உலகைக் காக்கிறது என்னும் எண்ணம் கொண்டவர்களாகச் சங்கத் தமிழர்கள் திகழ்ந்த காரணத்தால் உலகச்

செயல்களுடன் ஞாயிற்றின் இயக்கத்தை ஒப்புமைப்படுத்திக் கூறும் போக்கும் நிலவியது எனலாம். பட்டினப்பாலையில் துறைமுகக் காட்சியை விளக்கும் கடியலூர் உருத்திரங்கண்ணனார் காவிரிப்பூம்பட்டினத் துறைமுகம் பொருள்களை ஏற்றுமதி செய்தலும் இறக்குமதி செய்தலும் ஆகிய தொழில்கள் தொடர்ந்து நடைபெறுவதன் தன்மை ஞாயிறு ஓய்வின்றித் தன்பணியைச் செய்வதை ஒத்திருந்ததாகக் குறிப்பிடுகிறார்.

**“நல்லிறைவன் பொருள் காக்கும்**
**தொல்லிசைத் தொழில் மக்கள்**
**காய்சினத்த கதிர்ச் செல்வன்**
**தேர்பூண்ட மாஅபோல**
**வைகல் தொறும் அசைவின்றி**
**உல்கு செயக் குறைபடாது”** (பட்டினப். 120 - 125)

மேற்கண்ட சான்றுகள் பண்டைய மக்கள் ஞாயிற்றின் இயக்கம் பற்றி அறிந்திருந்ததையும் அவ்வறிதல் பெரு வழக்காக விளங்கியமையினையும் தெளிவுபடுத்துகிறது.

## ஞாயிற்றின் தோற்றம் மறைவு

ஞாயிறு கிழக்கில் உதித்து மேற்கில் மறைகிறது. பூமி மேற்கில் இருந்து கிழக்காகச் சுழல்கிறது. ஞாயிறு வான மண்டலத்தில் சுழல்கிறது. மேற்கில் இருந்து கிழக்காகச் சுழலும் பூமிக்கு ஞாயிறு தோன்றி மறையும் காட்சி பூமியின் சுழற்சியால் புலப்படுகிறது. ஆனால் பண்டைய மக்கள் ஞாயிறு கிழக்கில் உதித்து மேற்கில் மறைவதாகவும் கடலில் மறைவதாகவும் மலையில் மறைவதாகவும்

கருத்துக் கொண்டிருந்தனர் என்பதை இலக்கியங்கள் விளக்குகின்றன.

தமிழக நிலப்பரப்பு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நானில அமைப்புகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. இத்தகைய சூழலில் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் ஞாயிறு மலையின் முன்புறம் உதித்து மேற்கில் மலையில் மறைவதாகவும் முல்லை, மருத நில மக்கள் கிழக்கில் தோன்றி மேற்கில் மறைவதாகவும்; நெய்தல் நில மக்கள் குறிப்பாகத் தமிழகத்தின் தென்கோடியில் வாழ்ந்தவர்கள் கிழக்குக் கடலில் தோன்றி மேற்குக் கடலில் மறைவதாகவும் எண்ணினர். மலை, கடல் சூழலில் வாழ்ந்த மக்கள் ஞாயிறு கிழக்குக் கடலில் தோன்றி மேற்கே மலையில் மறைவதாக எண்ணம் கொண்டனர். இத்தகைய கருத்து நிலைகள் தமிழ் இலக்கியங்களில் நுட்பமான நிலையில் எடுத்தாளப்பட்டுள்ளன. அதிகமான போக்குவரத்து வசதிகள் இல்லாத காலச் சூழலில் வாழ்ந்த மக்களும் புலவர்களும் தாம் வாழ்ந்த வாழ்க்கைச் சூழலுக்கும் நிலவியல் சூழலுக்கும் ஏற்ற நிலையில் ஞாயிற்றின் தோற்றம் மறைவு ஆகியவற்றை இலக்கியங்களில் பதிவு செய்துள்ளனர் எனலாம். பதிற்றுப்பத்து உலகின் இருளை அகற்றித் தன் கதிர்களைப் பரப்பிக் கிழக்குக் கடலில் ஞாயிறு தோன்றியதாகக் குறிப்பிடுகிறது.

**“புல் இருள் வாடிய புலம்புசேண் அகல**
**பாயிருள் நீங்க பல்கதிர் பரப்பி**
**ஞாயிறு குணமுதல் தோன்றிய அங்கு”** (பதிற். 59: 4 - 6)

திருமுருகாற்றுப்படை உலகம் மகிழும் பொருட்டுக் கிழக்குக் கடலில் ஞாயிறு தோன்றியதாகக் குறிப்பிடுகிறது.

“**உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**

**பலர் புகழ் ஞாயிறு கடல்கண் டாங்கு**” (திருமுருகு. 1 - 2)

நாடாளும் மன்னர்களின் வீரமும் அவர்கள் மக்களின் துன்பங்களைப் போக்கும் தன்மையும் ஞாயிற்றின் உதயத்தோடு இணைத்துக் கூறப்பட்டமையை மலைபடுகடாம் தெளிவுபடுத்துகிறது. நன்னன் சேய் நன்னன் தன் பகையாகிய இருளை நீக்கி தன் நாட்டை நலம்பெறச் செய்தான் என்பதை இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார்,

“**பாயிருள் நீங்கப்பகல் செய்யா எழுதரு**

**ஞாயிறு அன்ன அவன் வசையில் சிறப்பும்**” (மலைபடு.84-85)

என்று பதிவு செய்கிறார்.

ஞாயிற்றின் கதிர்கள் வலிமையானவை என்றும் அதன்முன் ஒளியுள்ள பிற எல்லாம் மங்கித் தோன்றும் என்றும் ஞாயிற்றின் ஒளி உலகைத் தூய்மைப்படுத்தித் துன்பங்களில் இருந்து காக்கவல்லது என்பதனை மக்கள் தம் எண்ணமாகக் கொண்டிருந்தமையை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. ஞாயிறு மறைந்ததும் வானில் சுடர் ஒளி தரும் விண்மீன்களும் நிலவும் காலையில் ஞாயிற்றின் வலிமையான கதிர்களின் முன்பு ஒளி குன்றுவதைப் பதிற்றுப்பத்தும் கலித்தொகையும் பதிவு செய்துள்ளன. “பதிற்றுப்பத்து வானில் ஒளி தந்த விண்மீன்கள் எல்லாம் ஞாயிற்றின் கதிர்முன் தம் ஒளியை

இழந்தன என்று குறிப்பிடுகிறது" (பதிற். 64: 12 - 13). கலித்தொகை இரவுப் பொழுதில் வானில் ஒளி தந்த வெண்ணிலவு பொழுது விடிந்ததும் ஞாயிற்றின் கதிர்களுக்கு ஈடுகொடுக்க இயலாமல் தன் ஒளி குன்றி விளங்கியது" (கலி. 121: 17 - 18) எனக் குறிப்பிடுகிறது.

ஞாயிற்றின் ஒளி உலகிற்குப் புத்தொளி தருகிறது. ஞாயிற்றின் செங்கதிர்களைக் கண்ட பிறகே உலகம் விரிகிறது, ஞாயிற்றினாலேயே உலகம் வாழ்கிறது என்னும் சிந்தனை இலக்கியங்களின் வழி பெறப்படுகிறது. உலகில் உள்ள தாவரங்களும் உயிர்களும் ஞாயிற்றின் கதிர்களுக்கு ஈடுகொடுக்க இயலாமல் தன் ஒளி குன்றி விளங்கியது" (புறம். 155: 4 - 5). எனக் குறிப்பிடுகிறது.

ஞாயிற்றின் ஒளி உலகிற்குப் புத்தொளி தருகிறது. ஞாயிற்றின் செங்கதிர்களைக் கண்ட பிறகே உலகம் விரிகிறது. ஞாயிற்றினாலேயே உலகம் வாழ்கிறது என்னும் சிந்தனை இலக்கியங்களின் வழி பெறப்படுகிறது. உலகில் உள்ள தாவரங்களும் உயிர்களும் ஞாயிற்றின் வரவால் மகிழ்ச்சி கொள்கின்றன. இதனை,

**"பாழ்ஊர் நெருஞ்சிப் பசலை வான்பூ**
**ஏர்தரு சுடரின் எதிர்கொண் டாஅங்கு"** (புறம். 155: 4 - 5).

என்னும் சான்றால் அறியலாம். ஞாயிறே உலக இயக்கத்தின் அச்சாணி என்னும் சிந்தனையை அகநானூறு,

“**பயம்கெழு திருவின் பல்கதிர் ஞாயிறு**
**வயங்குதொழில் தரீஇயர் வலனேர்பு விளங்கி**
**மல்குகடல் தோன்றியாங்கு**” (அகம். 298: 1 - 3)

என்னும் அடிகளால் குறிப்பிடுகிறது. “காலை உதித்து நண்பகல் வேளையில் தன் வெம்மையான கதிர்களால் உலகைச் சுடும் ஞாயிற்றின் கதிர்கள் சினம் கொண்ட மன்னனுக்கும் நடுவு நிலை நிற்கும் மன்னனுக்கும் உவமையாகக் கூறப்படுகின்றன” (பதிற். 22: 32 – 34, 52: 28 - 31). ஞாயிற்றின் தோற்றமும் செயல்களும் எவ்வாறு விரித்துரைக்கப்பட்டதோ ஞாயிற்றின் மறைவு குறித்த செய்திகளும் இலக்கியங்களில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. “ஞாயிறு மலையின் பின் மறைந்ததாகவும் மேற்கு கடலில் மறைந்ததாகவும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன” (அகம். 360: 2 – 3, 120: 4 – 5, 47: 9, புறம். 2: 9 - 10). கிழக்கில் தோன்றி மேற்கில் மறையும் ஞாயிறு உலகிற்கு நலம் தரும் காரணத்தால் பலரும் ஞாயிற்றைத் தொழுது வணங்கினர். மறைமலை அடிகள் ஞாயிறே உலகின் இயக்கத்திற்கு ஆணி வேர் அதனை மனத்தில் கொள்வதும் போற்றி வழிபடுவதும் நலம் பயக்கும் என்று வழிபாடு குறித்துக் குறிப்பிடுகிறார். “உயிர் வாழ்க்கைக்குக் கட்டாயமாக வேண்டப்படும் நெல், கோதுமை, பயறு, பச்சைக் காய்கறி முதலியவைகளை விளைவித்துக் கொள்வதற்கும் வெயிலோனது வெள்ளொளியே காரணமாயிருக்கின்றது, வெயில் வெளிச்சம் படாவிட்டால் எந்தப் புற் பூண்டும் எந்த மரஞ் செடி கொடியுஞ் செம்மையாக வளர்ந்து பயன்தர மாட்டா இன்னும் மழைக்கால பனிக்காலங்களில் உடம்பு குளிரால் விறைத்துப்

போகாமலும் புழங்கும் தண்ணீர் பனிக்கட்டியாக இறுகிப் போகாமலும் இருப்பதற்கு வெய்யோனது வெப்பம் முதன்மையாக வேண்டியிருக்கிறது...... ஞாயிறு கிழக்கில் எழும்போதும் மாலையில் மேற்கில் மறையும் போதும் வழிபடுதல் முறையாகும்"[25].

## திங்கள் வழிபாடு

பகல் வேளையில் உலக உயிர்களுக்கும் புத்துணர்வு தந்து இயங்கச் செய்வது ஞாயிறு. அவ்வாறே பகல் முழுவதும் உழைத்து ஓய்வெடுக்கும் உலகிற்குத் தண்ணிய ஒளி தருவது திங்கள். பண்டைக் காலத்தில் திங்கள் வழிபாட்டிற்கு உரியதாக இருந்திருக்கிறது என்பதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. பகல் முழுவதும் ஞாயிற்றின் வெம்மையான கதிர்களால் துன்புற்ற உயிர்களுக்கு இன்பம் அளிப்பது திங்கள் என்னும் சிந்தனை குறிப்பிடப்படுகிறது. திங்களின் ஒளி முத்தின் ஒளியையும் வெண்ணிற அருவியின் ஒளியினையும் ஒத்திருந்ததாக அகநானூறு குறிப்பிடுகிறது,

**"............. நம் இடை முலைச்**
**சுணங்கணி முற்றத் தாரம் போலவும்**
**சிலம்புநீடு சோலைச் சிதர்தூங்கு நளிப்பின்**
**இலங்கு வெள்ளருவி போலவும்**
**நிலங் கொண்டனவால் திங்களும் கதிரே**" (அகம்.362: 11- 15).

திங்கள் தண்மையான ஒளியைக் கொண்டு உலகினை மகிழ்விப்பதன் காரணமாகத் திங்களின் குணத்தை வெளிப்படுத்துவதாக இலக்கியங்கள் திங்களைப் பெயர் சூட்டி அழைக்கின்றன. மு.

சண்முகம்பிள்ளை. “திங்கள், வெண் திங்கள், நெடுவெண் திங்கள், மதியம், நிலா, நிலவு, கதிர், பாற்கதிர்”[26] என்னும் பெயர்களால் இலக்கியங்கள் அழைப்பதைச் சுட்டுகிறார்.

உலகம் நிலையாமைத் தன்மை உடையது, உலகில் தோன்றிய பொருள்களும் உயிர்களும் காலத்தால் அழிந்தும் மாறியும் தம் இயல்பினை இழக்கின்றன. இத்தகைய நிலையாமைத் தத்துவத்தை உணர்த்துவதாக வானில் வலம் வரும் நிலவு விளங்குவதாகச் சங்கப் பாடல் குறிப்பிடுகிறது. மு. சண்முகம்பிள்ளை. “பாற்கதிர் பரப்பும் நெடுவெண் நிலவினைப் பெறுவதற்கு முன்னும் பின்னும் திங்கள் தன் உருவத்தில் அடைகின்ற மாறுபாடுகள் பல. நெடுவெண் நிலவு கொண்ட அவர்தன் வடிவில் குறைந்து குறைந்து தன் உருவம் சிறிதும் வெளிப்படா வண்ணம் உவா நாளில் கரைந்து விடுதலும் உண்டு. ஒவ்வொரு திங்களிலும் மதியம் தன் உரு நிழல் சற்றும் தோன்றா வண்ணம் முற்றும் மறைந்து விடுதலும் உண்டு”[27] என்று புறப்பாடலை மேற்கோள்காட்டி எடுத்தாள்கிறார். இவரது கருத்துக்கு அரண் செய்வதாக,

“**தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்**
**மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்**
**அறியா தோரையும் அறியக் காட்டித்**
**திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து**” (புறம். 27: 11 - 14)

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன. திங்களின் வளர்ச்சி அமாவாசை நாளுக்குப் பின் நிகழ்கிறது. மூன்றாம் பிறை நிலவு மேற்கில் தோன்றும் காலத்து அதனை வழிபடும் மரபு

பண்டைக்காலம் தொட்டே நிலவி வருகிறது. பண்டைத் தமிழரின் பிறை தொழும் வழக்கத்தைக் குறுந்தொகை, அகநானூறு, மதுரைக்காஞ்சி ஆகிய இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன. இவ்விலக்கியங்கள் மகளிர் பலர் நிலவைத் தொழுது வணங்கியமையினையும் அவ்வணக்கம் மாலை வேளையில் நிகழ்ந்ததையும் குறிப்பிடுவதால் மாலையில் தோன்றும் பிறை மூன்றாம் பிறையே எனக் கொள்ளலாம். இதனை,

**"குடமுதல் தோன்றிய தொன்றுதொழு பிறையின்**
**வழிவழி சிறக்கநின் வலம்படு கொற்றம்"** (மதுரைக்.193- 194).

**"……….. பலர்தொழ**
**செவ்வாய் வானத்து ஐயெனத் தோன்றி**
**இன்னாப் பிறந்தன்று பிறையே"** (குறுந். 307: 1 - 3)

என்னும் சான்றுகளால் அறியலாம். மூன்றாம் பிறை பண்டைத் தமிழர்களின் வழிபாட்டிற்கு உரியதாக இருந்திருக்கிறது. நிலவின் வளர்ச்சியில் எட்டாம் நாள் நிலவு எண்ணாட் திங்கள் என்று அழைக்கப்படுகிறது. "எண்ணாட் திங்களை பெரும்பாணாற்றுப்படை, புறநானூறு ஆகிய இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன" (பெரும். 11 – 12, புறம். 118: 1 - 3). இவ்விலக்கியங்கள் எட்டாம் நாள் திங்களை குளத்துக்கு ஒப்பிடுகின்றன. நிலவின் படிநிலைகளில் மூன்றாம் பிறை எட்டாம் நாள் அரை நிலவு முழு நிலவு ஆகியவை மட்டும் புலவர்கள் கவனம் செலுத்திய நிலவின் வடிவங்களாக அறியப்படுகின்றன.

முழு நிலா நாளில் ஞாயிறும் திங்களும் எதிரெதிராகத் தோன்றும் காட்சியைப் புறநானூறு பதிவு செய்துள்ளது. அந்நிகழ்வு முழு நிலா நாளில் மட்டும் நடைபெறுவதாகும்.

**"உவவுத் தலைவந்த பெருநாள் அமையத்து**
**இருசுடர் தம்முள் நோக்கி ஒருசுடர்**
**புண்கண் மாலை மலைமறைந் தாங்கு"** (புறம். 65: 6 - 8)

புலவர்கள் மன்னனின் வெண்கொற்றக்குடை நாட்டு மக்களுக்கும் மன்னனை நாடிவரும் இரவலர்களுக்கும் நலம் பயக்கும் தன்மையினால் நிலவுக்கு ஒப்புமையாகக் கூறியுள்ளனர் இதனை,

"**பாஅல் நின்று கதிர்சோரும்**
**வானுறையும் மதிபோலும்**
**மாலை வெண்குடை நீழலான்**" (புறம். 22: 10 - 12)

என்னும் புறப்பாடல் அடிகளால் அறியலாம். நிலவின் படிநிலையில் மூன்றாம் பிறை வணக்கத்திற்கு உரியதாகவும் வழிபாட்டிற்கு உரியதாகவும் இருந்திருக்கிறது. நிலவு பூமியின் இயக்கத்திற்குத் துணைபுரியுமாற்றைப் பரிபாடல் எடுத்துக் காட்டுகிறது. ஆறு, கடல் ஆகிய இடங்களில் நிலா அமாவாசை நாட்களில் தோன்றும் ஓதப் பெருக்குகள் நிலவின் ஈர்ப்பால் விளைபவை. இது மதியின் செயல் என்று,

"**ஆம் நாள் நிறைமதி அலர்தரு பக்கம்போல்**
**நாளின் நாளின் நளிவரைச் சிலம்புதொட்டு**
**நிலவு பரந்தாங்கு நீர்நிலம் பரப்பி**
**உலகுபயம் பகர ஓம்பு பெரும் பக்கம்**

**வழியது பக்கத்து அமரர் உண்டி**

**மதி நிறைவு அழிவதின் வரவு சுருங்க**

**எண்மதி நிறை உவாஇருள் மதிபோல**

**நாள் குறைபடுதல் காணுநர் யாரோ**" (பரி. 11: 31 - 38)

என்று பரிபாடற் பகுதிகள் எடுத்துக்காட்டுகின்றன. இப்பாடற் பகுதி பதினாறு கலைகளைக் கொண்ட நிலவு முழுநிலா நாளின் பின் தன் கலைகளில் தேய்வினைச் சந்திக்கிறது. "நிலவு அமாவாசையின் பின் வளர்வது அலர்தரு பக்கம் என்றும் நிறைமதி உவாவைப் பெருக்கம் என்றும் அமரர்க்கு உணவாகத் தேயும் பக்கத்தை வழியது பக்கம் என்றும் அமாவாசையை இருள் உவா என்றும்"[28] பரிபாடல் கூறுவதாக மு. சண்முகம்பிள்ளை குறிப்பிடுகிறார். அமாவாசை பௌர்ணமி நாட்களில் கடல்களில் அலை எழுச்சி அதிகமாக இருப்பதும் கடல் நீர் நிலப்பரப்பை நோக்கி வருவதும் இதன் காரணமாகவே என்னும் அறிவியல் உண்மையினையும் பரிபாடல் நுட்பமாகப் பதிவு செய்துள்ளது.

## ஒளி மறைப்பு

வானில் நிகழும் அரிதான நிகழ்வுகளில் ஒன்று ஒளி மறைப்பு இது கிரகணம் என்று அழைக்கப்படுகிறது. சூரிய ஒளி மறைப்பு, சந்திர ஒளி மறைப்பு என்னும் இரு ஒளி மறைப்புகள் இருப்பினும் பண்டைய இலக்கியங்களில் சந்திர ஒளி மறைப்பு மட்டும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சந்திர ஒளி மறைப்பு முழு நிலா நாளில் நடைபெறுவதாகும். இந்நிகழ்வினைப் பண்டைத் தமிழர்கள்

பாம்பினால் நிலவு விழுங்கப்படுவதாக எண்ணினர் இதனை அகநானூறு,

**“உரவுக்கதிர் மழுங்கிய கல்சேர் ஞாயிறு**

**அரவு நுங்கு மதியின் ஐயென மறையும்”** (அகம். 114: 4 - 5)

என்று குறிப்பிடுகிறது. நிலவு அரவினால் விழுங்கப்படுகிறது என்னும் சிந்தனை குறுந்தொகை, அகநானூறு, நற்றிணை, கலித்தொகை, பரிபாடல் ஆகிய இலக்கியங்களில் காணப்படுகிறது. நிலவைப் பாம்பு விழுங்குவதாக நினைத்துக் கிரகண காலத்தில் மக்கள் தம் துன்பம் நீங்க இறைவனை வழிபட்டமையும் கிரகணத்தின் பின் தூய்மைப்படுத்திக் கொள்வதும் பண்டைக்காலம் முதல் நிகழ்ந்து வரும் நிகழ்வுகள் என்பதை இலக்கியச் சான்றுகள் எடுத்துக்காட்டுகின்றன.

## பிறகோள்களும் அவற்றின் செயல்களும்

சங்க காலத்தில் ஞாயிறு வழிபாடும் திங்கள் வழிபாடும் பெருவழக்காக நிகழ்ந்திருக்கிறது. இவ்விரு கோள்களைத் தவிர செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய கோள்களும் வழிபாட்டிற்கு உரியனவாக விளங்கியிருக்கின்றன. கோள்கள் மழைப் பொழிவிற்குக் காரணமாக அமைபவை என்றும் அவற்றை வழிபடுவதால் நல்ல மழை பெய்து நாடு செழிக்கும் என்னும் நம்பிக்கையும் கொண்டவர்களாகப் பண்டைத் தமிழர்கள் திகழ்ந்தனர் எனலாம். மழை பெய்வதற்குரிய கோள் நிலைகள் இருக்கின்ற காலத்தில்தான் நல்ல மழை பெய்யும் என்னும் நம்பிக்கை

உடையவர்களாய்த் தமிழர்கள் திகழ்ந்தமையினைப் பரிபாடல் விளக்குகிறது. மேற்குத் தொடர்ச்சி மலையில் மழை பெய்து வைகையில் வெள்ளம் பெருக்கெடுத்தற்கான கோள்களின் நிலையைப் பாடல் ஒன்று விரிவான நிலையில் எடுத்துக்காட்டுகிறது.

**“விரிகதிர் மதியமொடு வியல் விசும்பு புணர்ப்ப,**
**எரிசடை எழில்வேழம் தீமையெனக் கீழிலிருந்து**
**தெருவிடைப் படுத்த மூன்று ஒன்பதிற்று இருக்கையுள்**
**உருகெழு வெள்ளி வந்து ஏற்றியல் சேர**
**வருடையைப் படிமகன் வாய்ப்ப பொருள்தெரி**
**புந்தி மிதுனம் பொருந்த புலர் விடியல்**
**அங்கி உயர்கிற்ப அந்தணன் பங்குவின்**
**இல்லத் துணைக்கு உப்பால் எய்த, இறை யமன்**
**வில்லின் கடைமகரம் மேவ பாம்பு ஒல்லை**
**மதியம் மறைய வருநாளில் வாய்ந்த**
**பொதியில் முனிவன் புரைவரைக் கீறி**
**மிதுனம் அடைய விரிகதிர் வேனில்**
**எதிர்வரவு மாரி இயைக என இவ் ஆற்றா**
**புரைகெழு சையம் பொழி மழை தாழ**
**நெரிதரூஉம் வைவயைப் புனல்”** (பரி. 11: 1 - 15).

இப்பாடலடிகளில் வெண்ணிறமுடைய வெள்ளிக்கோள் இடபத்தைச் சேர்ந்திருக்க செவ்வாய்க்கோள் மேட இராசியைச் சென்று சேர புதன்கோள் மிதுன இராசியைச் சென்று சேரக் கார்த்திகை நட்சத்திடம் உச்சமாக இருந்த வேளையில் பொழுது விடிந்தது. இக்காலத்தில் வியாழன் சனியின் வீடாகிய மகர கும்பங்களுக்கு அப்பால் சென்று மிதுனத்தைச் சேர்ந்திருக்க யமனின்

மகனாகிய சனி மகரத்தைச் சேர்ந்திருக்க, இராகு நிலவுக்குள் மறைந்து நின்றது. எனவே இந்நாள் ஆவணி மாதம் நிறை நிலா நாள் அவிட்ட நட்சத்திரம் என்பது பெறப்படும். இத்தகைய கோள் நிலையில் மேற்கு மலையில் மழை பெய்து வைகையில் வெள்ளம் பெருக்கெடுத்தது என்னும் செய்தி குரிப்பிடப்படுகிறது. இதனால் பண்டைத் தமிழர்கள் கோள்களை வழிபட்டதுடன் அவற்றின் சுழற்சியையும் நுட்பமாகக் கவனித்தனர் என்று அறியலாம்.

மழைக்கான கோள்களில் வெள்ளி முக்கியத்துவம் உடையதாகக் கருதப்பட்டது. வெள்ளியை "சீர் சால் வெள்ளி" (பதிற். 24: 24) என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. வெள்ளிக்கோள் நிற்பதற்குரிய திசை வடதிசை என்றும் அக்கோள் தெற்கே சென்றால் மழை வளம் குறையும் என்றும் பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.

"**வசையில் புகழ் வயங்கு வெண்மீன்**
**திசை திரிந்து தெற்கேகினும்**
**………………**
**வான் பொய்ப்பினும்**" (பட்டினப். 1 - 5)

இதனைப் பதிற்றுப்பத்தும்,

"**வயங்குகதிர் விரிந்து வானகம் சுடர்வர**
**வறிது வடக்கு இறைஞ்சிய சீர்சால் வெள்ளி**
**பயம் கெழு பொழுதொடு ஆநியம் நிற்ப"** (பதிற். 24: 23 – 25)

**"விசும்புமெய்யகல பெயல்புரவு எதிர**
**நால்வேறு நனந்தலை ஓராங்கு நந்த"** (பதிற். 69: 15 - 16).

என்னும் சான்றுகளால் விளக்குகிறது. “வெள்ளிக்கோள் மழைக்குரிய நாள்மீன்களுடன் பொருத்தமாக சேராத காலத்தில் பூவுலகில் மழைபெய்யாமல் பசியும் நோயும் பெருகும்” (பதிற். 13: 25 - 28) என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. செவ்வாய்க்கோள் வெம்மையானது அதனுடன் சுக்கிரன் (வெள்ளி) சேரலாகாது அவ்வாறு சேர்ந்தால் மழை வளம் இருக்காது என்னும் சிந்தனையைப் பதிற்றுப்பத்து பதிவு செய்கிறது. பண்டைய மக்கள் வெள்ளிக்கோளை வளமைக் கோளாகக் கருதினர். அதன் அடிப்படையிலேயே அதனை வணங்கவும் முற்பட்டனர் என அறியலாம்.

வெள்ளிக்கோள் தெற்கேகினால் விளையும் வறட்சியினையும் வறுமையினையும் புறநானூறு, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை ஆகிய இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன வெள்ளிக்கோள் பல்வகைச் சிறப்புகளையும் பெற்றுத்திகழும் பான்மையினை மு. சண்முகம்பிள்ளை சுக்கிரன் எனப்படும் கோள் வெண்ணிறம் வாய்ந்தது ஆனது பற்றியே இது வெண்மீன் வெள்ளி என்னும் பெயரிட்டு அழைக்கப்பெறுகின்றது. “சூரியன் உதயமாவதற்கு முன்னாக ஞாயிற்றுப் புத்தேளுக்குக் கட்டியங் கூறி வருவதுபோல வைகறையில் காட்சி தருவது. எனவே வைகுறு மீன் என்றும் இதனைக் குறிப்பர். குற்றங் கூறுதல் இல்லாத புகழையுடைய விளக்கமான வெள்ளி மீன் என்று பட்டினப்பாலை இதன் சிறப்பைப் பேசுகிறது. இருள் செறிந்த விடியற் கருக்கலிலே விரிகின்ற வெள்ளிய கிரணங்களைக் கொண்டு எழுவது விரிகதிர் வெள்ளி முளைத்த நள் இருள் விடியல் என்பது பொருநராற்றுப்படையிலும் இலங்கு கதிர்

வெள்ளி என்பது புறநானூறு என்பதும் இதன் ஒளிச் சிறப்பைக்காட்டும். வைகறைப் பொழுதின் வரவு கூறி வானத்தின் கிழக்குத் திக்கிலே இது காட்சி தரும் காலத்தில் பறவைகளும் துயிலெழுகின்றன. குரலெடுத்து வான வீதியில் புறப்படத் தயாராகின்றன. வெள்ளி எழுந்த மாத்திரையே புட்கள் உறக்கம் தெளிந்து குரல் கொடுக்கத் தொடங்குகின்றன”[29] என்று வெள்ளிக்கோளின் தன்மையினையும் அதனால் உலகில் நிகழும் நுண்ணிய செயல்களையும் எடுத்துரைக்கின்றார்.

சங்க இலக்கியங்களில் “செவ்வாய்க் கோள் செந்நிறம் வாய்ந்தது என்றும்; சனிக்கோள் கருநிறம் கொண்டது என்றும் குறிப்புகள் காணக்கிடைக்கின்றன” (புறம். 60: 1 – 2, 117: 1). மேற்கண்ட செய்திகளால் பண்டைய மக்கள் கோள்களையும் அவற்றின் தன்மைகளையும் இயக்கங்களையும் நன்கு உணர்ந்திருந்தனர் என்பதையும் அவற்றை வழிபடுமாற்றால் நற்பலன்களைப் பெற முடியும் என்று நம்பிக்கை கொண்டிருந்தமையினையும் அறிய முடிகிறது.

## நாள் வழிபாடு

தமிழர்களின் வழிபாட்டு முறையில் இயற்கை வழிபாடு கோள் வழிபாடு ஆகியவற்றுக்கு அடுத்துச் சிறப்புறுவது நாள் வழிபாடு இதனை நட்சத்திரம் என்றும் கூறுவர். பொதுவான நிலையில் விண்மீன்களும் சிறப்பு நிலையில் இருபத்தேழு நாள் மீன்களும்

சிறப்புற்று விளங்கி வழிபாட்டிற்கு உரியதாக இருந்தமையினைப் பண்டைய இலக்கியங்கள் விளக்குகின்றன.

தமிழ் இலக்கியங்களில் வானில் விண்மீன்கள் பரவிக்கிடப்பதை அழகியல் நோக்கில் இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. "வான் முழுவதும் விண்மீன்கள் ஒளி விடும் அழகினைக் கலித்தொகையும் புறநானூறும் குறிப்பிடுகின்றன" (கலி. 103: 13, புறம். 129: 1). "அரண்மனை மதிலில் ஏற்றப்பட்ட விளக்குகள் விண்மீன்கள் போல இருந்ததாக அகநானூறு குறிப்பிடுகிறது" (அகம். 114: 9 - 11), "புறநானூறு மலையில் விளங்கும் எண்ணற்ற சுனைகளுக்கு விண்மீன்களை உவமை கூறுகிறது" (புறம். 109: 9 - 10), "முசுண்டை மலர்கள் வெண்ணிறமாகப் பூப்பவை அவற்றை அகநானூறு விண்மீன்களுடன் ஒப்பிடுகிறது" (அகம். 264: 1 - 2), "மன்னன் அரசவையில் தம் குழாமுடன் இருந்து அரசு புரியும் காட்சிக்கு சிறுபாணாற்றுப்படை நிலவையும் நட்சத்திரங்களையும் உவமையாகக் கூறியிருக்கிறது" (சிறுபாண். 219 - 220). இவ்வாறாகப் பொதுநிலையில் விண்மீன்கள் வானில் பூத்துக் கிடப்பதை எழிலுறப்பாடியிருப்பினும் வழிபாட்டு நோக்கில் அவர்கள் நாள் மீன்களைப் போற்றினர் என்பது இலக்கியங்களின் வாயிலாகத் தெளிவாகிறது.

நாள் மீன்கள் இருபத்து ஏழாகும், சந்திரன் நாள் மீனைச் சேர்ந்து விளங்கும் தன்மையது பன்னிரண்டு இராசி கட்டங்களில் சந்திரன் ஒவ்வொரு இராசியிலும் தங்கும் தன்மையது. சந்திரன் நின்ற

இடம் இராசி எனப்படுகிறது. இருபத்து ஏழு நாள் மீன்களையும் சுற்றிவரச் சந்திரன் எடுத்துக்கொள்ளும் காலம் இருபத்து எட்டேகால் நாட்களாகும் இருபத்தேழு நாள் மீன்களில் உரோகிணி, ஓணம், திருவாதிரை, கார்த்திகை, மகம், பரணி, வடமீன் ஆகியன தெய்வத்தன்மை பொருந்தியனவாகக் கருதி வழிபடப்பட்டு வருகின்றன.

நாள் மீன்களில் உரோகிணி சிறப்புப் பெற்ற நாள் மீனாகக் கருதப்படுகிறது. மதியுடன் உரோகிணி சேரும் நாள் நன்னாளாகக் கருதப்பட்டு வழிபாட்டிற்கும் நற்செயல்களுக்கும் துணைபுரியும் நாளாகக் கொள்ளப்படுகிறது. உரோகிணி எப்போதும் நிலவுடன் கூடியிருக்கும் பான்மையில் இதனை காலந்தோறும் போற்றும் மரபு இருந்தமையினை நெடுநெல்வாடை, அகநானூறு ஆகிய இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. “நெடுநெல்வாடை திங்கள் உரோகிணியின் சித்திரம் தீட்டப்பெற்ற அரண்மனைக் காட்சியை விவரிக்கிறது” (நெடுநல். 161 - 163). அவ்வாறே அகநானூறு “மணத்திற்குரிய நாளாக திங்கள் உரோகிணியுடன் கூடிய நாளைக் குறிப்பிடுகிறது” (அகம். 136: 4 - 6) அகநானூறு. உரோகிணி நாள் மீனைச் சகடம் என்னும் சொல்லால் குறிப்பிடுகிறது.

“திருவோணம் திருவாதிரை ஆகிய நாள் மீன்கள் முறையே திருமாலுக்கும் ஆலமர் செல்வனாகிய சிவனுக்கும் உரியவை என்று கருதி வழிபடும் வழக்கம் பண்டைக் காலம் தொட்டு நிலவி வருகிறது. இதனை மதுரைக்காஞ்சி, கலித்தொகை, பரிபாடல் ஆகிய

இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. இவ்விலக்கியங்களில் திருவோணம் மாயோனுக்கு உகந்ததாகவும் திருவாதிரை ஆலமர் செல்வனுக்கு உகந்ததாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது" (மதுரை. 590 – 59, பரி. 8: 6, கலி. 5: 20).

நாள் மீன்களில் சிறப்புப் பொருந்தியதாகக் கார்த்திகை விளங்குகிறது. செந்நிறமுடைய கார்த்திகை மீன் முருகப் பெருமானோடு தொடர்புபடுத்தித் தெய்வத் தன்மை வாய்ந்ததாக வழிபாட்டிற்கு உரியதாகக் கொள்ளப்பட்டும் போற்றப்படுகிறது. கார்த்திகை நாள் மீன் ஆறு நட்சத்திரங்களின் கூட்டமாகும் இக்கூட்டத்தின் தலைப்பகுதியில் செந்நிறமாக ஒளிர்வது இந்நாள் மீன். கார்த்திகை மாத முழுநிலா நாள் கார்த்திகை நாள் மீனுடன் சேர்ந்ததாகும். இந்நாளில் திருவிளக்கு ஏற்றி இறைவனை ஒளி வடிவில் வணங்குவது தமிழர் வழிபாட்டு முறையில் குறிக்கத்தக்க நிகழ்வாகும் இதனை அகநானூறு,

"**மழைக்கால் நீங்கிய மாக விசும்பில்**
**குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து**
**அறுமீன் சேரும் அகலிரு நடுநாள்**" (அகம். 141: 6 - 8).

என்று குறிப்பிடுகிறது. கார்த்திகை நட்சத்திரம் அழற்குட்டம் என்னும் பெயரால் வழங்கப்படுகிறது.

மக நாள் மீன் பொய்கையின் வடிவத்திற்கு ஒப்பிடப்படுகிறது. பட்டினப்பாலையில் குறிப்பிடப்படும் சூரிய சந்திர ஏரிகள் மகமீனின் அமைப்புக்கு ஒப்புமையாகக் கூறப்படுகின்றன. பட்டினப்பாலை

காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த பொய்கை மக நாள் மீனை ஒத்திருந்ததாகக் குறிப்பிடுகிறது இதனை,

“**பொழில் புறவின் பூந்தண்டலை**
**மழை நீங்கிய மா விசும்பில்**
**மதி சேர்ந்த மக வெண்மீன்**
**உருகெழு திறல் உயர்கோட்டத்து**
**முருகமர் பூ முரண்கிடக்கை**
**வரியணி சுடர் வான் பொய்கை**” (பட்டினப். 33 - 38).

என்னும் அடிகளால் அறியலாம் ஏழு மீன்கள் அடங்கிய சப்தரிசி மீன் கூட்டம் வடமீனாகிய அருந்ததி ஆகியனவும் வழிபாட்டிற்கு உரியதாகப் போற்றப்பட்டன. அருந்ததி வடமீன் கற்புக்கு அணிகலனாகப் போற்றப்படும் சிறப்புடையதாய் வணங்கப்பட்டது. பெரும்பாணாற்றுப்படை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து முதலான இலக்கியங்கள் கற்புத்திறத்திற்குரிய மீனாக வடைமீனைக் கூறியுள்ளன இதனை,

“**வடமீன் புரையும் கற்பின் மடமொழி”** (புறம். 122: 8).

**“வடமீன் போல் தொழுது ஏத்த வயங்கியகற்பினாள்**”

(கலி. 2: 21)

என்னும் சான்றுகளால் அறியலாம். கோள்களும் நாள் மீன்களும் பொது மற்றும் சிறப்பு நிலையில் மக்களுக்கு நன்மை தரும் பான்மையில் வழிபாட்டிற்குரியதாகக் கொள்ளப்பட்டுத் தெய்வ நிலை தந்து வணங்கப்பட்டன.

பண்டைத் தமிழர்கள் இயற்கை, கோள், நாள் ஆகியவற்றை வாழ்விற்கு நலம் தரும் என்றெண்ணி வழிபட்ட பான்மையில் அவற்றுக்குள் எவை தீமை விளைவிக்கும் சக்திகள் என்பதையும் அறிந்திருந்தனர். கோள்களும் நாள் மீன்களும் நன்மை தருபவை என்னும் சிந்தனை மக்கள் மனத்துள் ஆழமாக வேரூன்றி இருந்தது. அதற்கு மாறாக எரி நட்சத்திரம் மைம்மீன் தூம கேது முதலானவை தீமை விளைவிக்கும் என்று எண்ணித் தமக்கு வரும் தீமைகளில் இருந்து தம்மைக் காத்துக்கொள்ளவும் அவர்கள் வழிபாடு இயற்றியமையினை அறியலாம். அழிவு நேர்வதற்கு அறிகுறியாக எரிகொள்ளி விழும் என்னும் சிந்தனை மக்கள் மனத்தில் நிலைபெற்றிருந்தமையினை புறநானூறு “திசையிரு நான்கும் உற்கம் உற்கவும்” (புறம். 41: 14) எனக் குறிப்பிடுகிறது. எரிகொள்ளி வீழ்ந்த ஏழாம் நாள் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை இறந்த நிகழ்வை கூடலூர்க்கிழார் புறப்பாடலில் குறிப்பிடுகிறார்” (புறம். 229) எரிகொள்ளி தீமையின் விளைவினை அறிவிப்பதாக விளங்கியமையினை அறியலாம்.

பண்டைய மக்கள் நாள்மீன் கோள் மீன்களால் நன்மையும் தீமையும் விளையும் எனக்கருதி அவற்றை வழிபட முயன்றனர். அதனால் நற்செயல்களை நிகழ்த்துவதற்கு நல்ல நாட்களைத் தேர்ந்தெடுத்தனர். கடலில் மீன் பிடிக்கச் செல்லும் மீனவர்கள் உவா நாட்கள் தீமை நிறைந்தவை என்று கருதி அந்நாட்களில் கடலுக்கு மீன் பிடிக்கச் செல்வதைத் தவிர்த்துக் கடற்கரைக் கானலில் தங்கி ஓய்வெடுத்தையும் கடல் தெய்வத்தை வணங்கியதையும் காவிரி

கடலுடன் கலக்கும் இடத்தில் நீராடிப்பின் உப்பு நீங்க நல்ல நீரில் நீராடியதையும் பட்டினப்பாலை பதிவு செய்கிறது. உவா நாள் துன்பம் விளைவிக்கும் தன்மையது என்பதை,

"**புன்தலை இரும்பரதவர்**
**பைந்தழை மாமகளிரொடு**
**பாயிரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது**
**உவவு மடிந்து உண்டாடியும்**" (பட்டினப். 90 - 92).

என்னும் அடிகள் விளக்குகின்றன.

கோள்கள் நல்ல நிலையில் நின்ற காலத்து உலகில் நலம் பெருகும் என்றும் அவை நன்னிலையில் நிற்காத காலத்து உலகில் துன்பம் விளையும் என்பதையும் அறிந்திருந்த மக்கள் வாழ்க்கைக்கு ஆதாரமாக விளங்கிய இயற்கையினையும் வானில் உலவும் கோள்களையும் நாள் மீன்களையும் வணங்குவதால் தமக்கு வரும் துன்பங்கள் நீங்கி வளமான வாழ்க்கை கிடைக்கும் என்று நம்பியதன் விளைவாக இயற்கையைத் தெய்வமாகக் கருதி வழிபட்டனர் எனலாம். இதனை மதுரைக்காஞ்சி,

"**ஓங்குதிரை வியன்பரப்பில்**
**ஒலிமுந்நீர் வரம்பாக**
**தேன் தூங்கும் உயர்சிமைய**
**மலை நாறிய வியல் ஞாலத்து**
**வலமாதித்தான் வளிகொட்ப**
**வியல் நாள்மீன் நெறியொழுக**
**பகற்செய்யும் செஞ்ஞாயிறும்**

**இரவுச் செயும் வெண்டிங்களும்**

**மைதீர்ந்து கிளர்ந்து விளங்க**

**மழைதொழிலுதவ மாதிரங் கொழுக்க**

**தொடுப்பினாயிரம் வித்தியது விளைய**

**நிலனும் மரனும் பயன் எதிர்பு நந்த**" (மதுரைக். 1 - 12).

என்னும் அடிகளால் எடுத்துரைக்கிறது. இதனால் இயற்கையும் நாள்களும் கோள்களும் தெய்வத் தன்மை பொருந்தியவை அவற்றை வணங்குதலால் நல் விளைவைப் பெறலாம் என்று பண்டைய மக்கள் சிந்தனையின் விளைவே இயற்கை வழிபாட்டின் மூலம் எனலாம்.

முடிவுகள்

- உலகத் தோற்றத்தில் உயிர்கள் தோன்றுவதற்கான சூழல் தோற்றம் பெற்ற பின்பு இயற்கையால் தோற்றுவிக்கப்பட்ட மண், மரம், மலை, செடிகொடிகள், கோள்கள் நாள்மீன்கள் முதலானவற்றை இயற்கையின் கூறுகளாகக் கொள்ளலாம்.
- உயிர்கள் தோன்றி வளர்வதற்கான உயிரியல் சூழலை அமைத்துக் கொடுத்த களமே இயற்கை எனலாம்.
- மனிதனால் படைக்கப்படாத உலகத் தோற்றத்தில் இயல்பாக உருவான தோற்றங்கள் இயற்கைத் தோற்றங்கள் எனலாம்.
- இயற்கை ஆக்கவும் அழிக்கவும் வல்லது என்னும் சிந்தனையும் அவற்றை வணங்குவதால் நற்பலன்கள் பெறலாம் என்னும் சிந்தனையும் வழிபாட்டின் தோற்றத்திகுக் காரணம் எனலாம்.
- இயற்கைச் சீற்றங்களாலும் அவற்றால் அடைந்த துன்பங்களாலும் உருவான அச்சம் வழிபாட்டிற்கான தொடக்கத்தை அமைத்துக் கொடுத்தது எனலாம்.
- வழிபாடு இயற்கையை அடியொற்றி இயற்கை வழிபாடாகத் தோற்றம் பெற்றது.
- வழிபாடு என்னும் சொல் வழிபடுதல் பின்பற்றுதல் என்னும் பொருள்களைத் தருகிறது.
- இயற்கையின் கூறுகளுள் ஒன்றான மலை வலிமை மிக்கதாகவும் மக்கள் வாழ்க்கைக்கு அடிப்படையாகவும் அமைந்த பான்மையில் வழிபாட்டிற்குரியதாகவும் போற்றப்பட்டு அம்மலையில் அணங்கு வரையர மகளிர், சூர்

ஆகிய தெய்வங்கள் உறைவதாக எண்ணி வழிபட்டமையினையும் மலை உறை தெய்வங்கள் வலிமை வாய்ந்தவை வருத்தும் தன்மையவை என்பதை அறிய முடிகிறது.

❖ இலக்கியங்களில் இரு சுடர் தோற்றம் மறைவு சொல்திறம் தன்மை ஆகியன விளக்கப்படுகின்றன.

❖ ஞாயிறு குணதிசையில் தோன்றிக் குடதிசையில் மறைவதாகக் கூறப்படுகிறது.

❖ குண திசையில் தோன்றும் ஞாயிறு குடமலையில் மறைந்ததாகவும் குடகடலில் மறைந்ததாகவும் குறிப்புகள் காணப்படுகின்றன.

❖ ஞாயிறு ஓய்வின்றிச் செயல்புரிவதாகவும் ஒற்றைச் சக்கரமுடைய தேரில் பயணிப்பதாகவும் ஏழு புரவிகள் பூட்டிய தேரில் பயணிப்பதாகவும் குறிப்புகள் காணப்படுகின்றன.

❖ ஞாயிற்றின் வலிமை மன்னர்களுக்கும் அவர்களின் நடுவு நிலைக்கும் ஒப்புமையாகக் கூறப்பட்டிருக்கிறது.

❖ நிலவு (திங்கள்) தேய்ந்து வளரும் தன்மையது என்றும் மூன்றாம் பிறை வழிபாட்டிற்கு உரியது என்றும் குறிப்புகள் காணப்படுகின்றன.

❖ எட்டாம் நாள் திங்கள், முழு நிலவு ஆகியன குணம், தண்மை, நிறைவு ஆகியவற்றுக்கும் வெண் கொற்றக்குடைக்கும் ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளன.

- ❖ நிலவு (திங்கள்) நிலையாமையை உணர்த்தும் கோளாகக் காட்டப்பட்டிருக்கிறது.
- ❖ கிரகணம் ஒளி மறைப்பு என்றும் நிலவைப் பாம்பு விழுங்குவதாகவும் நம்பிக்கை நிலவியது.
- ❖ நட்சத்திரங்கள் வானில் அழகூட்டுபவை என்னும் சிந்தனை இலக்கியங்களில் பதிவு பெற்றுள்ளது.
- ❖ நாள்மீன்களில் உரோகிணி, கார்த்திகை, திருவாதிரை, திருவோணம், மகம், பரணி முதலானவை தெய்வத்தன்மை வாய்ந்தவை என்று எண்ணி வழிபடும் வழக்கம் நிலவியமையினை அறிய முடிகிறது.
- ❖ கோள்களில் வெள்ளிக்கோள் மழையைக் கொண்டு வரும் வளமான கோள் என்றும் அது தீய கோள்களுடன் சேர்ந்தால் மழை வளம் குறையும் என்னும் நம்பிக்கை நிலவியமையினை அறியலாம்.
- ❖ நாள் கோள் ஆகியவையே இன்ப துன்பத்திற்குக் காரணமானவை என்னும் நம்பிக்கை மக்கள் மனத்தில் வழிபாட்டுச் சிந்தனையைத் தோற்றுவித்தமையினை அறிய முடிகிறது.
- ❖ எரிகொள்ளி வீழ்தல் தூமகேது முதலான வானில் தோன்றுதல் தீய அறிகுறிகளாகக் கொள்ளப்பட்டது. ஆனால், தீமை விளையும் என்று எண்ணிய மக்கள் தீமையை விலக்க வழிபாடாற்றியமையினை அறிய முடிகிறது.

❖ இயற்கை ஆக்கவும் அழிக்கவும் வல்லது என்பதை உணர்ந்த மக்கள் அவற்றை வணங்குவதால் நன்மையும் வளமும் பெறலாம் என்று மனத்தில் கொண்ட சிந்தனையே இயற்கை வழிபாடாகத் தோற்றம் பெற்றது எனலாம்.

## அடிக்குறிப்புகள்

1. www. wikipeadia.com nature.
2. மேலது.
3. ம. தங்கராசு (ம. பி). (ப. ஆ), இலக்கியங்களில் தெய்வங்கள் (க. தொ) சி. அயோத்தி (க. ஆ) தத்துவ நுட்பமும் சொல்திறனும் (கட்), ப. 1.
4. நா. கதிரைவேல்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப. 1261.
5. ம. தங்கராசு (ம. பி) (ப. ஆ) இலக்கியங்களில் தெய்வங்கள் (க. தொ) அ. அகத்தீஸ்வரி (க. ஆ) திருவாசகத்தில் மாணிக்கவாசகரின் இறைவழிபாட்டு நிலைகள் (கட்). ப. 37.
6. மேலது. மு. அ. மாணிக்க வேலு (க. ஆ) சங்க இலக்கியம் காட்டும் முருக வழிபாடு (கட்). ப. 432.
7. பக்தவச்சலபாரதி, பண்பாட்டு மானுடவியல், ப. 504.
8. மேலது. ப. 504.
9. மேலது. ப. 504.
10. சூ. அ. செல்வநாதன், மரங்களும் மனித ஒற்றுமையும், ப. 32.
11. தொல். பொருள். புறத். சூ. 27.
12. ஆ. சிங்காரவேலு முதலியார். அபிதான சிந்தாமணி, ப. 1547.
13. வெற்றிச் செல்வன். ஆறுபடை வீடுகள், ப. 7.
14. மேலது. ப. 7.
15. சண்முகம்பிள்ளை. சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப. 115.
16. பன்னீர்செல்வம். திருவண்ணாமலை கிரிவலம், ப. 37.

17. நாகப்பா நாச்சியப்பன். திருக்கோயில் வழிபாடு, பக். 34 – 35.

18. பி. ஆர். சீனிவாசன். நாம் வணங்கும் தெய்வங்கள், ப. 87.

19. நடன. காசிநாதன். தமிழர் தெய்வங்கள், பக். 58 – 59.

20. மு. சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப. 121.

21. க. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கையும், ப. 260.

22. கலைக்களஞ்சியம், தொகுதி – 4 ப. 710 – 711.

23. செ. வைத்தியலிங்கன், தமிழ் பண்பாட்டு வரலாறு, ப. 652.

24. சண்முகம்பிள்ளை, மு. கு. நூ. ப. 167.

25. மறைமலை அடிகள், வாழ்வும் வழிபாடும், ப. 27 – 28.

26. மு. சண்முகம்பிள்ளை, மு. கு. நூ. ப. 177.

27. மு. சண்முகம்பிள்ளை, மு. கு. நூ. ப. 177.

28. மு. சண்முகம்பிள்ளை, மு. கு. நூ. ப. 182.

29. மு. சண்முகம்பிள்ளை, மு. கு. நூ. ப. 189.

இயல்–2



# திணைத்தெய்வ வழிபாடும் வழிபாட்டு முறைகளும்

# இயல் – இரண்டு

## திணைத் தெய்வ வழிபாடும் வழிபாட்டு முறைகளும்

### முன்னுரை

பண்டைத் தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியங்கள் திணைகளின் அடிப்படையில் கட்டமைக்கப்பட்டவை. குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனப் பகுக்கப்பட்ட சங்கத் தமிழர்களின் நிலவியல் பாகுபாடுகள் வாழ்வியல் முறைகளை அறிந்துகொள்ளப் பயன்படுகின்றன. நிலவியல் அடிப்படையில் தெய்வங்களையும் வழிபாட்டு முறைகளையும் ஆராய்வதனால் தமிழர்களின் நிலவியல் கூறுகளையும் வழிபாட்டு நெறிகளையும் அறிந்துகொள்ள இயலும், என்னும் நோக்கில் இவ்வியல் திணைத் தெய்வ வழிபாட்டிணையும் வழிபாட்டு முறைகளையும் ஆராய்ந்து செல்கிறது.

### திணை விளக்கம்

திணை என்றால் 'ஒழுக்கம்' என்பது பொருள். பண்டைத் தமிழர்கள் தாம் வாழ்ந்த நிலப் பகுதிகளை நிலவியல் அடிப்படையில் பகுத்து அவற்றிற்குத் திணை என்று பெயரிட்டனர். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன. நிலவியல் அடிப்படையில் அவ்வகை நிலத்தில் வாழ்ந்த மக்களின் ஒழுகலாறுகள் 'திணை' என்னும் பெயரால் அழைக்கப்பட்டன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு திணைகளும் நிலம் பெற்ற

திணைகளாகும். பாலைக்கு நிலம் கிடையாது. "குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிதல்" பாலை என்பதால் கோடையில் தன் இயல்பு திரிந்த குறிஞ்சி நிலமும் முல்லை நிலமும் பாலை எனப்பட்டன.

## நிலங்களும் தெய்வங்களும்

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு நிலங்களின் அமைப்பையும் அந்நிலங்களுக்கான தெய்வங்களையும் திணைகள் வழங்கப்பட்ட முறைமையினையும் தொல்காப்பியர் தெளிவுபடுத்துகிறார்.

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"**[1]

இச்சூத்திரம் நில அமைப்பையும் நிலத்திற்குரிய தெய்வங்களையும் கூறுகிறது. இதனை புலவர் குழந்தை "முல்லைக்கு மாயோனும் குறிஞ்சிக்குச் சேயோனும் மருதத்திற்கு வேந்தனும் நெய்தலுக்கு வருணனும் தெய்வங்களாவர். காடும் மலையுமாகிய முல்லையும் குறிஞ்சியும் முதுவேனில் காலத்தில் வளம் பிரிந்து வறண்டு தோன்றும் நிலையே பாலையானதால் பாலைக்குத் தனியாக நிலமில்லை எனவே முல்லை, குறிஞ்சிக்குரிய தெய்வங்களே பாலைக்குத் தெய்வமாகும்"[2].

"கடவுள் தொடர்புடைய சிந்தனைகள் சங்க இலக்கியங்களில் அதிகமான அளவுக்குக் காணப்படுகின்றன. நிலத்துக்கு ஏற்றவாறு கடவுளைப் பிரித்துக்கொண்டு வழிபடும் முறை வழக்கில் இருந்திருக்கிறது. இயற்கையைப் பார்த்து மனிதன் அஞ்சிய காலத்தில் தன்னுடைய பாதுகாப்புக்காக அவன் சிலவற்றை நம்ப வேண்டி வந்தது. அந்த நம்பிக்கைக்கு ஆதாரமாகத்தான் சடங்குக் கொள்கை உருவானது என்பதைச் சமுதாயவியல் சுட்டிக் காட்டுகிறது"[3]. தொல்காப்பியர் நிலந்தோறும் வகுத்துக் கூறியிருக்கும் திணை நிலத் தெய்வங்கள் அவ்வந் நிலத்தின் அமைவிற்கும் மக்களின் வாழ்க்கை முறை இயைந்தவையாக இருப்பதை அறியலாம்.

"மனிதர்கள் தங்களின் நெருக்கமானவர்களாகக் கடவுளர்களை ஆக்கிக் கொள்வதற்குத் தங்களைப்போலவே அவர்களுக்கு வடிவத்தை அமைக்கிறார்கள். தங்கள் வாழ்க்கை முறையைப் போலவே தெய்வங்களுக்கும் வாழ்க்கை முறையை கற்பனை செய்து கொள்கிறார்கள். அந்த வகையில்தான் குறிஞ்சி நிலப் பொதுமக்களாகிய குன்றக் குறவர்கள் முருகன் குறத்தியை மணந்து கொண்டான் என்று கூறிய நிகழ்ச்சியும் அமைகிறது"[4]. குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குறவர்கள் தங்கள் தெய்வத்தைத் தாங்கள் நினைத்த முறையில் வணங்கியதை மேற்கண்ட கருத்து மூலம் காணலாம்.

## முல்லை – திருமால்

திணை நிலத் தெய்வங்களுள் திருமால் முல்லைத் திணைக்குரிய தெய்வமாகத் தொல்காப்பியரால் எடுத்துக்காட்டப்படுகிறது. முல்லை

நிலத்தில் வாழ்கின்ற வாழ்வை மேற் கொண்டிருந்த ஆயர்கள் திருமாலைத் தங்களின் கடவுளாகக் கொண்டனர்.

**"நனந்தலை யுலகம் வளைஇ நேமியோடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல்"[5]**

என்று முல்லைப்பாட்டும்,

**"கணங்கொ ளவுணர்க் கடந்த பொலந்தார்**
**மாயோன் மேய ஓண நன்னாள்"[6]**

என்று மதுரைக்காஞ்சியும் திருமாலைச் சிறப்பிக்கின்றன. மேற்கண்ட இலக்கியச் சான்றுகள் சங்க கால முல்லை வாழ்வியலில் திருமால் பெற்றிருந்த இடத்தைத் தெளிவுபடுத்துகின்றன. திருமால் அவதாரங்கள் பல எடுத்ததாகவும் ஒவ்வொரு அவதாரமும் உலக மாற்றத்தின் பொருட்டு எடுக்கப்பட்டதென்றும் புராணங்கள் கூறுகின்றன. இதிகாசங்களில் கண்ணன் விஷ்ணுவின் அவதாரமாகவும் ஒரு போர் வீரனாகவும் காட்சியளிக்கிறான். அவனை ஒரு பெருந்தெய்வமாக அக்காலத்தில் மக்கள் கருதவில்லை ஆரிய திராவிடரிடம் இருந்தே கண்ணன் வழிபாட்டைப் பெற்றிருத்தல் வேண்டும். கண்ணன் உண்மையில் ஓரிடத்தில் நிலையாக இருந்து வாழ்ந்த இடையர் குலத் தெய்வம். மேலும் கருமை நிறம் வாய்ந்த தெய்வமாக இருப்பதும் அவன் திராவிட தெய்வம் என்று கொள்வதற்கு அறிகுறியாய் அமையும் எனலாம். எனவே தான் ஆரியர் திராவிடரைக் கருமை நிற மனிதர் என்று குறித்தனர்"[7]. மேற்கண்ட கருத்து மூலம் திருமால் வழிபாடு முல்லை நிலத்தில்

பண்பட்டு வளர்ந்து புராண நிலை எய்தியது அறியத் தக்க சான்றாகிறது.

பண்டைத் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களான தொல்காப்பியம் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய நூல்களில் திருமால் குறித்த குறிப்புகள் காணப்படுகின்றன. திருமாலைக் குறிக்க மாயோன் (பரி. 7: 1 - 3), மால் (முல்லை. 13), திருமறு மார்பன் (பரி. 1 – 36 - 39), நேமியான் (முல்லைக்கலி. 5 – 9 - 10), திகிரியோன் (முல்லைக்கலி. 4 – 78 - 79), செல்வன் (பரி. 4: 4 - 9), முதல்வன் (பரி. 3 – 41 - 45), நெடியோன் (மதுரை. 456 - 60), முந்நீர் வண்ணன் (பெரும்பாண். 29 - 30), வெய்யோன் (புறம். 56: 5 - 6), மாய வண்ணன் (பதிற். 9 - 10), அறிதுயிலோன் (பரி. 13: 26 - 27), கேசவன் (பரி. 3: 31 - 35) என்னும் பெயர்கள் சங்க இலக்கியங்களில் வழங்கப்படுகின்றன. திருமால் குறித்து வழங்கப்படும் மாயோன் என்னும் சொல் பெரியவன் கரியவன் என்னும் பொருள்களில் இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன. பரிபாடல், முல்லைப்பாட்டு ஆகிய இலக்கியங்களில் திருமாலை மாயோன் என்றே சிறப்பித்து அவனுடைய செயற்கருஞ் செயல்களை எடுத்துக் கூறியுள்ளன. கார் நாற்பது திருமாலை “பொருகடல் வண்ணன்” என்று குறிப்பிடுகிறது. நான்மணிக்கடிகை “மாயவன்” என்று கூறுகிறது.

திருமால் கரிய நிறமுடையவன் என்றும் அவனைப் பணிந்து வணங்கும் அடியார்களின் பிறவியாகிய நோயை நீக்கும் பிறவா வரத்தை அருள்பவன் என்று பரிபாடல் கூறுகிறது. முல்லைப்பாட்டு

கார்கால மழை பெய்யும் பான்மையினைத் திருமாலின் செயற்கருஞ் செயலுடன் ஒப்பிட்டு சிறப்பிக்கின்றது. சக்கரத்தோடு வலம்புரி சங்கினை ஏந்திய கைகளையும் திருமகள் கொண்டிருக்கும் மார்பினை உடையவன் திருமால் அவன் 'வாமன அவதாரம்' எடுத்து மாவலியிடம் இருந்து அவன் கையில் நீர் வார்த்த அளவில் விண்ணையும் மண்ணையும் தொடுமாறு உயர்ந்தது போல இருந்தது. (முல்லை. 1 - 3).

திருமாலை மாயோன் என்று அழைப்பதற்கான காரணங்களை 'மை' என்னும் வேர்ச்சொல்லில் இருந்து பிறந்த 'மாய்' மாயோன் ஆகும். 'மை' என்ற சொல்லுக்கு கருமை என்ற பொருள் உண்டு. கரிய நிறமுடையவன் என்ற பொருளிலும் மயக்கத்தைத் தரக்கூடியவன் என்ற மாயங்களைச் செய்யக் கூடியவன் என்ற பொருளிலும் மாயோன் என்றும் வழங்கப்பட்டுள்ளன. 'மை, மால், மாகம்' போன்ற சொற்கள் கருமை நிறத்தையே குறிக்கின்றன. "கிரேக்கம் (மைத்தோன்) வடமொழி மைதுனம் ஆங்கிலம் (மைத்) ஆகிய மொழிகளிலும் கருமையைக் குறிப்பதாகக் கூறுவர்"[8].

## தோற்றம்

திருமாலின் தோற்றம் குறித்தும் அவதாரச் சிறப்புகள் குறித்தும் சங்க இலக்கியங்களில் பல்வேறு குறிப்புகள் காணக்கிடைக்கின்றன. திருமால் ஆயிரம் தலைகளை உடைய ஆதிசேடன் என்னும் பாம்பின் மேல் பள்ளி கொண்டிருப்பவன் என்று பரிபாடல் குறிப்பிடுகிறது.

**“தன் உரு உறழும் பாற்கடல் நாப்பண்**

**மின்னவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த**

**கவைநா அருந்தலைக் காண்பின் சேக்கை”** (பரி. 13: 26 – 29).

திருமால் செம்மை நிறமான கண்களையும் கருமை நிறமான உடலையும் உடையவன் ஆயினும் பரிபாடல் திருமாலை கருமை நிறமான கண்களையும் வெண்மை நிறமான உடம்பினையும் உடைய பலதேவன் என்றும் சிவந்த உடம்பினை உடைய காமன் என்றும் பசுமை நிறமுடைய அநிருத்தன் என்றும் திருமால் குறித்து சிறப்பிப்பதைக் காணலாம்.

**“செங்கட் காரி கருங்கண் வெள்ளை**

**பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்”** (பரி. 3: 81 - 82**)**

திருமாலின் அவதாரங்களை பத்தாகக் கூறுவர். சங்க இலக்கிய நூல்களில் முல்லைப்பாட்டு, பெரும்பாணாற்றுப்படை, கலித்தொகை ஆகிய இலக்கியங்களில் வாமன அவதாரம் குறித்த செய்திகள் காணப்படுகின்றன.

**“திகழ் ஒளி முந்நீர் கடைந்த அக்கால் வெற்புத்**

**திகழ்பெழ வாங்கி தம்சீர்ச் சிரத்தேற்றி**

**மகரமறி கடல் வைத்து நிறுத்து”** (பரி. திரட்டு. 1: 64 - 66).

தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த காலத்தில் திருமால் ஆமை உருக்கொண்டு கடல் அடியில் இருந்த மேருவைக் கொண்டு வந்து நிலைபெறச் செய்தவன் என்னும் செய்தி மேற்கண்ட பாடலடிகளில் காணக்கிடைக்கிறது.

திருமாலின் வராக அவதாரம் குறித்தும் நரசிம்ம அவதாரம் குறித்தும் வாமன் அவதாரம் குறித்தும் இராம அவதாரம் குறித்தும் இலக்கியங்களில் செய்திகள் பதிவு பெற்றுள்ளன.

**“கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய**
**ஊழி ஒருவினை உணர்த்தலின் முதுமைக்கு**
**ஊழி யாவரும் உணரா**
**ஆழி முதல்வ நிற்பேணுதும் தொழுது”** (பரி. 2: 16 - 19)

**“புருவத்துக் கருவல் கந்தரத்தால்**
**தாங்கி இவ்வுலகம் தந்து அடிப்படுத்ததை நடுவண்**
**ஓங்கிய பலர்புகழ் குன்றினோடு ஒக்கும்”** (பரி. 4: 22 - 24)

**“வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த**
**பல்வீழ் ஆலம் போல**
**ஒலிஅவிந் தன்று இவ் அழுங்கல் ஊரே”** (அகம். 70: 15 - 17)

திருமால் குறித்த தொன்மம் சங்கப் பாக்களில் இடம் பெற்றிருக்கும் காரணத்தால் திருமாலின் வடிவம் குறித்த சிந்தனை சங்க காலத்திலேயே மக்கள் இறைச் சிந்தனை உடையவர்களாக இருந்தனர் என்பதை அறியலாம்.

## கொடியும் வாகனமும்

திருமால் கருடக் கொடியை உடையவன் என்றும் அவனுக்குரிய ஊர்தியும் கருடனே என்றும் இலக்கியங்களின் வழி அறிய முடிகின்றது. செவ்வாய் உவணத்து உயர் கொடியோயே (பரி. 2: 60)

என்னும் பரிபாடல் அடி செம்மை நிறமான அலகினை உடைய கருடப்பறவை வரையப்பட்ட உயர்ந்த கொடியினைக் கொண்டவன் திருமால் என்பதை எடுத்துக்காட்டுகிறது. புள்ளணி பொலங் கொடி யவை (பரி. 15. 56) என்னும் அடியால் கருடப் பறவை எழுதிய அழகிய பொன்கொடியினை உடையவன் திருமால் என்பதை அறியலாம்.

**"படர்சிறைப் பல் நிறப் பாம்புப் பகையைக்**
**கொடியெனக் கொண்ட கோடாச் செல்வனை**
**ஏவல் இன்முது மொழி கூறும்**
**சேவல் ஓங்கு உயர்கொடிச் செல்வ"** (பரி. 13: 38 - 41).

என்னும் பரிபாடல் அடிகளால் பல நிறங்களைக் கொண்ட விரிந்த சிறகுகளையுடைய பாம்புக்குப் பகையானதுமான கருடக் கொடியினைக் கொண்டவன் திருமால் என்பதை அறியலாம்.

**"சேவல் ஓங்கு உயர்கொடி யோயே**
**சேவல் ஓங்கு உயர்கொடி**
**நின் ஒன்று உயர்கொடி பனை**
**நின் ஒன்று உயர்கொடி நாஞ்சில்**
**நின் ஒன்று உயர்கொடி யானை**
**நின் ஒன்றா உயர்கொடி ஒன்று இன்று"** (பரி. 4: 36 - 41)

கருடப் பறவை உருவம் தீட்டப்பட்ட கொடியினை உடையவன். பனைக் கொடியினை உடையவன், யானைக் கொடியினை உடையவன், கலப்பைக் கொடியினை உடையவன் என்று பல கொடிகளை உடையவன் திருமால் என்று குறிப்பிடப்பட்டாலும் அனைத்து கொடிகளிலும் கருடக் கொடியே சிறப்புடையது என்று

பரிபாடல் குறிப்பிடுகிறது. திருமாலின் கொடியாக கருடக் கொடி இருப்பதனைப் பரிபாடல் உரை பின்வருமாறு விளக்குகிறது.

திருமாலுக்குரிய சிறப்புக் கொடி கருடக்கொடி, பனைக்கொடி, நாஞ்சில் கொடி, யானைக்கொடி ஆகிய பல சொற்கள் இருப்பினும் அவை அவனது சிறப்புக் கொடியாகிய கருடக்கொடிக்கு ஒப்பாகமாட்டா ஏனெனில் நஞ்சினையுடைய பாம்பின் உடல் உயிர் ஆகியவற்றை உண்ணும் இயல்புடையது கருடனாதலால் சிறப்பு மிக்கது ஆகும். மேலும் கருடன் வயிற்றில் பட்டிகையாகக் கட்டியிருப்பதும் தோள் வளையாக அணிந்ததும், மாலையாக அணிந்ததும், கழுத்தில் அணிகலனாக அணிந்ததும், தலைமேல் சூடிய சூட்டும் சிறகுகளில் அணிந்தனவும் ஆகிய அனைத்தும் பாம்புகளேயாம். பகைவரைத் தம் மறக் கருணையால் வெற்றி கொள்ளும் திருமால் கொடியின் மேலிருந்த அக்கருடன் எறிந்து எடுக்கும் இரையும் பாம்பே என்கிறார். இவ்வாறு கூறுவதனால் கருடக் கொடியின் சிறப்பு விளங்குகிறது.

## திருமாலின் மாலை

திருமாலுக்குரிய மாலை துழாய் மாலை. துழாய் என்னும் பெயர் துளசியைக் குறிக்கும். இதனைப் பரிபாடல் நக்கலர் துழாஅய் நாறிணர்க் கண்ணியை (பரி. 4: 58) என்னும் அடியினால் திருமால் திருமேனி போன்ற திருமேனியின் மீது மணம் கமழும் கொத்துக்களில் இருந்து கட்டவிழ்ந்து மலர்ந்த துழாயினால் தொடுக்கப்பட்ட மாலையினை உடையவன் திருமால் என்பதை அறியலாம். இதனால்

திருமாலுக்குரிய மாலைகளில் துழாய்மாலை சிறப்புடைத்து என்பதை அறியலாம். அகநானூறு பல்வண்ண மலர்களை உடைய மாலையை மார்பில் அணிந்து தோற்றம் தருபவன். மாலை இந்திரவில் போன்று காணப்படுவதாகவும் குறிப்பிடுகிறது.

**“மாயிரு விசும்பில் கடி இடி பயிற்றி**
**நேர்கதிர் நிரைத்த நேமிஅம் செல்வன்**
**போர் அடங்கு அகலம் பொருந்திய தார்போல்**
**திருவில் தேஎத்துக் குலைஇ”** (அகம். 175: 13 - 16)

கலித்தொகை கடற்கரையில் கருமணலில் உதிர்ந்து கிடக்கும் மலர்களும் திருமாலின் மாலையை ஒத்துக் காட்சியளிப்பதாக குறிப்பிடுகிறது.

**“தெரியிணர் ஞாழலும் தேம்கமழ் புன்னையும்**
**புரிஅவிழ் பூவின கைதையும் செருந்தியும்**
**விரிஞிமிறு இமிர்ந்து ஆர்ப்ப இருந்தும்பி இயைபு ஊதச்**
**செருமிகு நேமியான் தார்போலப் பெருங்கடல்”** (கலி. 127:1 - 4)

பூங்கொத்துக்களை உடைய ஞாழல், தேன் மணக்கும் புன்னை, தாழை, செருந்தி முதலான மலர்கள் கடற்கரைக் கருமணலில் உதிர்ந்து கிடப்பது கருமை நிறமுடைய மாலையை ஒத்துக் காணப்படுவதாக மேற்கண்ட பாடலடிகள் குறிப்பிடுகின்றன. பரிபாடல் திருமாலின் மார்பில் இருக்கும் மாலையை அருவிக் காட்சியுடன் ஒப்பிடுகிறது (பரி. 13: 3 - 4). திருமாலின் மாலை குறித்துக் காணப்படும் சான்றுகள் திருமாலின் மாலை, மாலையின்

அழகு உவமைகள் ஆகியவற்றை எடுத்துக்கூறும் சான்றுகளாகின்றன.

## திருமாலின் ஆயுதங்கள்

திருமாலின் ஆயுதங்களுள் வலிமை மிக்கது சக்கரம் இது 'நேமி' என்று அழைக்கப்படும். திருமாலின் சக்கரம் வலிமை மிக்கது என்றும் எதிரிகளை வெல்லும் தன்மையது என்றும் பாடல்கள் குறிப்பிடுகின்றன. அகநானூறு நிரம்பிய ஆரங்கள் கொண்ட சக்கரப் படையினை உடையவன் என்று திருமாலைக் குறிப்பிடுகிறது. இதனை "நோக்கதிர் நிரைத்த நேமிஅம் செல்வன்" (அகம். 175: 14) என்னும் பாடலடி உணர்த்தும். "பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமி" (கலி. 104: 9) என்னும் அடி போரில் முரண்பட்ட பகைவரைச் சக்கரப்படை கொண்டு அழிக்கும் தன்மையன் திருமால் என்பதைக் குறிப்பிடுகிறது. பகைவரை வென்றொழிக்கும் தன்மை உடையது (பரி. 4) என்று பரிபாடலும் திருமாலின் சக்ராயுதத்தைச் சிறப்பித்திருக்கிறது. பரிபாடல் திருமாலின் கரத்தில் உள்ள சக்கரமும் சங்கும் இரு சுடர்களான சூரியனும் சந்திரனும் போன்றவை என்று குறிப்பிடுகிறது இதனை,

**"தண்ணளி கொண்ட அணங்குடை நேமிமால்**
**பருவம் வாய்த்தலின் இருவிசும்பு அணிந்த**
**இருவேறு மண்டிலத்து இலக்கம் போல"** (பரி. 13: 6 - 8)

என்னும் அடிகளால் அறியலாம். திருமாலின் வெற்றிக்குரிய ஆயுதமாகவும் பகைவரை வென்றொழிக்கும் தன்மையதாகவும்

திருமாலின் சக்கரம் விளங்குவதாக இலக்கியச் சான்றுகள் குறிப்பிடுகின்றன. திருமாலின் சக்கரம் ஆற்றும் போர்த்திறனை மு. சண்முகம்பிள்ளை பின்வருமாறு கூறுகிறார். “சங்கு சக்கரப் படைகள் மாற்றாரின் செருக்குங்கால் சங்கம் இடியை ஒத்து முழங்கும் தன் முழக்கத்தால் பகைவரை நிலைகுலையச் செய்யும் சக்கரமோ பகைவர் உயிர் உண்ணும் கூற்றத்தை ஒக்கும், அதன் நிறமோ சுட்ட பொன்னோடு விளங்கும் நெருப்பின் கொழுந்தை ஒக்கும் இவ்விரு படைகளும் மாற்றார்க்கு மறுக்கம் செய்து கொன்றொழித்தல் தொழிலால் மேம்பட்டு நிற்றலை”[9] அறியலாம் என்று குறிப்பிடுவர். இக்கருத்தினை விளக்குவதாக பின்வரும் பாடலடிகள் அமைந்திருக்கின்றன.

**“ஒடியா உள்ளமொடு உருத்து ஒருங்கு உடன் இயைந்து**
**இடி எதிர் கழறும் – கால் உறழ்பு எழுந்தவர்**
**கொடி அறுபு இறுபு; செவி செவிடு படுபு**
**முடிகள் அதிர படிநிலை தளர**
**நனிமுரல்வளை முடி அழிபு இழிபு**
**தலை இறுபு தாரொடு புரள**
**நிலை தொலைபு வேர் தூர் மடல்**
**குருகு பறியா நீளிரும் பனைமிசைப்**
**பலபதினாயிரம் குலைதரை உதிர்வபோல்**
**நில்லாது ஒரு முறை கொய்பு கூடி**
**ஒருங்கு உருண்டு பிளந்து நெரிந்து உருள்பு சிதறுபு**
**அளறு சொரிபு நிலம் சோர**
**சேரார் இன் உயிர் செகுக்கும்**

**போரடு குருசில் நீ ஏந்திய படையே**

**ஒன்னார் உடங்கு உண்ணும் சற்றம் உடலே**

**பொன் ஏர்பு அவிர் அழல் நுடக்கு அதன் நிறனே"** (பரி.2:36-51)

**திருமாலின் நிறம்**

திருமாலின் நிறத்தை இலக்கியங்கள் சிறப்பித்துக் கூறியிருக்கின்றன. கலித்தொகை திருமாலை "நீலநிற வண்ணன்" (கலி. 104: 38) என்று சிறப்பிக்கிறது. நன்றாகத் தூய்மை செய்யப்பட்ட நீல மணி போன்றும் கரிய நிறமான கார்மேகத்தைப் போன்றும் கடலின் கரிய நிறம் போன்றும் காரிருளைப் போன்றும் பூவை மலர் போன்றும் திருமாலின் உடல் ஒளி மிகுந்து விளங்கியதாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. (புறம் 56: 5, 58: 15, பெரும். 30, 402, பரி. 1: 4 – 62, 2: 52, 4: 67, 13: 42 – 43, 43: 15 – 50, கலி. 119: 3).

பரிபாடல் நீல நிறமான மாலையில் தோன்றும் இளமையான ஞாயிற்றின் ஒளி போன்று திருமால் தலையில் அணிந்துள்ள முடி விளங்குவதாகக் குறிப்பிடுகின்றது.

**"மணி வரை ஊர்ந்த மங்கில் ஞாயிற்று**

**அணிவனப்பு அமைந்த பூந்துகில் புனைமுடி"** (பரி. 13: 1 - 2)

**உறவு**

தமிழர்களின் வழிபாட்டு முறைகளில் குறிப்பிடத்தக்க நிகழ்வுகளுள் உறவு நிலைகளைத் தெய்வங்களுக்குள் ஏற்படுத்துவதாகும். திருமால் மனைவியர்களாகத் திருமகளையும் நில மகளையும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. "திருமால் மார்பில்

வீற்றிருப்பவள் திருமகள். நில மகளையும் அவன் அணைத்துக்கொள்கிறான். அவனுக்குக் குடையாகவும் படுக்கையாகவும், பிறவாகவும் தொண்டு புரிவது ஆதிசேடன். அவனுடைய ஊர்தி கருடன் அவனுடைய உந்தித் தாமரையில் வந்தன. நான்முகன் காமனும் அவனுடைய புதல்வனே. ஆகவே திருமகள், நிலமகள், ஆதிசேடன், கருடன் நான்முகன் காமன் காமன் தம்பி காமன்”[10] ஆகியோரைத் திருமாலுடன் உறவு உடையவர்களாகக் குறிப்பிடுவர்.

திருமாலின் மனைவியாகத் திருமகளைக் கூறும் வழக்கு உண்டு இதனைப் பரிபாடல் “திருவின் கணவ” (பரி. 3: 90) என்று குறிப்பிடுகிறது. திருமகளுக்கு “செய்யாள்” (பரி. 2: 31) என்னும் பெயர்கள் வழங்கப்படுகின்றன. “திருமகள் திருமாலின் மார்பில் வீற்றிருத்தல்” குறித்துப் பரிபாடல் குறிப்பிடுகிறது (பரி. 4: 59) திருமகள் திருமாலின் மனைவி என்பதுடன் செல்வத்திற்கு உரியவளாகவும் போற்றப்படுகிறாள். உறையூரின் அழகிய மதிலின் திருமகள் வீற்றிருந்து வளம் செய்ததாக அகநானூறு குறிப்பிடுகிறது. அவ்வாறு செல்வத்திற்கு உரியவளாகவும் விளங்கும் பான்மையினைப் புறநானூறு விளக்குகிறது.

**“விட்டோரை விடாஅள் திருவே**
**விடாஅதோர் இவள் விடப்பட்டோரே”** (புறம். 358: 6 - 7)

பூமியைப் பெண்ணாகக் கூறும் மரபும் பூமகளைத் திருமாலின் மனைவி என்று கூறும் மரபும் உண்டு என்பதை இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. திருமால் வராக அவதாரத்தில் கற்பத்தில் நீரில்

அடியில் மூழ்கிய நிலமகளை மீட்டுக்கொண்டு வந்ததுடன் நிலமகளையும் மணம் புரிந்த தன்மையினைப் பரிபாடல் தெளிவுபடுத்துகிறது.

**“வளர்திரை மண்ணிய கிளர்பொறி நாப்பண்**
**வைவால் மருப்பின் களிறுமணன் அயர்வு**
**புள்ளி நிலனும் புரைபடல் அரிதென**
**உள்ளுநர் உரைப்போர் உரையடு சிறந்தன்று”** (பரி.2:32-35)

திருமாலின் துணையாக படுக்கையாக அமைவது ஆதிசேடன். பெரும்பாணாற்றுப்படை திருமால் ஆதிசேடன் என்னும் பாம்புப் படுக்கையில் துயில் கொள்ளும் காட்சியை மலைச் சாரலில் படுத்துக் கிடக்கும் யானைக்கு உவமையாக குறிப்பிடுகிறது. இதனை,

**“நீடுநிலைக் காந்தள் அம்சிலம்பில் களி படிந்தாங்கு**
**பாம்பனைப் பள்ளி அமர்ந்தோன் ஆங்கன்”**

(பெரும்பாண். 371 - 373)

என்று குறிப்பிடுகிறது. கருடன் அணையாக அமைவதுபோல் கருடன் திருமாலின் வாகனமாக அமைந்திருக்கிறது. திருமால் பாம்பை அடக்கியதுடன் பாம்பைத் துன்புறுத்தும் கருடனையும் அடக்கித் தனக்குரிய வாகனமாகக் கொண்டார் என்று பரிபாடல் குறிப்பிடுகிறது. (பரி. 4: 42 - 48).

நான்முகனாகிய பிரமன் திருமாலின் உந்தித் தாமரையில் பிறந்தவன் என்பதைக் கொண்டு திருமாலின் மகனாகக் குறிப்பிடும் மரபு உண்டு. இதனால் நான்முகனுக்கும் பூவன் என்னும் பெயர் உண்டு என்று பரிபாடல் குறிப்பிடுகிறது. (பரி. 1: 49)

கலித்தொகை திருமாலிடம் இருந்து ஆதியில் தோன்றியவன் என்னும் பொருள்பட “தொடங்கற்கண் தோன்றிய முதியவன்” (கலி. 2: 12) என்று குறிப்பிடுகிறது. காமன் சாமன் ஆகியோரை கலித்தொகை திருமாலின் மக்களாகக் குறிப்பிடுகிறது. (கலி. 140: 7)

## வழிபாட்டு முறையும் சிறப்புகளும்

திருமால் வழிபாட்டு முறைகளும் சிறப்புகளும் குறித்துச் சங்க இலக்கியங்களில் பரந்த அளவில் கருத்துக்கள் காணக்கிடக்கின்றன. வேதங்களால் புகழப்படும் திருமாலின் சிறப்புகளைக் குறித்து அவனை வழிபடுபவர்கள் பலவாறாக ஏத்தும் பகுதிகள் இலக்கியங்களில் காணக்கிடைக்கின்றன.

**“நினக்கு விரிந்து அகன்ற கேள்வி அனைத்தினும்**
**வலியினும் மனத்தினும் உணர்வினும் எல்லாம்**
**வனப்பு வரம்பு அறியா மரபினோயே**
**அணிநிழல் வயங்கு ஒளி ஈர் – எண் தீம் கதிர்**
**பிறைவளர் நிறைமதி உண்டி**
**அணி மணிப் பைம்பூண் அமரர்க்கு முதல்வன் நீ**
**திணி நிலம் கட்ந்தக்கால் திரிந்து அயர்ந்து அகன்று – ஓடி**
**நின் அஞ்சிக் கடற்பாய்ந்த பிணி; நெகிழ்பு அவிழ் தண்தார்**
**அன்னவர் பட எல்லா அவுணர்க்கும் முதல்வன் நீ**
**அதனால் பகைவர் இவர் இவர் நட்டோர் என்னும்**
**வகையும் உண்டோ நின்மரபு அறிவோர்க்கே”** (பரி. 3: 48-58)

திருமால் வேதங்களால் புகழப்படுபவன் வேத முதல்வன் என்று குறிப்பிடப்படுகிறான், திருமால் வேதங்கள், ஆகமங்கள், மனம்,

உணர்வு முதலானவற்றால் அறிய இயலாதவன், அவன் தன்னை வணங்குவார்க்கும் பகைவர்களுக்கும் முதல்வனாக இருப்பவன் என்று குறிப்பிடுகிறது.

திருமால் ஐம்புலன்களாகவும் புலன்களின் செயல்களாகவும் ஐம்பூதங்களாகவும் உலக இயக்கத்தின் காரணனாக இருப்பவன் என்று பரிபாடல் குறிப்பிடுகிறது. இதனை,

**"சுவைமை இசைமை தோற்றம் நாற்றம் ஊறு**
**அவையும் நீயே அடுபோர் அண்ணால்**
**அவைஅவை கொள்ளும் கருவியும் நீயே**
**முத்துயாம் கூறிய ஐந்துள்ளும்,**
**ஒன்றனில் போற்றிய விசும்பு நீயே**
**இரண்டின் உணரும் வளியும் நீயே**
**மூன்றின் உணரும் தீயும் நீயே**
**நான்கின் உணரும் நீரும் நீயே**
**ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே**
**அதனால் நின் மருங்கின்று – மூ – ஏழ் உலகமும்**
**மூலமும் அறனும் முதன்மையின் இகந்த**
**காலமும் விசும்பும் காற்றொடு கனலும்"** (பரி.13:14 - 25)

என்னும் பாடலடிகள் வலியுறுத்தும். உலகப் பொருள்களில் எல்லாம் திருமால் நிறைந்திருக்கும் பான்மை அடியார்களின் சிந்தனையால் தெளிவுபடுத்தப்படுகிறது.

**"தீயினுள் தெறல் நீ பூவினுள் நாற்றம் நீ**
**கல்லினுள் மணியும் நீ சொல்லினுள் வாய்மை நீ**
**அறத்தினுள் அன்பு நீ மரத்தினுள் மைந்து நீ**

**வேதத்து மறை நீ பூதத்து முதலும் நீ**

**வெஞ்சுடர் ஒளியும் நீ திங்களுள் அளியும் நீ**

**அனைத்தும் நீ அனைத்தின் உட்பொருளும் நீ”** (பரி. 3: 63 - 68)

உலகத்தின் தோற்றம் நிலைத் தன்மை ஒடுக்குதல் முதலான பணிகளை எல்லாம் மேற்கொண்டு உலகின் வாழ்வுக்குக் காரணமாக திருமால் என்னும் சிந்தனை முன் வைக்கப்படுகிறது. திருமால் வெம்மை, தண்மை, வன்மை, நோன்மை, ஒண்மை தோற்றம், அகலம், உருவம் ஒலி ஒடுக்கம் அவை, இவை, உடை என்னும் சிந்தனை பரிபாடலில் முன்வைக்கப்படுகிறது.

“**நின்வெம்மையும் விளக்கமும் ஞாயிற்று உள**

**நின் தண்மையும் சாயலும் திங்கள் உள**

**நின் சுரத்தலும் வண்மையும் மாரி உள**

**நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்து உள**

**நின் நாற்றமும் ஒன்மையும் பூவை உள**

**நின் தோற்றமும் அகலமும் நீரின் உள**

**நின் உருவமும் ஒலியும் ஆகாயத்து உள**

**நின் வருதலும் ஒடுக்கமும் மருந்தின் உள**

**அதனால் இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும்**

**ஏமம் ஆர்ந்த நிற்பிரிந்து**

**மேவல் சான்றன எல்லாம்”** (பரி. 4: 25 - 35)

திருமால் உலகப் பொருள்களில் எல்லாம் நிறைந்து விளங்குபவன். திருமால் எல்லாத் தெய்வங்களுமாக இருந்து அருள்பவன் என்னும் சிந்தனையைப் பரிபாடல் முன்வைக்கிறது. ஆலமரம் கடம்பமரம் ஆறு

குன்றம் என எல்லா இடங்களிலும் எழுந்தருளி அருள் புரிபவன் என்னும் சிந்தனையைப் பரிபாடல் பதிவு செய்துள்ளது.

**"அழல் புரை குழைகொழு நிழல்தரும் பலசினை**
**ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்**
**கால் வழக்கு அறுநிலைக் குன்றமும் பிறவும்**
**அவ்வவை மேவிய வேறுவேறு பெயரோய்**
**எவ்வயினோயும் நீயே நின் ஆர்வலர்**
**தொழுதகை அமைதியின் அமர்ந்தோயும் நீயே**
**அவரவர் ஏவலா ளனும் நீயே**
**அவரவர் செய்பொருட்கு அரணமும் நீயே"** (பரி. 4: 66 - 73)

திருமாலின் தோற்றம், நிறம் முதலான நிலைகளில் திருமாலின் உருவ அமைப்பு சிறப்பிக்கப்படுகிறது. அருள், வழிபாட்டு முறைகள் இலக்கியங்களின் வழி எடுத்துக்காட்டப்படுகின்றன.

## சேயோன் (முருகன்)

சேயோன் குறிஞ்சிக்குரிய தெய்வமாகத் தொல்காப்பியரால் குறிப்பிடப்படுகிறான். "சேயோன் மேய மைவரை உலகம்" என்னும் அடி இதனை உணர்த்தும் (தொல். பொருள். அகத். 5: 2) சங்கப் புலவர்கள் முருகு, முருகன், சேய், சேயோன், வேள், செவ்வேள், நெடுவேள், வேலன், வேலன் என்னும் பெயர்களால் முருகனைக் கூறுவர். முருகு என்றால் அழகு. அழகு தெய்வமாகிய முருகனையும் இப்பெயர் குறிக்கும். முருகன் என்றால் 'அழகன்' என்பது பொருளாகும். என்றும் இளையாய் அழகியாய் ஏறூர்ந்தர் ஏறே என்று நக்கீரர் குறிப்பிடுகிறார். இளமையோன் அழகன் என்னும்

இருபொருள் பயப்பதாய்க் ‘குழகன்’ என்னும் ஒரு பெயரும் முருகனுக்கு உரியது. செந்நிறம் பொருந்தியவனாதலின் சேய், சேயோன் எனப் பெற்றான். வீரப்பெருங் கடவுளாதலின் வேள் என்றும் அவன் திருவுருவைக் கருதிச் செவ்வேள், நெடுவேள் என்றும் போற்றப் பெறுவானாயினன் வேல் தாங்கிய வீரர் பெருந் தெய்வமாதலின் வேலன், வேலான் என்று புகழப்படுகிறான்”[11].

## முருகனின் வேறு பெயர்கள்

முருகப் பெருமானைத் தமிழ்க் கடவுள் என்று அழைக்கும் வழக்கம் உண்டு. உலகில் தோன்றிய நில வடிவங்களுள் முதல் வடிவம் மலை வடிவம் என்று கூறுவர். அதனை அடிப்படையாகக் கொண்டு ஆதி முதல் தெய்வமாக முருகனைக் கருதுவதுமுண்டு. சங்க இலக்கியங்களில் முருகனின் பெயர்கள் அதிக அளவில் இருப்பதனைக் காணலாம்.

தொல்காப்பியர் முருகனை சேயோன் என்று அழைக்கிறார். முருகன் குறித்து சங்க இலக்கியங்கள் முருகு (நற். 225: 3, அகம். 118: 5, 138: 10, 288: 4, புறம். 56: 14, ஐங். 245: 3, 247: 3, 249: 2, பட்டினப். 269) என்று பதிவு பெற்றுள்ளது. “வேள்” (பதி. 11. 6) “செவ்வேள்” (பட்டினப். 154), நெடுவேள் என்றும், (நற். 179. 103, 288: 10, அகம். 98: 27, 120: 1, 272: 15, 385: 5, பெரும். 75, குறிஞ்சி. 174, மதுரைக். 164) முருகு என்று (குறுந். 112: 2) முதலான பெயர்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

சிலம்பில் செவ்வேள், வேலன் என்ற பெயர்கள் முருகனுக்கு வழங்கப்படுகிறது. அவன் "ஆலமர்ச் செல்வன் புதல்வன்" (சிலம்பு. 13: 3) என்றும் "கயிலை நன்மலை இறைமகன்" (சிலம்பு. 24: 16 - 1) மலைமகள் மகன் (சிலம்பு 24. 17: 1) "ஆறுமுகன்" (24. 18.2) வேலன் (25. 25) என்றும் அழைக்கப்படுவதாக இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார்."

## மலைக்குரிய கடவுள் முருகன்

முருகப் பெருமானை மலை நிலத்திற்குரிய கடவுளாகக் கொள்வது வழக்கம். முருகன் குன்றவர்கள் வணங்கும் தெய்வமாகையால் திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் முருகப்பெருமானை குறிஞ்சிக் கிழவன் என்று குறிப்பிடுகிறார். முருகன் மலையில் இருப்பதனைக் குறிஞ்சிப்பாட்டு விளக்குகிறது.

**பிறங்கு மலை மீமிசைக் கடவுள்** (குறிஞ்சி. 208 - 209)

வெறியாட்டு என்னும் நிகழ்ச்சி மலைப்பகுதியில் வாழும் மக்களால் நடத்தப்படும் நிழ்வாக இருப்பதனால் குறிஞ்சி நிலத்தில் வேலன் வெறியாடல் நிகழும் என்று அகநானூறு முருகப்பெருமானைக் குறிப்பிடுகிறது.

**"வெறிகமழ் நெடுவேள்"** (அகம். 98: 27)

என்னும் அடிகளின் வாயிலாக காணலாம்.

## முருகன் உறையும் இடங்கள்

முருகப் பெருமான் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோராடல், பழமுதிர்ச்சோலை என்னும் படைவீடுகளில் வீற்றிருந்து அருள் தருவதாகத் திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது. முருகப் பெருமான் படை வீடுகள் தவிர பிற இடங்களிலும் இருப்பவன் என்பதனைத் திருமுருகாற்றுப்படை தெளிவுபடுத்துகிறது.

**"ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்**
**ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்**
**வேலன் தைஇய வெறியயர் களனும்**
**காடும் காவும் கவின் பெறு துருத்தியும்**
**யாறும் குளனும் வேறுபல வைப்பும்**
**சதுக்கும் சந்தியும் புதுபூங் கடம்பும்**
**மன்றமும் பொதியியலும் கந்துடை நிலையினும்"**

**(திருமுரு.220-226)**

என்னும் அடிகள் உணர்த்தும் இவ்வடிகள் முருகப் பெருமான் ஊர்கள் தோறும் நடைபெறும் விழாக்கள், சான்றோர் போற்றி வழிபடும் இடங்கள், வெறியாட்டு களங்கள், காடு, சோலை, ஆற்றின் இடைக்குறை, ஆறு, குளம் எனப் பல்வேறு இடங்கள் நாற்சந்தி, முச்சந்தி, கடம்பமரத்தின் அடி, மன்றம், பொதியில், தெய்வத்தை நிறுத்தி நடப்பட்ட கற்கள் ஆகிய இடங்களில் முருகப்பெருமான் எழுந்தருள்வான் என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

## முருகனின் தோற்றம்

முருகப் பெருமானின் தோற்றம் பிறப்பு குறித்துத் திருமுருகாற்றுப்படையும் பரிபாடலும் புறநானூறும் குறிப்பிடுகின்றன. பரிபாடலில் இடம் பெறும் ஐந்தாம் பாடல் முருகப் பெருமானின் தோற்றச் சிறப்பினை விரிவான நிலையில் பதிவு செய்துள்ளது. மேலும் முருகப்பெருமானின் தோற்றம் பிறப்பு ஆகியன புராணத்தை அடியொற்றியதாக அமைகின்றன எனலாம்.

நான்முகன் நான்கு வேதங்களையும் தேராக ஓட்டிக் கொண்டு செல்கிறான். அதில் சிவபெருமான் ஏறிச் சென்று பொன், வெள்ளி, இரும்பு என்னும் மூன்று மதில்களையும் இமய மலையை வில்லாகவும் வாசுகி என்ற பாம்பினை நாணாகவும் கொண்டு தீ உமிழும் அம்பினால் அழித்தான். தக்கனின் வேள்வியை அழித்தவனும் சினத்தால் சிவந்த கண்களையும் உடையவனுமாகிய சிவபெருமானை உமையம்மையை மணம் செய்து அவளுடன் கூடும் புணர்ச்சியை இந்திரன் வேண்டுகோளுக்கு இணங்கித் தவிர்த்தான். அப்போது இந்திரன் சிவனிடம் சென்று புணர்ச்சியில் தோன்றிய கருவினை அழிக்க வேண்டும் என்னும் வரத்தினைப் பெற்றான். சிவபெருமான் வாய்மை தவறாதவன் கருவினைப் பல துண்டுகளாகச் சிதைத்து இந்திரனிடம் கொடுத்தான். இந்திரனிடமிருந்து சப்தரிஷிகள் ஏழுபேரும் (முனிவர்கள்) பெற்றுக் கொண்டு கரு பின்னாளில் ஆறுமுகக் கடவுளாகும் தன்மையது என்பதை தன் ஞானத்தால் உணர்ந்து கொண்டு கருவைத் தம் மனைவியர் அப்படியே ஏற்று

வளர்த்தால் கற்புக்குக் குறை ஏற்படும் என்று கருதி வேள்வி வளர்த்துக் கருவை வேள்வித் தீயில் இட்டனர் தீயில் எஞ்சிய தூய கருவினை ஏழு பெண்களுள் அருந்ததி தவிர மற்ற பெண்கள் ஏந்தி உண்டனர் என்று குறிப்பிடுகிறது.

கார்த்திகைப் பெண்கள் உண்ட தூய்மைபடுத்தப்பட்ட கரு கார்த்திகை பெண்களின் வயிற்றில் வளர்ந்தது அறுவரும் சரவணப் பொய்கையில் உள்ள தாமரை மலர்களில் ஆறு குழந்தைகளைப் பெற்றெடுத்தனர். இந்திரன் சினம் கொண்டு தன் வச்சிராயுதத்தைக் கொண்டு வெட்ட ஆறு குழந்தைகளும் ஓர் உருவமாகி இந்திரனை முருகப்பெருமான் வெற்றி கொண்டான்,

**“மறுஅறு கற்பின் மாதவர் மனைவியர்**
**நிறைவயின் வழாஅது நிற் சூலினரே**
**நிவந்து ஓங்கு இமயத்து நீலப் பைஞ் சுனைப்**
**பயந்தோர் என்ப, பதுமத்துப் பாயல்;**
**பெரும்பெயர் முருக! நிற்பயந்த ஞான்றே**
**அரிது அமர் சிறப்பின் அமரர் செல்வன்**
**எரி உமிழ் வச்சிரம் கொண்டு, இகந்து வந்து எறிந்தென**
**அறுவேறு துணியும் அறுவர் ஆகி**
**ஒருவனை; வாழி ஓங்கு விறல்சேஎய்!”** (பரி. 5: 46 - 54)

என்னும் செய்தி முருகனின் தோற்றத்தினைப் பரிபாடல் கூறுகிறது. திருமுருகாற்றுப்படை முருகனின் தோற்றத்தை,

**“அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி**
**நெடும்பெருஞ் சிமயத்து நீலப் பைஞ்சுனை**

**ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப**

**அறுவர் பயந்த ஆறமர் செல்வ"** (திருமுரு. 235 - 55)

என்னும் அடிகளால் முருகப் பெருமானின் தோற்றச் சிறப்பினை எடுத்துக் கூறுகிறார். இதே போன்று சிலம்பில் முருகப் பெருமானின் தோற்றத்தைக் குன்றக் குரவையில் பதிவு செய்கிறார் இளங்கோவடிகள். கடம்ப மாலை மாலையாகச் சூடிக் கையில் வேலேந்திச் சேவலைக் கொடியாகவும், மயிலை ஊர்தியாகவும் கொண்டு ஆறு முகங்களுடன் காட்சி தருபவன் என்றும் முருகனின் தோற்றத்தை,

"**அணிமுகங்க ளோராறு மீராறு கையும்**
**இணையின்றித் தானுடையா னேந்திய வேலன்றே**
**பிணிமுகமேற் கொண்டு அவுணர் பீடழியும் வண்ணம்**
**மணி விசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே"**[12]

(சிலம்பு. 4:9)

## முருகப் பெருமானின் வாகனமும் கொடியும்

முருகப்பெருமான் வீற்றிருந்து அருள் தரும் திருத்தலங்கள் தோறும் முருகனுக்குரிய வாகனங்களும் கொடிகளும் காணப்படுகின்றன. முருகன் யானை, மயில் ஆகியவற்றை வாகனமாகக் கொண்டவன் என்பதை இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. முருகனின் யானை பிணிமுகம் என்று அழைக்கப்படுகிறது இதனை,

"**சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்**
**கடுஞ்சின விறல்வேள் களிறு ஊர்ந் தாங்கு"** (பதிற். 11: 5 - 6)

**“செங்களம் படக்கொன்று அவுணர்த் தேய்த்த**
**செங்கோல் அம்பின் செங்கோட்டு யானை”** (குறுந். 1: 1 - 2)

**“பிணிமுக ஊர்தி ஒண்செய் யோனும்”** (புறம். 56: 8)

**“பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு**
**சேய் உயர் பிணிமுகம் ஊர்ந்து” (பரி.** 5: 1 - 2)

**“ஊர்ந்ததை எரிபுரை ஓடை இடை இமைக்கும் சென்னி**
**பொருசமம் கடந்த புகழ்சால் வேழம்”** (பரி. 1 - 2)

என்னும் இலக்கியச் சான்றுகளால் அறியலாம். முருகப் பெருமானின் வாகனமாக மயில் விரைந்து பயணிக்கும் இயல்புடையது, இதனைப் பரிபாடல் “விரைமயில் மேல் ஞாயிறு” (பரி. 18: 20) என்று குறிப்பிடுகிறது. பரிபாடல் மயிலும் யானையும் கொடியாக அமையும் என்று குறிப்பிட்டு சேவல் கொடியும் முருகனுக்கு உரியது எனக் குறிப்பிடுகிறது. இதனைத் திருமுருகாற்றுப்படையும் குறிப்பிடும். இதனை, “பல்பொறி மஞ்ஞை வேல்கொடி அகவ” (திருமுருகு. 122) “நின் கொடி ஏற்று வாரணம் கொள் கவழ மிச்சில” (பரி. 19: 90 - 91) என்னும் சான்றுகள் உணர்த்தும்.

முருகப்பெருமானின் ஆடைகள் குறித்தும் அணிகலன் குறித்தும் திருமுருகாற்றுப்படை விரிவான குறிப்புகளைத் தருகிறது.

**“செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்**
**செயலைத் தண்தளிர் துயல்வரும் காதினன்**
**சூச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்**

**குழலன் கோட்டன் குறும்பல் வியத்தன்**
**தகரன் மஞ்ஞையன் புகரில் – சேவல் அம்**
**கொடியன் கெடியன் தொடியணி தோளன்**
**நரம்பு ஆர்த்தன்ன இன்குரல் தொகுதியொடு**
**குறும்பொறிக் கொண்ட நறுந்தன் சாயல்**
**மறுங்கில் கட்டிய நிலவேர்பு துகிலினன்"**

(திருமுருகு. 206 - 214)

இவ்வடிகள் முருகப்பெருமான் சிவந்த திருமேனியை உடையவன் சிவந்த ஆடையினை உடையவன் அசோகின் தளிர்கள் கிடந்து அசையும் செவியினை உடையவன், கச்சணிந்தவன், கழல் கட்டியவன், வெட்சி மாலையினைக் கழுத்தில் சூடியவன், சேவல் கொடியினை உயர்த்தியவன், தொடி அணி அணிந்த தோளினை உடையவன், தரையில் தோயும் அளவு மிக நீண்ட ஆடையினை உடுத்தியவன், பெரிய கைகளை உடையவன், மலைகள் தோறும் சென்று விளையாடும் தன்மையன் என்னும் செய்திகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

## மாலையும் ஆயுதங்களும்

முருகப்பெருமான் முத்துமாலை அணிந்த மார்பை உடையவன் என்று அகநானூறு குறிப்பிடுகின்றது. இதனை "ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்" (திருமுருகு. 104) என்னும் அடிகளால் அறியலாம். முருகனுக்குரிய மாலை கடம்ப மாலை என்பதை,

**“இருள்படப் பொதுளிய பராஅரை மராஅத்து**
**உருள்பூந் தண்டார் புரளும் மார்பினன்”**

என்னும் அடிகளால் அறியலாம் கடம்ப மாலையுடன் வள்ளி பூவும் இடையிடையே வைத்து தொடுக்கப்படும் மாலையினை உடையவன் என்று பரிபாடல் விளக்குகிறது.

**“சுருளுடை வள்ளி இடையிடுபு இழைத்த**
**உருளிணர்க் கடம்பின் ஒன்றுபடு கமழ்தார்**
**அமர்ந்ததை”** (பரி. 21: 10 - 11)

**“நறுமலர் வள்ளிப்பூ நயந்தாயே”** (பரி. 22)

முருகப்பெருமான் தன் தலையில் கடம்ப மாலையும் காந்தள் மாலையும் சூடியவன் என்று நற்றிணையும் திருமுருகாற்றுப்படையும் குறிப்பிடுகின்றன.

## முருகப் பெருமானின் ஆயுதங்கள்

முருகப்பெருமான் தான் பிறந்த அன்றே போர் செய்து இந்திரனை வென்றவன். பரிபாடல் முருகனுக்குரிய கருவிகளை மிகவும் விளக்கமாக எடுத்துக் கூறுகிறது.

**“ஆரா உடம்பின் நீ அமர்ந்து விளையாடிய**
**போரால் வறுங் கைக்குப் புரந்தரன் உடைய,**
**அல்லல் இல் அனலன் தன் மெய்யின் பிரித்து,**
**செல்வ வாரணம் கொடுத்தோன்; வானத்து**
**வளம் கெழு செல்வன் தன் மெய்யின் பிரித்துத்**

**திகழ் பொறிப் பீலி அணி மயில் கொடுத்தோன்;**
**திருந்து கோல் ஞமன் தன் மெய்யின் பிரிவித்து,**
**இருங் கண் வெள் யாட்டு எழில் மறி கொடுத்தோன்;**
**ஆஅங்கு அவரும் பிறரும் அமர்ந்து படை அளித்த**
**மறியும், மஞ்ஞையும், வாரணச் சேவலும்,**
**பொறி வரிச் சாபமும், மரனும், வாளும்,**
**செறி இலை ஈட்டியும், குடாரியும், கணிச்சியும்**
**தெறு கதிர்க் கனலியும் மாலையும் மணியும்,**
**வேறு வேறு உருவின் இவ் ஆறு இரு கைக் கொண்டு,**
**மறு இல் துறக்கத்து அமரர் செல்வன்தன்**
**பொறி வரிக் கொட்டையொடு புகழ் வரம்பு இகந்தோய்”**

(பரி.5:55– 70).

இப்பகுதியில் முருகனுக்குரிய வில், மரம், வாள், ஈட்டி, கோடாரி, மழு, கனலி, மாலை, மணி முதலியவற்றை அறிய முடிகிறது.

முருகனுக்குரிய ஆயுதங்களுள் வேல் சிறந்ததாகக் கூறப்படுகிறது. இதனைப் பரிபாடல் “வேல் ஆற்றும் மொய்ம்பனின் விரை மலர் அம்பினோன் போல ஆற்று முன்பின் புனைகமழ் மைந்தர் (பரி. 22: 26 - 27) கலித்தொகை முருகப்பெருமானை “வேல் வல்லான்” என்று குறிப்பிடுகிறது (கலி. 104: 14) வில்வேல் கந்தன் என்று புறநானூறு குறிப்பிடுகிறது (புறம். 380: 2). திருமுருகாற்றுப் படையில் முருகப்பெருமானின் பன்னிரு திருக்கரங்கள் முருகப் பெருமானின்

கைகளில் தோட்டி, பரிசை வேல் என்னும் ஆயுதங்கள் இருந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**“அங்குசங் கடாவ ஒருகை இருகை**

**ஐயிரு வட்டமொடு எஃகுவலந் திரிப்ப ஒருகை”**

(திருமுருகு.110 - 111).

## முருகப் பெருமானின் குணம்

முருகப்பெருமான் தன்னை அடைந்தவர்களுக்கு அருள் வழங்கி ஆட்கொள்ளும் தன்மையினையும் பொருந்தாருக்கு அழிவை ஏற்படுத்துபவனாகவும் இருக்கின்ற தன்மையை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இலக்கியத்தின் வழியாக முருகப் பெருமான் சினம், சீற்றம், பெரு வலிமை போரில் நின்று வெற்றி பெரும் தன்மை என்னும் செய்திகள் கூறப்பட்டுள்ளன. முருகன் சீற்றமும் சினமும் மிக்கவன் என்று புறநானூறு குறிப்பிடுகிறது (புறம். 16: 12, அகம். 158: 16 - 17) ஒப்புமை கூற இயலாத வலிமை வாய்ந்தவன் என்று நற்றிணை குறிப்பிடுகின்றது (நற். 225: 1).

முருகப்பெருமான் அசுரர்களை வென்றொழித்த தன்மையன் என்பதை பரிபாடலும் பிற சங்க இலக்கியங்களும் வலியுறுத்திக் கூறியுள்ளன. பரிபாடலில்,

**“பாய்இரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு,**
**சேய் உயர் பிணிமுகம் ஊர்ந்து, அமர் உழக்கி,**
**தீ அழல் துவைப்பத் திரிய விட்டெறிந்து,**
**நோயுடை நுடங்கு சூர் மா முதல் தடிந்து,**

**வென்றியின் மக்களுள் ஒருமையொடு பெயரிய**
**கொன்று உணல் அஞ்சாக் கொடு வினைக் கொல் தகை**
**மாய அவுணர் மருங்கு அறத் தபுத்த வேல்"** (பரி. 5: 1 - 7).

என்னும் அடிகள் முருகப்பெருமான் கடலில் மாமரமாக வடிவெடுத்து நின்ற சூரனை அழித்த பான்மையினைக் கூறுகிறது. முருகப் பெருமான் சூரனை வதம் செய்து கொன்ற புராண நிகழ்ச்சியைப் புறநானூறு,பெரும்பாணாற்றுப்படை, குறுந்தொகை, கலித்தொகை, பரிபாடல் ஆகிய இலக்கியங்களால் அறிய முடிகின்றது.

"**கடுந்தூள் மாமுதல் தடிந்து அறுத்த வேல்"** (பதிற். 9: 70).

புறநானூற்றில் வீரர்களின் தன்மையினைக் கூற வரும் போது,

"**கார் நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்**
**சூர்நவை முருகன் சுற்றத்து அன்ன நின்**
**கூர்நல் அம்பின் கொடுவில் கூளியர்" (புறம்.** 23: 3 - 5).

என்னும் அடிகளில் அவுணர்களின் தலைவனாக சூரனை வென்ற முருகனின் படைவீரர்களின் வீரம் முன்னிறுத்தப்பட்டுள்ளது.

## உறவு முறை

தெய்வங்களை மனித உறவுகளை ஒத்து இணைத்துப் பார்க்கும் தன்மையில் முருகப்பெருமான், சிவன், திருமால், உமை, வள்ளி தெய்வானை ஆகியோருடன் உறவு முறையில் ஒப்புமைப்படுத்தப்படுகிறான். இந்திரன் தன் மகள் தெய்வ யானையைத் திருமணம் செய்து கொடுத்த செய்தி

திருமுருகாற்றுப்படை, பரிபாடல் ஆகிய இலக்கியங்களில் காணப்படுகின்றன.

“**மறுவில் கற்பில் வானுதல் கணவன்”** (திருமுருகு. 5).

**“தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்**
**ஆவினன்குடி அமர்தலும் உரியன் அதாஅன்று”**
(திருமுருகு. 175 - 76)

முருகன் வள்ளியைக் களவில் மணந்த பாங்கினை,

“**குறவர் குடமகள் கொடிபோல் நுசுப்பின்**
**மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே”**(திருமுருகு.101-102)

என்னும் அடிகள் கூறுகின்றன.

## அருள் தன்மை

முருகப்பெருமான் தன்னை அடைந்து வழிபட்டார்க்கு இன்பம் தருபவன் என்றும் வீடு பேற்று உலகை அருள்பவன் என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. குறுந்தொகை முருகன் இவ்வுலகைக் காத்து வருதலால் உலகம் இன்பமான நாட்களைப் பெற்றிருக்கிறது எனக் குறிப்பிடுகிறது.

“**தாமரை புரையும் காமர் சேவடி**
**பாவள அன்ன மேனித் திகழொளிக்**
**குன்றி ஏய்க்கும் உடுக்கைக் குன்றின்**
**நெஞ்சுபக எறிந்த செஞ்சுடர் நெடுவேல்**
**சேவல் அம் கொடியோன் காப்ப**
**ஏம வைகல் எய்தின்றால் உலகே”** (குறுந். கடவுள் வாழ்த்து)

முருகப்பெருமானின் முகங்களுள் ஒன்று ஆணவ மலத்தை அறுக்கும் தன்மையது. அது அடியார்கள் தன்னை வாழ்த்திக் கூறும் பொழுது அதற்காக இரக்கம் கொண்டு அருள் தரும் தன்மையது எனத் திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது (திருமுருகு. 90 - 94). அடியார்கள் தன்னை வழிபடும் காலத்தில் அவர்களின் வழிபாட்டிற்குச் சிறிதும் துன்பம் நேராமல் காத்தருள்வது, முருகனின் முகங்களில் ஒன்று என்பதை அறிய முடிகிறது.

**"மந்திர விதியின் மரபுளி விழாஅ**
**அந்தணர் வேள்ளியோர்க் கும்மே ஒருமுகம்"**

(திருமுருகு. 95 - 96)

முருகப்பெருமான் அடியார்க்கும் அருள் தரும் காலத்தை அறிந்தவன் என்பதால் காலத்தால் அருள் தந்து காப்பவன் என்பதைத் திருமுருகாற்றுப்படை வலியுறுத்துகிறது. கூளியர்கள் இவன் அருள்பெறத் தக்கவன் என்று முருகப் பெருமானிடம் கூறிய அளவில் அருள் தந்து ஆட்கொன்ள்ளும் தன்மையன் என முருகனின் அருள் நிலை தெளிவுபடுகிறது.

**"வேறுபல் உருவிற் குறும்பல் கூளியர்**
**சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி**
**அளியன் தானே முதுவாய் இரவலன்**
**வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென**
**இனியவும் நல்லவும் நனிபல வேந்திந்**
**தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்**
**வான்தோய் நிவப்பின் தான்வந் தெய்தி**
**அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்**

**மனங்கமழ் தெய்வந் திளநலங் காட்டி**
**அஞ்சல் ஓம்புமதி அறிவன்நின் வரவென**
**அன்புடை நன்மொழி அளைஇ விளிவின்று**
**இருள் நிற முந்நீர் வளைஇய உலகத்து**
**ஒரு நீ யாகித் தோன்ற வாழுமிய**
**பெறலரும் பரிசில் நல்குமதி பலவுடன்"** (திருமுருகு. 282 - 295).

## வெறியாட்டு

"**வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**
**வெறியாட்டு அயர்ந்த காந்தளம்"**[13]

என்னும் தொல்காப்பியச் சூத்திரம் வெறியாட்டுக் குறித்துக் குறிப்பிடுகிறது. முருகனைப் போன்று வேடம் பூண்டு கையில் வேலேந்தி ஆடும் மலை நாட்டுப் பூசாரி வேலன் எனப்பட்டான். அவன் குறமகளின் நோய் முருகனால் வந்தது என்று ஐயம் கொண்டு அக்கடவுளை அமைதிப்படுத்தக் களத்தை அமைத்துப் பூசை செய்து ஆடிப்பாடி வழிபட்டுக் குறிகேட்பான். அவ்வாறான வழிபாட்டு முறையே வெறியாட்டு எனப்படுகிறது. குறிஞ்சி நிலத்தில் வெறியாட்டு நிகழ்ந்தமையினையும் வெறியாடல் நடத்தப்பட்ட முறையினையும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

முருகன் தமிழகத்து மரபுகளுக்கேற்ப உருவான கடவுள் என்பதைத் தமிழகத்தில் நிலவிய முருக வழிபாட்டு முறைகள் எடுத்துக்காட்டுகின்றன. குறவர்களால் செய்யப்படும் வழிபாட்டு முறையில் ஆகமங்களோ, வேதங்களோ, பார்ப்பனர்களோ, இடம்பெறவில்லை. இம்மக்கள் வழிவழியாக நடத்திய வழிபாட்டு

முறையையே பின்பற்றியிருக்கின்றனர். இத்தகைய வழிபாட்டின் மூலமே தங்கள் கடவுள் வெளிப்படுவான் என்று நம்பினார்கள்”[14] என்று சி. வி. நாராயணன் குறிப்பிடுகிறார்.

வேலன் வெறியாடல் நிகழ்த்தும் போது “அக்கடவுள் கூடி நிற்கும் மனிதர் ஒருவர் மீது ஆவேசம் கொண்டு வெளிப்படுதலே வழக்கமாக இருந்திருக்கிறது. இன்றைக்கும் கூட இவ்வழக்கம் நடைமுறையில் இருக்கின்றதென்பதை நாட்டுப்புறத் திருவிழாக்களில் காண முடிகிறது. இதனை நீலகண்ட சாஸ்திரியார் வேலும் சேவலும் முருகனுக்குரியவை இவை இரண்டும் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்டவை. பழமை வாய்ந்த ஆதித்தநல்லூர் புதை பொருட்களுக்கிடையில் கிடைத்துள்ளன. வேல்கள் இரும்பால் செய்யப்பட்டவை வேல்கள் பித்தளையால் செய்யப்பட்டவை இவற்றை நோக்க முருக வணக்கம் மிகப் பழைய காலத்திலிருந்தே தமிழரிடம் இருந்து வருகிறது என்பது தெளிவாகும்”[15] என்கிறார் நீலகண்ட சாஸ்திரியார்.

முருக வழிபாடு காலந்தோறும் வளர்ந்து செம்மை நிலையை அடைந்துள்ளது என்று நா. வானமாமலை குறிப்பிடுகிறார். “முற்பட்ட வளர்ச்சி நிலையில் கடம்பு அமர்ந்தனவாயும் வேல் முருகனாயும் இருந்து குழு மக்களின் தெய்வமான முருகன் களவுப் புணர்ச்சியின் காவல் தெய்வமாகவும் இருந்தான். இந்நிலையில் இருந்த வேலன் வெறியாட்டைப் பின்னர் மகளிர் முறையாக மேற்கொண்டனர். குறிஞ்சி நில மக்கள் வாழ்க்கையில் களவுப் புணர்ச்சியில் திருமணமும் இருந்தது. எனவே குறிஞ்சி மக்களான குறவரின் தெய்வமான

செவ்வேள் குறப் பெண்ணையே களவுப் புணர்ச்சியில் மணந்து கொண்டான். அவன் ஸ்கந்த கற்பனையோடு இணைக்கப்பட்டபோது ஸ்கந்தனுக்கு ஒரு மனைவி இருந்தாள் எனக் கட்டுக் கதைகள் மூலம் வழிபாட்டு முறையில் புதுமைகள் புகுத்தப்பட்டன"[16]

தொடக்கக் காலத்தில் முருக வழிபாட்டில் ஆடு வெட்டிப் பலி கொடுக்கும் நிகழ்வு நிகழ்ந்தமையை வெறியாட்டு எடுத்துக் கூறுகிறது.

"வெறியாட்டு என்பது பழந்தமிழரின் தனித்த வழிபாடாகும் வழிபாடு செய்பவர்களின் வாயிலாக இறைவன் வெளிப்படுவான் என்னும் நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றிய இவ்வழிபாட்டுமுறை வெறி எனவும் வெறியயர்த்தல் எனவும் இலக்கியங்களில் காட்டப்படும். மருந்தாலும் பிறவற்றானும் நீங்காத நோய் வெறியாட்டால் நீங்குமென்று நம்பிக்கைகொண்டு வெறியயர்தலே வெறியாட்டு எனப்படும். காதல் வயப்பட்ட பெண்ணின் உடல்நலம் குன்றிய வழியே அதனை நிறைவு செய்யும் பொருட்டுச் செய்யப்படும் ஒரு வழிபாட்டுச் சடங்கு முறையாகவே காட்சி தருகின்றது. இவ்வெறியாட்டினை நாட்டுப்புறங்களில் வழக்கில் இருக்கும் பேயோட்டுதல் என்பதனோடு இயைத்துக் கூறலாம். இவ்வழிபாட்டு முறை மலை மலைவாழ் மக்களாகிய குறிஞ்சி நில மக்களுக்குரிய வழிபாட்டு முறையாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. வெறியாட்டு பெரும்பான்மை முருக பூசனை செய்யும் வேலனும் சிறுபான்மை தேவராட்டி எனும் குறமகளும்

தெய்வமேறி ஆடும் கூத்தாகும்”[17] என்று வெறியாடலுக்கு விளக்கம் தருகிறார் க. காந்தி.

## வெறியாடும் களம்

முருக வழிபாட்டில் வெறியாட்டு நிகழ்த்துதற்கு களம் அமைக்கும் நிலையில் இலக்கியங்களின் வழியாகவே வெறியாடல் நிகழ்த்தும் முறை களம் அமைக்கும் முறை ஆகியவற்றை அறிய முடிகின்றது. “தெய்வத்தைச் சாந்தி செய்து பூசிப்பதற்கும் வெறியாடுவதற்கும் பயன்படும் இடத்திற்குக் களம் என்று பெயர். வெறியாட்டு நிகழும் களத்தையே வெறிக்களம் அல்லது வெறியயர் களம் எனச் சுட்டுவர். வெறியயர் களத்தை அமைப்பவன் வேலனே. வேலன் பெரும்பாலும் தனித்துவம் சில சமயம் குறமகளிருடன் இணைந்து மறியறுத்து ஆடிப்பாடி முருகனை வழிபடுதல் வெறியயர்தலில் இடம் பெறுகிறது”[18] என்கிறார் க. காந்தி.

## வேலன் வெறியாடும் இடங்கள்

வேலன் வெறியாட்டு நிகழும் இடங்களை இலக்கியங்களின் வாயிலாக அறியலாம். வேலன் மன்றம், முன்றில், ஆற்றின் நடு இடம், மனை ஆகிய இடங்களில் வெறியாட்டு நிகழ்ந்தமையினை அறிய முடிகிறது. இதனை,

**“அருங்கடி வேலன் முருகொடு வளைஇ**
**அரிக்காட் டின்னியங் கறங்க நேர்நிறுத்துக்**
**கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்**
**சீர்மிகு நெடுவேட் பேணித்தழூஉப் பிணையூஉ**

**மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும்**

**உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ"** (மதுரை. 611 - 616).

**"எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்**

**நினைமுதிர் புன்கின் பூந்தாழ் வெண்மணல்**

**வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்"** (குறுந். 53: 1 - 3).

**"மறிக்குரல் அறுத்துத் தினைப்பிரப் பிரீஇச்**

**செல்லாற்றுக் கவலைப் பில்லியங் கறங்கத்**

**தோற்ற மல்லது நோய்க்கு மருந்தாகா"** (குறுந். 263: 1 - 3).

**"கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி**

**வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்**

**கடவு ளாயினு மாக**

**மடவை மன்ற வாழிய முருகே"** (நற். 34: 8 - 11).

என்னும் சான்றுகளால் அறியலாம்.

வெறியாட்டுக்குரிய காலமாக இரவுப் பொழுது அமைந்தது. இதனை அகநானூறு நடுநாள் என்று குறிப்பிடுகிறது.

"**நெடுவேட் பேணத் தணிகுவள் இவளென**

**முதுவாய் பெண்டிர் அதுவாய் கூற**

**களம்நன் கிழைத்துக் கண்ணி சூட்டி**

**வளநகர் சிலம்பப்பாடி பலி கொடுத்து**

**உருவச் செந்தினை தூஉய்**

**முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்"** (அகம். 22: 6 - 11)

வெறியாடும் நிகழ்வு நடைபெறும் போது அதற்கான களத்தை உருவாக்கி ஆடு அறுத்துத் தினை அரிசியுடன் இரத்தம் கலந்து தூவித் தரை எங்கும் காந்தளின் இதழ்களைச் சிதறி வேலனை அழைத்து வெறியாடும் நிகழ்வு நடைபெறுவதனைக் குறுந்தொகைப் பாடல் தெளிவுபடுத்துகிறது. இதனை,

**“மறிக்குர லறுத்துத் தினைப்பரப் பிரீஇ**
**செல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்கத்**
**தோற்ற மல்லது நோய்க்கு மருந்தாகா**
**வேற்றுப் பெருந்தெய்வம் பலவுடன் வாழ்த்திப்**
**பேஎய்க் கொளீஇயள் இவளெனப் படுதல்**
**தோதக் கன்றே தோழி”** (குறுந். 263: 1 - 6)

“வேலன் முருகனை அழைத்து ஆடிக் குறி கூறுவதனால் வெறியாட்டில் முக்கியத்துவன் பெறுகின்றான்”[19]. வேலன் முருகனை வரவழைப்பவன் ஆதலாலும் மற்றும் முருகனே அவன் மேல் ஏறிக் குறி கூறுவதாலும் அவன் முருகனுக்குரிய அடையாள மாலையாகிய கடம்பந்தாரினை அணிந்துகொள்வதுதான் முருகன் உறையும் மரமான கடம்பினையும் அவனது ஊர்தியான யானையினையும் போற்றிப்பாடுகிறான். அவனது கொடியாகிய கடப்பங் கொடியினையும் மயிற்கொடியும் காட்டப்படுகின்றன. முருகனுக்குரிய மாலையாக அரளி மாலை சூட்டப்படுவதைப் பாடல்கள் தெரிவிக்கின்றன. நிலத்திற்குரிய குறிஞ்சிப்பூ தவிர ஞாழல் புன்னை மலர்களும் வழிபாட்டிற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதைத் தவிர பல்வேறு வகையான மலர்களை விரவிப்

பரவியமையும் தென்படுகிறது”[20]. மேலும் வெறியாட்டில் இசைக் கருவிகள் பயன்படுத்தப்பட்டதை மதுரைக் காஞ்சி விளக்குகிறது.

**“அடுங்கடி வேலன் முருகொடு வளைஇ**
**அரிக்காட் டின்னியங் கறங்க நேர்நிறுத்துக்**
**கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்**
**சீர்மிகு நெடுவேட் பேணித் தழூஉப் பிணையூஉ**
**மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும்**
**உரையுடன் பாட்டும் ஆட்டும் விரைஇ”** (மதுரை. 611 - 616)

மேற்கண்ட செய்திகள் முருக வழிபாட்டில் வெறியாட்டலும் வழக்கத்திலிருந்த முறை என்பதை அறிய முடிகிறது.

## வழிபாட்டு முறை

சங்க இலக்கியங்களில் முருக வழிபாடு குறித்த சிந்தனைகள் காணக் கிடைக்கின்றன. முருகப் பெருமானை அந்தணர்கள் வழிபடும் முறை திருமுருகாற்றுப்படையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

**“புலராக் காழகம் புலர வுடீஇ**
**உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து**
**ஆறெழுத் தடக்கிய அருமறை கேள்வி**
**நாவியல் மருங்கின் நவிலப் பாடி**
**விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்து**
**ஏரகத் துறைதலும் உரியன் அதாஅன்று”** (திருமுருகு. 184 - 89)

இப்பாடலடிகள் அந்தணர்கள் நீராடும் போது நனைத்துக் கட்டிய ஈர ஆடையுடன் தலைமேல் கைகூப்பிக் கொண்டு முருகப் பெருமானைத் துதித்து ஆறெழுத்து மந்திரத்தை உச்சரித்து மணம் மிகுந்த

மலர்களைக் கொண்டு முருகனை வழிபட்ட பான்மையினை அறிவிக்கிறது. பாண்டிய மன்னனும் அவனது அரசுச் சுற்றமும் திருப்பரங்குன்றத்துக்கு வந்து வணங்கி வழிபட்ட பான்மையினைப் பரிபாடல் விளக்குகிறது.

**"ஆர்வேலை யாத்திரை செல்யாறு**
**சுடரொடு சூழ்வரு தாரகை மேருப்**
**புடைவரு சூழல் புலம்மாண் வழூதி**
**மடமயில் ஒரும் மனையவரோடும்**
**கடனறி காரியக் கண்ணவரோடும் – நின்**
**சூர் உறை குன்றின் தடவரை ஏறிமேல்**
**பாடுவலம் திரு பண்பின் – பழமதிச்**
**சூடி அசையும் சுவல்மிசைத் தானையின்**
**பாடிய நாவின் பரந்த உவகையின்**
**நாடும் நகரும் அடைய அடைந்தனைத்தே**
**படுமணி யானை நெடியோய் நீமேய**
**கடிநகர் சூழ் நுவலுங்கால்"** (பரி. 19: 19 - 29)

இப்பாடலடிகள் பாண்டிய மன்னன் தன் மனைவி அமைச்சர்கள் பரிவட்டம் ஏந்தியவர்கள் முருகனை வாழ்த்திப் பாடுபவர்கள் முதலானவர்கள் தன்னை சூழ்ந்துவரத் திருப்பரங்குன்றத்தில் ஆடிச் சுற்றி வந்து முருகனை வணங்கி வழிபட்டமையினைக் குறிக்கின்றன.

மதுரையில் இருந்து திருப்பரங்குன்றத்து முருகப்பெருமானை வணங்கச் சென்றவர்கள் கொண்டு சென்ற பொருட்கள் இன்ன எனப் பரிபாடல் குறிப்பிடுகின்றது. திருப்பரங்குன்றத்துக்கு வழிபடச் சென்றவர்கள் பூசை செய்வதை மனத்துள் கொண்டு திரளாக

சென்றனர். அவர்கள் பூசைக்கு வேண்டிய சந்தனம், தூபத்திற்குரிய பொருட்கள் காற்றால் அணையாத விளக்குகள் மணம் மிக்க மலர்கள் முழவு, மணி, பாசம், மயில், கோடாரி, பிணி முகம் என்னும் யானை முதலானவற்றையும் இன்னும் பல பொருள்களையும் கொண்டு சென்றார்கள் என்று அறிய முடிகிறது.

**"சீறடியவர் சாறுகொள எழுந்து**
**வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்**
**ஆறுகெல் வளியின் அவியா விளக்கமும்**
**நாறுகமழ் வீயும் கூறு இசை முழவமும்**
**மணியும் கயிறும் மயிலும் குடாரியும்**
**பிணிமுகம் உளப்படப் பிறவும் ஏந்தி"** (பரி. 8: 96 - 112)

**"தேம்படு மலர் குழை பூந்துகில் வடிமணி**
**ஏந்து இலை சுமந்து சாந்தம் விரைஇ**
**விடைஅரை அசைத்த வேலன் கடிமரம்**
**பரவினர் உரையொடு பண்ணிய இசையினர்**
**விரிமலர் மதுவின் மரம் நனை குன்றத்து**
**கோலெரி கொளை நறை புகை கொடி ஒருங்கெழ**
**மாலை மாலை அடியுறை இயைநர்**
**மேலோர் உறையுளும் வேண்டுதர் யாஅர்"** (பரி. 17: 1 - 8)

முருகப்பெருமானை வழிபட வந்தவர்கள் முருகப் பெருமானுக்கு மணம் மிக்க புகையிட்டு வழிபட்ட பான்மையினையும் அப்புகை காற்றில் பரவி மணம் பரப்பியதையும் பரிபாடல் குறிப்பிடுகிறது (பரி. 14: 15 – 20, 18: 5- 2).

முருகப்பெருமானை நினைத்தவுடன் வழிபட்டுவிட முடியாது அவன் அருள் இருந்தால் மட்டுமே வழிபட இயலும் என்பதைப் பரிபாடல் குறிப்பிடுகிறது. இதனை மு. சண்முகம்பிள்ளை "முருகப் பெருமானை வணங்கும் தகுதிபெற்றார் சிலரே எல்லாரும் அவனை அண்டி வழிபடும் பேறு பெறுதல் இல்லை, உயிர்களை வதைக்கின்ற தீய நெஞ்சத்தில் சினத்தை மிகப் பெற்றாரும் அவ்வழியில் செல்லாத புகழில்லாதவரும் கூடா ஒழுக்கத்தால் அழிந்த தவத்தர்களும், இப்பிறப்பே உண்மை, மறு பிறப்பு இல்லை என்று கருதுபவர்களும் முருகப் பெருமானின் திருவடியை அடைய மாட்டார்கள் முருகனின் அருட் குணத்தை ஏற்றுக் கொண்டவர்களும் வீடுபேறு பெறும் தகுதி உடையோர் மட்டுமே அவனை அடைந்து வழிபடுவர்"[21] என்று மு. சண்முகம்பிள்ளை குறிப்பிடுகிறார். இதனால் முருக வழிபாடு அவனருள் இன்றி இயலாதென்பது பெறப்படும்.

முருகனை அடைந்தவருக்கு அனைத்தும் கைவரும். பிறவி ஒழியும் என்னும் அடிப்படையில் அடியார்கள் வைக்கும் வேண்டுதல் முருகனின் உயரிய அருட்குணத்தை வெளிக்காட்டுவதாய் அமைகிறது.

"………………… **யாஅம் இரப்பவை**
**பொருளும் பொன்னும் போகமும் அல்ல, நின்பால்**
**அருளும் அன்பும் அறனும் மூன்றும்**
**உருளிணர்க் கடம்பின் எலிதாரோயே"** (பரி. 5: 78 - 81)

இப்பாடல் பகுதி முருகன் தன்னை உண்மையாக வழிபடும் அடியார்களுக்கு அனைத்து நலன்களையும் அருள்பவன் என்று குறிப்பிடுகின்றன.

## வேந்தன்

தொல்காப்பியம் குறிப்பிடும் நானிலத் தெய்வங்களுள் இந்திரன் (வேந்தன்) நீர்வளம் நிரம்பிய மருத நிலத்திற்குத் தலைவனாவான் தொல்காப்பியம் "வேந்தன் மேய தீம்புனல் உலகமும்"[22] என்று குறிப்பிடுகிறது. இந்திரன் தேவர்களின் தலைவன் என்பதை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

> "**மறுஇல் துறக்கத்து அமரர் செல்வன்"** (பரி. 5: 69)
> **"வானத்து வளம் கெழு செல்வன்"** (பரி. 5: 59)

என்னும் சான்றுகளால் அறியலாம். இந்திரன் நூறு வேள்விகள் புரிந்தவன் என்றும் பகைவர்களை வென்று வெற்றி பெற்றவன் என்று திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது (திருமுருகு. 156). இந்திரன் இமயமலையைக் காவல் புரிபவன் என்பதைப் பரிபாடலால் அறிய முடிகிறது.

> "**இருநிலம் துளங்காமை வடவயின் நிவந்து ஓங்கு**
> **அருநிலை உயர்தெய்வத்து அணங்குசால் தலைகாக்கும்**
> **உருமுச்சூழ் சேணிமை உயர்ந்தவர்"** (பரி. 9: 1 - 3)

## தோற்றம்

இலக்கியங்கள் இந்திரனின் தோற்றத்தைக் கூறும் பொழுது ஆயிரங் கண்களை உடையவன் என்றும் குறிப்பிடுகின்றன.

“**ஐஇருநூற்று மெய் நயனத்தவன்”** (பரி. 9: 9)

**“நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து”** (திருமுருகு. 55)

**“ஆயிரம் கண்ணோய்க்கும்”** (கலி. 105)

இந்திரனுக்குரிய ஆயுதமாக வச்சிராயுதம் குறிப்பிடுகிறது. அவ்வாயுதம் பகைவர்களை அச்சுறுத்தும் தன்மையது என்பதை அறியலாம்.

“**வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்”** (புறம். 24: 3)
**“அணங்குடை வச்சிரத்தோன்”** (கலி. 105: 15)

இந்திரன் நூறு கண்களைக் கொண்டிருப்பதுடன் நூறு வேள்விகளை நடத்தி வெற்றி பெற்றவன் என்றும் நான்கு கொம்புகளை உடைய யானையை தனக்கு வாகனமாகக் கொண்டு ஏறி வருபவன் என்று திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது.

“**நூற்றுபத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றுஅடு கொற்றத்து
ஈர் இரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடை
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்”** (திருமுருகு. 155: 59)

இந்திரன் சுவர்க்க உலகின் தலைமைத் தன்மை பொருந்தியவன் என்பதையும் அவன் சுவர்க்க உலகிற்கு வருபவர்களைத் தேவர்களுடன் சென்று வரவேற்கும் தன்மையன் என்பதையும் சண்முகம்பிள்ளை கூறுகிறார்.

இந்திரன் சுவர்க்க உலகிற்கு அதிபதியாதலின் வீர சுவர்க்கம் புகும் வீரர்கள் இவனது வானுலகிற்கு வருபவர். சுவர்க்க உலகிற்கு வருவோரை இந்திரன் பிற தேவர்களுடன் சென்று எதிர்கொள்வான் என்பது ஒரு வகையான நம்பிக்கை. கடையெழு வள்ளல்களில் ஒருவரான ஆய் வள்ளல் இறந்த போது ஏணிச்சேரி முடமோசியார் பாடிய கையறுநிலைப் பாடலில் கற்பனையாக இரவலரைப் புரந்த ஆயை எதிர்கொள்ள இந்திரன் கோயில் முரசம் வானத்தின்கண் ஒலிக்கிறது”[23] இக்கருத்து இந்திரன் சுவர்க்க உலகின் தலைவன் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

இந்திரனும் பிற தேவர்களும் யாகத்தில் இடப்படும் பொருள்களின் யாகபாகத்தையும் அமுதையும் உண்ணும் தன்மை அமிழ்தத்தை “இந்திரர் அமிழ்தம்” (புறம். 182: 1) என்று குறிப்பிடுகிறது. வானில் மழையின்போது தோன்றும் வானவில்லை இந்திரவில் என்று குறிப்பிடுவது உண்டு. இதனை அகநானூறு, புறநானூறு என்ற இரு இலக்கியங்கள் திருவில் என்று குறிப்பிடுகின்றன. (புறம். 20: 10) கார்காலத்தில் நிகழ்ந்த வானவில் தோற்றத்தைப் பரிபாடல் கீழ்க்கண்டவாறு கூறுகிறது.

**“அச்சிரக்கால் ஆர்த்து – அணிமழை – கோலின்றே**
**வச்சிரத்தான் வானவில்லு”** (பரி. 18: 38 - 39)

முருகப்பெருமானின் தோற்ற வரலாற்றில் இந்திரனின் செயல்கள் குறித்து புராணக் கதைகள் காணப்படுகின்றன. இதனை “மு. சண்முகம்பிள்ளை” முருகன் அவதார சரித்திரத்தில் இந்திரன் தொடர்பும் உள்ளது. இறைவன் உமாதேவியாரோடு கூடி

இன்புற்றதினால் தோன்றிய கருவை இந்திரன் வேண்டுகோளுக்கு இணங்க அவ்விறைவன் சிதைத்து விடுகிறான். பின் அக்கருவை ஏழு முனிவரும் பெற்று அக்னியில் அவியொடு சொரிக்கின்றனர். அம்முனி பத்தினியருள் அருந்ததி ஒழிந்த ஏனைய கார்த்திகை மாதர் அறுவரும் அங்கியல் பெய்த கரு அருந்திக் கருக் கொண்டு சரவணப் பொய்கையில் தாமரைப் பூவிலே முருகனைக் கருவுயிர்த்தனர். முருகன் பிறந்த அன்றே இந்திரன் இகல் மிகுதியால் தன் வச்சிராயுதத்தினாலே எறிய அக்குழந்தை ஆறுவேறு உருவாகிப் பின் ஓர் உருவாய் ஆறுமுகத்தோடு அமைகிறது. அக்குழவிப் பருவத்தில் படைக்கலம் இன்றியே முருகப் பெருமான் செய்த போருக்கு இந்திரன் தோற்றுவிடுகிறான். போராற்றல் படைத்த இவனே தனது சேனைக்கு தலைவனாவதற்குரியவன் என இந்திரன் கருதுகிறான். பின்னரே இந்திரன் அக்கினி யமன் முதலிய தேவர்கள் முருகனுக்கு ஆயுதங்கள் அளிக்கின்றனர்”[24] எனக் குறிப்பிடுகிறார்.

இந்திரன் தேவர்களின் தலைவனாக இருந்தப் போதும் அவன் அகலிகையின்மேல் கொண்ட காமத்தால் சிறுமை அடைந்ததனைப் பரிபாடல் எடுத்துக்காட்டுகிறது.

**“இந்திரன் பூசை இவள் அகலிகை இவன்**
**சென்ற கவுதமன் சினன் உரக் கல் உரு**
**ஒன்றிய படி இது என்று உரைசெய்வோரும்**
**இன்ன பலபல எழுத்துநிலை மண்டபம்”** (பரி. 19: 50 - 53)

## இந்திர வழிபாடு

இந்திரனின் வழிபாடு மருத நிலத்தில் சிறப்பாக நடைபெற்றது. இந்திர விழா எடுத்து மக்கள் வழிபட்டனர்.

இந்திர விழா என்பது இந்திரனை குறித்துச் செய்யப்படும் விழாவாகும். இந்திரன் வேதகாலக் கடவுளரில் சிறப்பு மிக்கவன் வாயு மண்டல நிகழ்ச்சிகளுக்கு அடிப்படையாகக் கருதப்படுபவன். வேதகாலத்தில் இவன் வலிமை மிக்கவன் முதன்மைக் கடவுளாகக் கருதப்பட்டதனை வேதங்களில் முதலாவதான ரிக் வேதப்பாடல்களில் புகழப்படுவது"[25] என்பதைக் கூறுகிறார் க. காந்தி.

"பழந்தமிழர் வாழ்வியலில் வேதகால எண்ணங்களும் செயல் முறைகளும் கலந்துள்ளன என்பது உண்மையே. எனினும் அவை தமிழர் வாழ்வில் செல்வாக்குப் பெற்ற நிலையினைப் பரிபாடல் கலித்தொகை மற்றும் திருமுருகாற்றுப்படையிலே காண முடிகிறது. இதிகாசங்கள் தோன்றிய காலத்தில் இந்திரன் இரண்டாம் நிலைக்குத் தள்ளப்பட்டதாகச் சுட்டுவர்"[26].

சங்க இலக்கியத்தில் இந்திர விழா குறித்த குறிப்புகள் காணப்படுகின்றன. இந்திர விழா மிகுதியான பேர்களைக் கொண்டு கொண்டாடப்படுவது என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது. இதனை,

**"இந்திர விழவிற் பூவின் அன்ன**
**புன்தலைப் பேடை விரிநிழல் அகவும்"** (ஐங். 62: 1 - 2)

என்னும் சான்றால் அறியலாம். பதிற்றுப்பத்து இந்திர விழாவினை பலபூ விழா எனக் குறிப்பிடுகிறது. இதனை,

**“கால மன்றியும் கரும்பறுத் தெழியாது**
**அரிகால் அவித்துப், பலபூ விழவிற்**
**தேம்பாய் மருதம் முதல் படக் கொன்று,**
**வெண் தலைச் செம்புனல் பரந்து வாய் மிகுக்கும்**
**பல சூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்**
**சிறை கொள் பூசலின் புகன்ற ஆயம்**
**முழவு இமிழ் மூதூர் விழவுக் காணூஉப் பெயரும்**
**செழும் பல் வைப்பின் பழனப் பாலும்”** (பதிற். 30: 14 - 21)

என்னும் பாடல் பகுதி தெளிவுப்படுத்துகிறது.

மருத நிலத்தில் வாழ்ந்த மக்கள் இந்திரனை வழிபட்ட தன்மை தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே ஏற்பட்டிருக்கக்கூடும். தொல்காப்பியம் மருதத்திற்குரிய கடவுளாக இந்திரனைக் குறிப்பிடுகிறது. “இந்திர விழா மருத நில மக்கள் கொண்டாடிய விழா, இந்திரன் மருத நில கடவுளாகக் காட்டப்படுவதைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.”[27]

இலக்கியங்கள் கூறும் கருத்துக்கள் இந்திரன் தேவர்களின் தலைவன் ஆயிரம் கண்களை உடையவன் நூறு வேள்விகளைச் செய்தவன், வச்சிராயுதத்தைக் கொண்டிருப்பவன் முதலான சிந்தனைகளை வெளிக் கொண்டு வருகின்றன. இந்திரன் மருத நிலத் தெய்வமாகத் தொல்காப்பியர் காலத்தில் திகழ்ந்தமையினையும் பூவிற்கு முதன்மை தரும் இந்திர விழாவினைப் பற்றியும் அறிய முடிகிறது.

### வருணன்

வருணன் நெய்தல் நிலத் தெய்வமாக அறியப்படுகிறான். இதனைத் தொல்காப்பியம் “வருணன் மேய பெருமணல் உலகமும்”[28] என்று குறிப்பிடுகிறது. அ. தட்சிணாமூர்த்தி “வருணன் நெய்தல் நிலத் தெய்வமாகக் கூறப்படுவான் அறிஞர் பாவாணர் வருணனை “வாரணன் – என்று குறிப்பிடுகிறார். இச்சொல் கடல் தெய்வம், என்னும் பொருள்படும்.”[29] ஆரியர்களின் வருகைக்கு முன்பு வருணன் மழைத் தெய்வமாகப் போற்றப்பட்டான் என்றும் அதன் பின்பு கடல் தெய்வமாக்கப்பட்டான் என்றும் அவர் குறிப்பிடுவர்.”[30] கலித்தொகை வருணனைக் கடல் தெய்வம் என்று குறிப்பிடுகிறது. (கலி. 131: 1 - 2).

நெய்தல் நில மக்கள் வருணனைப் போற்றி வழிபட்டமைக்கு பட்டினப்பாலை சான்று தருகிறது.

**“சினைச் சுறவின் கோடு நட்டு**
**மனைச் சேர்த்திய வல்லணங்கினான்**
**மடற்றாழை மலர்மலைந்தும்**
**பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும்**
**புன்றலை யிரும்பரதவர்**
**பைந்தழைமா மகளிரொடு”** (பட்டினப். 86 - 92)

பரதவர்கள் உவா நாட்களில் கடலுக்கு மீன் பிடிக்கச் செல்லாமல் உடல் வலிமை குறைந்தவர்களாக தழை ஆடை அணிந்து கொண்டு தங்கள் மனைவியர்களுடன் இணைந்து மகிழ்ந்தவர்களாக பெரிய சுறாமீனின் கொம்பினை மணற் பரப்பி அதில் வலிமை பொருந்திய

தெய்வத்தை நினைத்து வழிபடுவார்கள் என்னும் சிந்தனை மேற்கண்ட பாடல்களில் குறிப்பிடப்படுகிறது.

பரதவர் உவா நாட்களில் அலைபெருக்கம் இருப்பதால் கடலைத் தெய்வமாக வழிபட்டனர் என்பதையும், வருணனுக்கு உருவம் அமைக்கப்படாமல் அவர்கள் சினைச் சுறாவின் கொம்பினை நட்டு அது வளமைக்கு வழி வகுக்கும் என்று வழிபட்டமையினைப் பட்டினப்பாலை எடுத்துக் கூறுகிறது. திணைத் தெய்வங்கள் குறித்த செய்திகள் சங்க இலக்கியங்களில் திணைத் தெய்வங்களும் திருமால் சேயோன் குறித்த குறிப்புகள் மிகுதியாகவும் இந்திரன் வருணன் குறித்த குறிப்புகள் குறைந்த அளவிலும் கிடைக்கப்பெறுகின்றன.

## முடிவுகள்

- பண்டைத் தமிழர்கள் நிலவியல் அடிப்படையில் தெய்வங்களை வழிபட்டனர்.
- தொல்காப்பியம் திணை அடிப்படையில் மக்கள் தெய்வங்களை வழிபட்டமையினைக் கூறுகிறது.
- குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு நிலங்களுக்கான தெய்வங்களை தொல்காப்பியம் கூறுகிறது.
- மாயோன் (திருமால்), சேயோன் (முருகன்), வேந்தன் (இந்திரன்), வருணன் ஆகியோர் நானிலத் தெய்வங்களாக அறியப்படுகின்றன.
- முல்லை நிலத் தெய்வமாக திருமால் விளங்கியமையினைத் தொல்காப்பியம், சங்க இலக்கியம் ஆகியவற்றால் அறிய முடிகிறது.
- மால், மாயோன், திருமறு மார்பன், நேமியோன் திகிரியோன், சேய்யன், முதல்வன் முதலான பெயர்கள் திருமால் குறித்து வழங்கப்படுகின்றன.
- திருமால் முல்லை நில ஆயர்களின் தெய்வமாக விளங்கியமையினை அறிய முடிகிறது.
- திருமால் ஆதிசேடன் என்னும் பாம்பின் மேல் துயில் கொண்டிருப்பவன் என்பதை அறிய முடிகிறது.
- சங்க இலக்கியங்கள் திருமாலின் வராகம், நரசிம்மம் பலதேவன், வாமன் இராம அவதாரம் குறித்த செய்திகளைப் பதிவு செய்கிறது.

- திருமாலின் வாகனமாகவும் கொடியாகவும் கருடன் அறியப்படுகிறது.
- திருமாலுக்குரிய மாலையாக துளசி மாலையை அறிய முடிகிறது.
- திருமாலின் ஆயுதமாக சக்கரம் குறிப்பிடப்படுகிறது. திருமாலின் நிறமாக நீல நிறம், மேக நிறம், காயாம்பூ நிறம் ஆகியன குறிப்பிடப்படுகின்றன.
- திருமாலின் மனைவியாகத் திருமகளும் பூமகளும் குறிப்பிடப்படுகின்றனர்.
- திருமால் உந்தித் தாமரையில் பிறந்த பிரமன் மகனாகக் குறிப்பிடப்படுகிறான்.
- காமன், சாமன் ஆகியோர் திருமாலின் மக்களாகக் குறிப்பிடப்படுகின்றனர்.
- குறிஞ்சி நில மக்களின் வழிபாட்டு தெய்வமாக சேயோன் குறிப்பிடப்படுகிறான்.
- முருகன், முருகு, சேய், சேயோன், வேள், செவ்வேள், நெடுவேள், வேலன், வேலோன் என்னும் பெயர்களால் அழைக்கப்பட்டமையினை அறியலாம்.
- பரிபாடல் பெரும்பான்மையான நிலையில் வேள் என்னும் பெயரை முருகனுக்குரியதாகக் குறிப்பிடுகின்றன.
- தொல்காப்பியம் முருகனை சேயோன் என்று குறிப்பிடுகிறது.
- நக்கீரர் முருகனை குறிஞ்சிக் கிழவன் என்று அழைக்கிறார்.
- முருகப்பெருமான் திருப்பரங்குன்றம், திருச்செந்தூர் திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோராடல்,

பழமுதிர்ச்சோலை காடு, கா, துருத்தி, ஆறு, குளம், சதுக்கம், சந்தி, கடம்ப மரம் முதலான இடங்களில் எழுந்தருள்பவன் என்பதை அறியலாம்.

- முருகனின் தோற்றம் வரலாற்றைப் பரிபாடல் புராணக் கதையில் விரித்துரைக்கிறது.
- முருகன் இளம் பருவத்திலேயே இந்திரனை வென்ற செய்தியைக் கூறுகிறது.
- முருகனுக்குரிய மாலையாகக் கடம்பும் காந்தளும் அறியப்படுகின்றன.
- முருகனின் ஆயுதங்களாக வில், வாள், ஈட்டி, கோடாரி, மழு, கனலி ஆகியன குறிப்பிடப்படுகின்றன.
- முருகனின் வாகனமாக மயிலும் யானையும் கொடியாக சேவல் கொடியினையும் குறிப்பிடப்படுகின்றன.
- முருகனின் அருள் சிறப்பு வீடுபேறு வழங்கும் திறம் ஆகியன விளக்கப்படுகின்றன.
- குறிஞ்சி நில மக்கள் வெறியாட்டயர்ந்து முருகனை வழிபடும் சிறப்பு விளக்கப்படுகிறது.
- அந்தணர்கள், முனிவர்கள் சூரர மகளிர்கள் முதலியோர் தம் வழிபாட்டு முறையை எடுத்துக் கூறுகிறது.
- வெறியாட்டு முழுமையும் தமிழர் பண்பாட்டின் கூறுகளை உள்ளடக்கி நடைபெற்ற நிகழ்வாக அறிய முடிகிறது.
- வெறியாட்டுக்கென்று வேலனால் வெறியாடுகளம் அமைக்கப்பட்டதை அறிய முடிகிறது.

❖ வேந்தன் மருத நிலத்திற்குரிய தெய்வமாக அறியப்படுகின்றான்.

❖ தேவர்களின் தலைவன் என்றும் ஆயிரம் கண்களை உடையவன் என்றும் வச்சிராயுதத்தை உடையவன் என்றும் வச்சிராயுதத்தைக் கொண்டவன் என்றும் இலக்கியங்கள் இந்திரனைக் குறிப்பிடுகின்றன.

❖ இந்திரன் அகலிகையின் மீது கொண்ட காமத்தினால் சாபம் பெற்ற நிகழ்வை பரிபாடல் கூறுகின்றது.

❖ சுவர்க்க உலகின் தலைவனாக இந்திரன் அறியப்படுகின்றான்.

❖ இந்திரன் குறித்து இந்திர விழா நடத்தப்பட்டமையினையும் அவ்விழாவில் பூக்கள் முக்கியத்துவம் பெற்றதையும் அறிய முடிகிறது.

❖ தொல்காப்பியத்தில் நெய்தலுக்குரிய கடவுளாக வருணன் குறிப்பிடப்பட்ட போதும் வருணன் பற்றிய செய்திகள் மிகக் குறைவாக இடம் பெற்றுள்ளன.

❖ பட்டினப்பாலை பரதவர்கள் சினைச் சுறாவின் கொம்பில் பூக்கட்டி அதைக் கடல் தெய்வமான வருணனை இருத்தி வழிபட்டமையினைக் குறிப்பிடுகிறது.

❖ சங்க இலக்கியங்கள் தமிழர்களின் திணை அடிப்படையிலான வழிபாட்டு முறையினையும் தெய்வங்களையும் விரிவான முறையில் எடுத்துக் கூறுகிறது.

## அடிக்குறிப்புகள்

1. தொல். பொருள். அகத். 5.
2. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழ். ப. 69.
3. கு. ராசரெத்தினம், சங்க இலக்கியத்தில் பொது மக்கள். ப.123.
4. சி. இலக்குவனார், சங்க இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப. 68.
5. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப. 142.
6. முல்லைப்பாட்டு. 1 - 3.
7. மதுரைக்காஞ்சி, 590 - 591.
8. ம. கோ. விகடர், 2007, தொல்காப்பியச் சிந்தனைகள், ப. 101.
9. மு. சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சங்குகளும், ப. 33.
10. மேலது. பக். 44 – 45.
11. மேலது. பக். 70 – 71.
12. சிலப்பதிகாரம். 4: 9.
13. தொல். பொருள். 62.
14. C. V. Narayanan, Origin and early history of saivam south India. P. 104.
15. Neelakanda sastheri. A, History of south India. PP. 57 – 58.
16. நா. வானமாமலை, தமிழர் பண்பாடும் தத்துவமும், பக்.48– 49.

17. கா. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 217.
18. மேலது. ப. 217.
19. மேலது. ப. 224.
20. மேலது. பக். 224 – 225.
21. மு. சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப. 84.
22. தொல். அகத். 5.
23. மு. சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப. 17.
24. மேலது. பக். 18 – 19.
25. கா. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கையும், ப. 119.
26. Classical Dictionary of Hindu mythology & Religion, P.5.
27. கா. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும். ப. 76.
28. தொல். பொருள். அகத். 5.
29. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப. 201.
30. மேலது. ப. 201.

இயல்-3



# சிவ வழிபாடும் பிற வழிபாட்டு முறைகளும்

# இயல் – மூன்று

## சிவ வழிபாடும் பிற தெய்வ வழிபாட்டு முறைகளும்

சங்க இலக்கியங்கள் பண்டைத் தமிழர்களின் வழிபாட்டு மரபினை எடுத்துக்கூறும் பான்மையின் நானிலத் தெய்வ வழிபாட்டு முறைகளை அடுத்துச் சிறப்புப் பெறுவது சிவ வழிபாட்டு முறையும் பிற தெய்வ வழிபாட்டு முறைகளுமாகும். தொல் தமிழகத்தில் மாயோன், சேயோன், இந்திரன், வருணன் என்னும் வழிபாட்டு மரபுடன் சிவ வழிபாடும் பிற வழிபாட்டு முறைகளும் சிறந்து விளங்கியமையினை இவ்வியல் ஆராய்கிறது.

### சிவன்

சிவ வழிபாடு தமிழகத்தின் தொன்மையான வழிபாடு. பிறப்பு இறப்பு அற்றவன் என்று சிவபெருமான் குறிப்பிடப்படுகிறான். "சிவன் இந்து சமயத்தில் கூறப்பட்டுள்ள மும்மூர்த்திகளில் ஒருவர். சைவ சமயத்தின் முழுமுதற் கடவுளாகவும் பிறப்பும் இறப்பும் இல்லாத பரம்பொருளாதலால் பரமசிவன் என அழைக்கின்றனர்"[1]. சிவன் என்றால் சிறந்தவன் என்று பொருள். வட மொழியில் சிவம் என்ற சொல்லுக்கு முழுமையானது மங்களகரமானது என்று பல பொருகள் உண்டு. முழு முதல்வன், ஈர்ஞ்சடை அந்தணன் காரியுண்டிக் கடவுள் ஆலமர் கடவுள்"[2] என்னும் பெயர்கள் சிவன் குறித்து வழங்கப்படுகின்றன. "சிந்து சமவெளி நாகரிகம் நிலவிய மொகஞ்சதாரோவில் கண்டெடுக்கப்பெற்ற தியானத்திலுள்ள பசுபதி

முத்திரையே சிவ வழிபாட்டின் மூலம் என்று சொல்லப்படுகிறது"[3] "இந்து மதத்தில் ருத்ரன் சிவன் இருவருமே ஒரே கடவுளாகக் கருதப்பெறுகிறார்கள். இந்து மதத்தின் பழமையான ரிக் வேதத்தில் ருத்ரன் கடவுளாகக் கூறப்படுகிறான்"[4] சிவன் படைத்தல், காத்தல், அழித்தல், ஒடுக்குதல், அருளுதல் என்னும் ஐந்தொழில் ஆற்றும் தன்மை உடையவனாகக் கருதப்படுகிறான். "ஒரு உலக்கையில் உள்ள உடுக்கை படைக்கும் ஆற்றலை குறிக்கும். இடக்கையில் உள்ள நெருப்பு அழிக்கும் ஆற்றலைக் குறிக்கும். இன்னொரு வலக்கையின் உட்புறத்தைக் காட்டுவது அருளும் ஆற்றலைக் குறிக்கும். இன்னொரு இடக்கை துதிக்கைபோல் உட்புறத்தினை மறைத்தவாறு இருப்பது ஒடுக்கும் ஆற்றலைக் குறிக்கும், தூக்கிய பாதமும் ஆணவத்தை மிதித்தாடும் இன்னொரு பாதமும் மன மாயை உள்பட தீய சக்திகளிடம் இருந்து காக்கும் ஆற்றலைக் குறிக்கும்."[5]

## சங்க இலக்கியங்களில் சிவன்

சங்க இலக்கியங்களில் சிவ வழிபாட்டு மரபுகள் குறித்து விரிவான நிலையில் குறிப்புகள் காணக்கிடைக்கின்றன. சங்க இலக்கியங்கள் வாயிலாகச் சிவனின் பெயர்கள், வண்ணம், சடை, நீர்வார்சடை, பிறை, நிலவு, நஞ்சுண்ட கறைக் கண்டனாக விளங்கும் தன்மை, சிவனின் வாகனம், மாலை, கொடி, படை, முப்புறம் எரித்த தன்மை உமையொரு பாகனாக விளங்கும் திறம் இராவணன் கயிலையைப் பெயர்த்தமை வேதத்தின் முதல்வனாக விளங்கும் சிறப்பு முதலானவற்றை அறிய முடிகின்றது.

## சிவனின் பெயர்கள்

சிவனின் தோற்றம் முடிவு என்னும் சிந்தனைகள் இலக்கியங்களில் முன் வைக்கப்படவில்லை. பிறப்பு இறப்பற்றவன் தோற்றமும் முடிவும் இல்லாதவன் என்னும் கருத்துருவே இலக்கியங்களின் வழி வலியுறுத்தப்படுகிறது. சிவ வழிபாடு தொன்மையானது என்பதை உணரும் நோக்கிலேயே இலக்கியங்கள் தரும் செய்திகள் அமைந்திருக்கின்றன. “முழு முதல்வன்” (புறம். 16: 2) என்று அகநானூறு சிவனைக் குறிப்பிடுகின்றது. சடையில் கங்கை ஆற்றைக் கொண்டிருக்கும் தன்மையினால் “பிறங்கு நீர் சடைக் கரந்தான்” (கலி. 150: 9) என்று கலித்தொகை குறிப்பிடுகிறது. நீர் வழியும் சடையுடையவனாதலால் சலதாரி என்று (பரி. 9: 6) பரிபாடல் குறிப்பிடுகிறது. இளமையான பிறை நிலவைத் தன் தலையில் கொண்டிருக்கும் காரணத்தால் சிவனுக்கு புதுத் “திங்கள் கண்ணியான்” (கலி. 150: 17) என்னும் பெயருமுண்டு. சிவனுக்கு வழங்கும் பெயர்கள் காரணத்தின் அடிப்படையில் அமைகின்றன. மூன்று கண்களைக் கொண்டிருக்கும் காரணத்தால் “முக்கட் செல்வன்” (அகம். 181: 16) “முக்கணான்” (கலி. 104: 10) என்னும் பெயர்கள் காணப்படுகின்றன. சிவன் தேவர்களை காக்க நஞ்சுண்டு கறைக் கண்டம் உடையவன் ஆனமையால் மலைபடுகடாம் “காரிவுண்டிக் கடவுள்” (மலைபடு. 83) எனக் குறிப்பிடுகின்றது. ஔவையார் தனக்கு நெல்லிக்கனி கொடுத்த அதியனை வாழ்த்தும்போது சிவனை நீல மணிமிடற்று ஒருவன் (புறம். 91: 7) என்று குறிப்பிடுகிறார்.

சிவனுக்குரிய மலர் கொன்றை மலர் என்பதால் "மாமலர்க் கொன்றையான்" (கலி. 142: 28) என்று அழைக்கப்படுகிறான். இப்பெயர் சிவனைக் குறிப்பாக உணர்த்துகிறது. மேலும் காளைக் கொடியினைக் கொண்டிருக்கும் காரணத்தினால் "ஆன் ஏற்றுக் கொடியோன்" (கலி. 26: 5) என்றும் கணிச்சி என்னும் படையைக் கொண்டிருக்கும் காரணத்தால் "கணிச்சியோன்" (கலி. 103: 23) என்றும் ஆலமரத்தில் அமர்ந்து சன காதி முனிவர்களுக்கு முறை உணர்த்திய காரணத்தால் "ஆலமர்ச் செல்வன்" (கலி. 81: 9) என்றும் சிவத் தன்மை தவம் நிறைந்தது என்பதால் சிவன் "ஈரமான சடையினை உடைய அந்தணன்" (கலி. 38: 1) என்றும் அழைக்கப்படுகிறான். இவ்வாறாக இலக்கியங்களில் குறிப்பிடும் சிவனின் பெயர்கள் காரணத்தின் அடைப்படையில் உருவான பெயர்களாக விளங்குகின்றன. காரண காரியத் தொடர்புடன் அமையும் பல பெயர்களும் சிவ வழிபாட்டின் தொன்மை தொடர்ச்சி ஆகியவற்றை அறிந்து கொள்ள உதவுகின்றன.

## சிவனின் நிறம்

சிவன் என்னும் சொல் செம்மை என்னும் பொருளைத் தரும் முருகப்பெருமானின் தோற்றத்தைக் கூறுமிடத்து சேயோன் என்று வழங்குதல் உண்டு. சேயோன் என்றால் செம்மை நிறம் உடையவன் என்பது பொருள். முருகப்பெருமானின் ஆடை உடல் நிறம் மாலை அனைத்தும் செம்மை நிறம் உடையவை. அவ்வாறே இலக்கியங்களில் சிவனின் நிறமும் தொடர்புபடுத்தப்படும்

பொருள்களும் செம்மை நிறம் உடையனவாகக் கூறப்பட்டுள்ளன. இலக்கியங்களில் சிவனின் மேனி நிறத்திற்கு அந்திவானம், குரால், சண்பகமலர் ஆகியன ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளன. அகநானூறூற்றில் அந்தி நேரச் செவ்வானின் நிறத்திற்குச் சிவனின் மேனி வண்ணத்திற்கு ஒப்புமை கூறப்பட்டுள்ளது.

**"அந்தி வானமொடு கடல் அணி கொளாஅ**
**வந்த மாலை பெயரின்"** (அகம். 360: 8 - 9)

சிவந்த நிறமுடைய காளை குரால் என்று அழைக்கப்படும். குரால் காளையின் நிறமுடையவன் சிவன் என்று கலித்தொகை,

**"மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்**
**முக்கண்ணனான் உருவேபோல் முரண்மிகு குராலும்"**
(கலி.104: 11 - 12)

என்னும் அடிகளால் குறிப்பிடுகிறது. சிவபெருமானுக்குரிய நட்சத்திரம் திருவாதிரை. அதனால் அவன் ஆதிரையான் என்றும் அழைக்கப்படுகிறான். சண்பக மலரைக் கண்ட சங்கப் புலவர் சண்பக மலரின் நிறம் சிவனின் மேனி நிறத்துடன் ஒத்து விளங்குவதாக குறிப்பிடுகிறார்.

**"ஆதிரையான் அணிபெற மலர்ந்த**
**பெருந்தண் சண்பகம் போல"** (கலி. 150: 20 - 21)

சிவனின் நிறம் செம்மை என்பதைப் புலவர்கள் மனத்தில் கொண்டு ஒப்புமைப்படுத்தத்தக்க உயரிய பொருள்களுடன் நிறத்தை ஒப்புமைப்படுத்திக் கூறியிருக்கின்றனர். புலவர்கள் கூறியுள்ள

ஒப்புமைகள் இலக்கிய உவமையினை மிகுவிப்பதுடன் சிவனின் வண்ண இயல்பினை அறிந்து கொள்ளப் பயன்படுகின்றன.

**சடை**

சிவனின் சடை உடல் நிறம் போன்றே செம்மை நிறம் உடையதாக விளங்குவதைச் சங்கப் பாடல்கள் உணர்த்தியுள்ளன. எரிக்கின்ற நெருப்பு எத்தனை செந்நிறம் உடையதாக விளங்குமோ அவ்வாறே சிவனின் சடை முடியும் செந்நிற வடிவமாக விளங்கியமையினைப் புறநானூறு "எரிமருள் அவரிசடை" (புறம். 56: 1) என்று குறிப்பிடுகிறது. சிவனின் ஒளி மிக்க சடையில் கங்கை இருப்பதனால் உடை ஈரமாகி இருப்பதன் காரணமாக ஈர்ஞ்சடை என்னும் பொருளமைப்பில் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. சடையில் நீரைக் கொண்டிருப்பவன் ஆகையால் சிவன் "சலதாரி" (பரி. 9: 6) என்றும் "பிறங்கு நீர் சடைக்கரத்தான்" (கலி. 150: 9) என்றும் அழைக்கப்படுகிறான்.

**கறைக்கண்டம்**

தேவர்களும் அசுரர்களும் மேரு மலையினை மத்தாகவும் வாசுகி என்னும் பாம்பினை நாணாகவும் கொண்டு பாற் கடலினைக் கடைந்தபோது முதலில் பெருகிய விடத்தைத் தேவர்களைக் காக்கும் பொருட்டு சுந்தரரை எடுத்துத் தருமாறு கூறிச் சிவன் உண்டான் என்பது புராணச் செய்தி. அதனாலேயே சிவனின் கண்டம் விடம் தங்கிக் கருமை நிறம் அடைந்தது. சிவனின் கறைக் கண்டம் குறித்த

தொன்மம் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. சிவனின் கழுத்து விடம் தங்கியதன் காரணமாக நீல மணி போன்று விளங்கியதாக புறநானூறு "நீல மணி மிடற்று ஒருவன்" (புறம். 91: 5 - 6) என்னும் அடியால் குறிப்பிடுகிறது. மற்றொரு பாடல் கறை படிந்த கண்டத்தை உடையவன் என்று "கறைமிடற்று அண்ணல்" (புறம். 55: 4 - 5) என்று குறிப்பிடுகின்றது. "மணி மிடற்று மாண் மலர்க் கொன்றையான்" (கலி. 142: 24 - 26) என்னும் அடியால் கழுத்தின் நிறம் மணியின் நிறத்திற்கு ஒப்புமையாகக் கூறப்பட்டிருக்கிறது. மலைபடுகடாம் குறிப்பிடும் "காரி உண்டிக் கடவுள்" (மலைபடு. 83) என்னும் பெயர் காரணப் பெயராய் சிவன் விடம் உண்டமையினை உணர்த்துகிறது.

## பிறை

சிவனின் தலையில் சடை முடியில் காணப்படும் மூன்றாம் பிறை நிலவு பல்லாற்றானும் இலக்கியங்களின் வழி சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. வெண்மை நிறமான பிறைச் சந்திரனைச் சடையில் பொலிவுறச் சூடியவன் என்று பால்புரை பிறை நுதல் பொலிந்த சென்னி" (புறம். 91: 5) என்னும் அடியால் புறநானூறு குறிப்பிடுகிறது. சடையை அலங்கரிக்கும் தலை மாலை போன்று பிறை நிலவு விளங்குவதாகக் கலித்தொகை குறிப்பிடுகிறது.

**"எரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைகண்**
**உருவமாலை போல"** (கலி. 103. 25 - 26)

மூன்றாம் பிறை நிலவு இளமையுடன் திகழ்வதால் அது புதுத் திங்கள் எனப்பட்டது. "புதுத் திங்களாகிய கண்ணியை அணிந்தவன் சிவன்" (கலி. 150: 17) என்று கலித்தொகை குறிப்பிடுகிறது.

## கொன்றை மாலை

சிவனுக்குரிய மாலை கொன்றை மாலை கொன்றை கடுக்கை என்றும் அழைக்கப்படும். சிவன் தன் கழுத்தில் அழகிய கொன்றை மாலை அணிந்திருந்தமையினைக் கலித்தொகை குறிப்பிடுகிறது. "மணிமிடற்று மாண்மலர்க் கொன்றையின்" (கலி. 142: 24 - 28).

## முக்கண்

சிவன் மூன்று கண்களை உடையவன் ஆகையால் முக்கண்ணன் என்று அழைக்கப்படுதல் உண்டு. சிவன் தன் நெற்றியில் கண் கொண்டவன் என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

**"கறை மிடற்று அண்ணல் காமர் சென்னிப்**
**பிறை நுதல் விளங்கும் ஒருகண் போல"** (புறம். 55: 4 - 5)

ஔவையார் சிவன் நஞ்சுண்டும் நிலைபெற்றவன் என்று கூற வரும் இடத்து "பால்புரை பிறை நுதல் பொலிந்த சென்னி" (புறம். 91: 5) என்னும் அடியால் பிறை போன்ற நெற்றியில் கண்ணுடையவன் என்று குறிப்பிடுகிறார். மு. சண்முகம்பிள்ளை சிவனின் கண்கள் சினத்திற்கும் பேரருளுக்கும் சின்னமாக விளங்குகின்றன"[6]. என்று குறிப்பிடுவர். சிவனுக்கு மூன்று கண்கள் இடம் பெற்றிருக்குமாற்றைக் கலித்தொகை "முக்கணான்" (கலி. 104: 10)

என்றும் அகநானூறு "முக்கட் செல்வன்" (அகம். 181: 16) என்றும் குறிப்பிடுகின்றன.

## கொடி

சிவனுக்குரிய கொடி காளை உருவம் எழுதப்பட்டது. காளை வலிமையின் வடிவம், துன்பம் கருதாது உழைக்கும் தன்மையது. அவ்வாறே இவன் படைத்தல், காத்தல், அழித்தல், ஒடுக்குதல், அருளுதல் என்னும் ஐந்தொழில்களை மேற்கொண்டாலும் எத்தகைய சோர்வினையும் அடைதல் என்பதை காளைக் கொடி விளக்குகிறது. சிவன் தன் கையில் கொண்டிருக்கும் காளைக் கொடியானது வெற்றியைக் குறிப்பது என்று புறநானூறும் அவன் தன் கையில் வெற்றியின் சின்னமாக ஏந்தியிருப்பது வெற்றி தரும் கொடி என்று திருமுருகாற்றுப்படையும் அவனது கொடியும் பயணிக்கும் வாகனமும் காளை என்று கலித்தொகையும் குறிப்பிடுகின்றன.

**"ஏற்று வலன் உயரிய எரி மருள் அவிர்சடை"** (புறம். 56: 1)
**"உருவ ஏற்று ஊர்தியான் ஒள் அணி நக்கன்ன நின்"**
(கலி.150: 13)

**"புள் மிசைக் கொடியோனும் புங்கவம் ஊர்வோனும்"** (பரி.8: 2)

## ஆயுதங்கள்

சிவன் ஆதியந்தம் அற்றவன் பிறப்பு இறப்பற்றவன் என்னும் சிந்தனையால் அவன் தெறல் குணமும் இலக்கியங்களின் வழி சிறப்பாக எடுத்துக்காட்டப்படுள்ளது. சிவன் தன் கையில்

கொண்டிருக்கும் ஆயுதங்கள் தீயோரை அழித்து நல்வழிப்படுத்தும் பாங்கினவாக அமைந்திருக்கின்றன. சிவனுக்குரிய ஆயுதங்களாக இலக்கியங்களில் கணிச்சி, வில், வேல் என்னும் ஆயுதங்கள் கூறப்பட்டுள்ளன. கணிச்சி என்பதற்கு தமிழ் மொழி அகராதி “மழு, நமனாயுதம், கோடரி, முக்கோல், மூக்கரி, கத்தி”[7] என்னும் பொருளைத் தருகிறது.

“கணிச்சி என்பதற்கு குந்தாலம் கிணறு தோண்டும் கருவி”[8] என்னும் பொருள்களும் காணக்கிடைக்கின்றன. கணிச்சி என்னும் ஆயுதத்தை மழு என்று கலித்தொகை குறிப்பிடுகிறது. முல்லைக்கலி “ஒளி நிரம்பிய கணிச்சி” (கலி. 3: 25 - 26) குறிப்பிடுகிறது. சிவனின் மழுவாகிய கணிச்சி என்னும் படைக்கலன் யாராலும் வெல்வதற்கு அரியது என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

**“மாற்று அருங் கணிச்சி மணிமிடற்றோனும்”** (புறம். 56: 2)

ஆணவத்தின் வடிவமான தாரகாட்சன், கமலாட்சன் வித்தியுன்மாலி என்னும் முப்புற அசுரர்களை அழித்த காலத்தில் சிவன் வில், அம்பு ஆகியன கொண்டிருந்தமையினைப் புறநானூறு, கலித்தொகை, பரிபாடல் ஆகிய இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன. (புறம். 55: 1 – 3, கலி. 38: 1, பரி. 5: 24) இவ்வாறு சிவனின் மழுவாயுதம் ஒளிமிக்கது என்பதும் பகைவர்களால் வெல்ல அரிது என்பதும் பெறப்படும்.

**“ஓங்கு மலைப் பெரு வில் பாம்பு ஞாண் கொளீஇ**
**ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றி**
**பெரு விறல் அமரர்க்கு வென்றி தந்த”** (புறம். 55: 1 - 3)

**“இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்”** (கலி. 38: 1)

**“நாகம் நாணா மலைவில்லாக”** (பரி. 5: 24)

## தவத்தை உடையவன்

சிவன் தவத்திற்கு உரியவன் ஞானம் அருள்பவன் சனகாதி முனிவர்களுக்குத் தத்துவப் பொருளை விளக்கிக் கூறியவன் அதனால் ஆலமர்ச் செல்வன் என்றும் சிவனை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. “ஆலமர் கடவுள் (புறம். 198: 9) என்றும் “ஆல் அமர் செல்வன்” (கலி. 81: 9) என்று கலித்தொகையும் குறிப்பிடுகின்றன. கல்லால மரத்தின் கீழ் அமர்ந்து சனகாதி முனிவர்க்கு ஞானப் பொருள் விரித்துக் கூறும் காட்சியால் கலித்தொகை சிவனை முனிவன் என்றும் குறிப்பிடுகிறது.

**“ஐயம் தீர்ந்து யார் கண்ணும் அருந்தவ முதல்வன் போல்**
**பொய் கூறாய் என நின்னைப் புகழ்வது கெடாதோதான்”**
(கலி. 100: 7 - 8)

## வேத முதல்வன்

சிவன் வேதத்தின் பொருளானவன் அவனே உலகின் தொடக்கம் முடிவு அனைத்தும் என்பதை இலக்கியங்கள் நுட்பமாக விளக்கிக் கூறியுள்ளன. என்று தோன்றிய பரம்பொருள் என்று அறிய இயலாத தன்மையினால் முது முதல்வன் என்னும் பெயர் சிவனுக்கு உண்டு. அகநானூறு இதனை விளக்கும் விதமாக,

**“ஞாலம் நாறும் நலம் கெழு நல் இசை**

**நாள் மறை முது நூல் முக்கட் செல்வன்”** (அகம். 181: 15 - 16)

என்னும் அடியால் வேதங்களின் தோற்றத்திற்கு மூலமானவன் சிவன் என்று கூறுகிறது. யாகங்களில் இடப்படும் அவி உணவைத் தனக்கானதாகக் கொள்பவன் என்னும் செய்தியைப் பரிபாடல் பதிவு செய்கிறது,

**“மாதிரம் அழல எய்து அமரர் வேள்விப்**

**பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான்”** (பரி. 5: 26 - 27)

சிவனே வேதங்களின் தோற்றக் காரணன் என்னும் செய்தியைப் புறநானூறு விளக்குகிறது.

**“நன்று ஆய்ந்து நீள் நிமிர் சடை**

**முது முதல்வன் வாய் போகாது”** (புறம். 166: 1 - 2)

சிவன் வேதத்தின் வடிவானவன் என்றும் அவனிடம் இருந்தே நான்கு வேதங்களும் தோன்றின என்றும் அதனாலேயே அவன் முது முதல்வன் என்று அழைக்கப்படுவதும் விளங்கும்.

**முப்புரம் எரித்தமை**

முப்புரம் என்பது ஆணவம், கன்மம், மாயை இவை மூன்றும் மனிதனை நற்கதி அடைய விடாமல் தடுப்பனவாகும். தாரகாட்சன், கமலாட்சன், வித்தியுன்மாலி என்னும் அசுரர்களும் இறப்பில்லாத வரம் பெறும் நோக்குடன் இறைவனை வேண்டி நீண்ட நாட்கள் தவத்தில் ஈடுபட்டிருந்தனர் சிவன் அவர்கள் முன்பு எழுந்தருளி என்ன வரம் வேண்டும் என்று கேட்ட காலத்து அவர்கள் தங்களுக்கு

இறப்பில்லாத வரம் வேண்டும் என்று வேண்டினர். அவர்களின் வேண்டுகோளைக் கேட்ட சிவபெருமான் மண்ணுலகில் பிறந்த அனைவரும் இறத்தல் இயல்பு என்பதால் அவ்வரத்தைத் தர இயலாது என்று கூறவும் மூவரும் பொன், வெள்ளி, இரும்பு ஆகிய கோட்டைகளைப் பெற்றனர். அவை நினைத்த இடத்தில் இறங்கும் தன்மை உடையன என்பதால் மக்கள் துன்பங்களுக்கு ஆளாயினர். அவர்களின் துன்புறுத்தல் அதிகமானபோது தேவர்கள் முப்புர அசுரர்கள் தரும் இன்னல்களைச் சிவனிடம் எடுத்துரைக்க சிவன் வில், அம்பு கொண்டு அசுரர்களை அழிக்க நினைத்துத் தன் ஒரு புன் சிரிப்பால் முப்புர அசுரர்களை எரித்தழித்தார். சிவன் முப்புரம் எரித்த காட்சி சங்க இலக்கிய நூல்களில் உரக்கப் பேசப்பட்டிருக்கிறது. புராண இலக்கியக் காலத்தில் இத்தொன்மம் விரிவாகப் பேசப்பட்டது. முப்புறம் எரித்த காட்சி சங்க இலக்கியங்களில் இடம் பெறுவதால் இக்குறிப்புகள் தமிழ் இலக்கியக்களத்தில் நீண்ட காலமாக வழங்கி வந்தன என்பது பெறப்படும்.

சிவன் தீயவர்களை சினந்து அழித்து அவர்களை நல்வழிப்படுத்துபவன் ஆகையினால் அவன் காய் கடவுள் என அழைக்கப்படுகின்றான். “காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்” (பரி. 5: 13) “முக்கண்ணன் முப்புரம் எரித்த செய்தியை விரிவாகவே சங்கப் பாக்கள் தருகின்றன. அமரரைக் காப்பாற்றி அவருக்கு வாழ்வு அளிக்கும் பொருட்டாக அவன் முப்புரத்தை அழிக்க நேர்ந்தான். அடியார் தம் அல்லல் களைந்து ஆனந்தம் தரும் இயல்பினன் சிவன் என்பதனைப் புராணச் செய்தி விளக்கும். முப்புரம் இடம் விட்டு இடம்

பெயரும் பேரரணாக இருந்தது இந்த இயங்கு எயிலால் முப்புரத்தவர் தேவருக்கும் யாவர்க்கும் இன்னல் பல இழைத்து வந்தனர். இதற்கு ஆற்றாது பிரமன் முதலிய தேவர்கள் எல்லாரும் கூடி வந்து இவனைச் சரண் புகுந்து இரக்கின்றார்கள் அப்பொழுது ஊழித்தீப்போல் இறைவன் சினம் கொண்டு மாயஞ்செய் அவுணர் வாழும் மும்மதிலையும் அழிக்க முற்பட்டான்”[9] என்று சண்முகம்பிள்ளை இலக்கியங்களை மேற்கோள்காட்டி சிவன் முப்புரம் எரித்த வரலாற்றைக் கூறுகிறார்.

**“ஆதி அந்தணன் அறிந்து பரிகொளுவ**
**வேதமா பூண் வையத் தேர் ஊர்ந்து**
**நாகம் நாணா மலை வில்லாக**
**மூவகை ஆர் எயில் ஓர் அழல் – அம்பின் முனிய**
**மாதிரம் அழலது எய்து – அமரர் வேள்விப்**
**பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான்”** (பரி. 5: 22 - 27)

**“ஓங்குமலை பெருவில் பாம்புஞாண் கொளீஇ**
**ஒரு கணை கொண்டு மூவெயில் உடற்றி**
**பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த**
**கறை மிடற்று அண்ணல் காமர் சென்னிப்”** (புறம். 55: 1 - 4)

என்னும் இலக்கியச் சான்றுகள் சிவன் பூமியைத் தேராகவும் வேதங்களைக் குதிரையாகவும் கொண்டு பிரம்மன் தேரைச் செலுத்த இமய மலையை வில்லாக வளைத்து அழல் அம்பு கொண்டு முப்புரம் எரித்தான் என்பதைப் பதிவு செய்துள்ளன. அனைவரின் உயிரினையும் கவர்ந்து அழிக்கும் குணம் உடைய எமனையும்

அழிக்கும் குணம் உடையவன் சிவன் என்பது கலித்தொகையின் மூலம் தெளிவுபடுத்தப்படுகிறது.

**"படர் அணி அந்தி பசுங்கட் கடவுள்**
**இடரிய ஏற்று எருமை நெஞ்சு இடந்து இட்டு**
**குடர் கூளிக்கு ஆர்த்துவான் போன்ம்"** (கலி. 101: 24 - 26)

**கயிலாயக் காட்சி**

சிவனுக்குரிய மலை கயிலாய மலை என்றும் அவன் இமய மலை மன்னன் இமவான் பெற்ற மகளான உமையை மணந்தான் என்பதும் புராணச் செய்தி. சிவன் உமையம்மையைத் தன் உடலின் ஒரு பாகத்தில் கொண்டு விளங்குவதன் காரணமாக உமையொருபாகன் என்றும் அர்த்தநாரீசுவரன் என்றும் அழைக்கப்படுகிறான். இறைவன் இறைவியுடன் சேர்ந்திருப்பது உலக நன்மையின் பொருட்டு என்பது சிவ சக்தியின் இணைவுத் தத்துவம். சிவன் உமையொரு பாகனாய்க் கயிலாய மலையில் உலக இன்பம் நிறைவேற அமர்ந்தான் என்று திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது.

**"உமை அமர்ந்து விளங்கும் இமையா முக்கண்"**

(திருமுருகு.153)

## இராவணன் கயிலாய மலையைப் பெயர்த்தமை

இலங்கை மன்னன் இராவணன் சிவபக்தி கொண்டவன். இறைவன் உறையும் கயிலாய மலையை அவன் தன் விரல்களால்

பெயர்த்தெடுக்க முற்பட்ட நிலையில் சிவன் தன் ஒரு விரலால் அழுத்தத் துன்புற்று இறைவனைத் துதித்தான். ராவணனின் துதிக்கு மயங்கிய இறைவன் நீண்ட வாழ்நாளும் படைக்கலமும் வழங்கினான் என்று கலித்தொகை குறிப்பிடுகிறது.

**"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
**உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக,**
**ஐ இரு தலையின் அரக்கர் கோமான்**
**தொடிப்பொலி தடக்கையின் கீழ்புகுந்து, அம்மலை**
**எடுக்கல் செல்லாது உழப்பவன் போல"** (கலி. 38: 1 - 5)

## உமையுடன் கூடிய காட்சி

சிவன் உமையொடு இணைந்திருக்கும் காட்சி சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. "அருட் சக்தி பெண் வடிவம் கொண்டதும் நம் பொருட்டே ஆகும். இவ்வுலகில் உள்ள உயிர்கள் எல்லாம் ஆண், பெண் என இருவகையாகப் பிரிந்து வாழ்ந்து இன்புறுகின்றனர். செடி கொடிகளிலும் ஆண் பெண் தன்மை உண்டு. எல்லா உயிர்களும் யோகத்தை நுகர இறைவன் சக்தியும் சிவனுமாகி அம்மையப்பராயிருந்து இவ்வுலகை உண்டுபண்ணுகின்றான். அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் என திருக்களிற்றுப்பாடியார் இயம்புகிறது சிவலிங்கத்திலுள்ள லிங்கம் சிவமும் பீடம் சக்தியுமாகும்"[10] என்று சிவ சக்தியின் இணைந்த வடிவத்தை குறிப்பிடுவர். "உமை முக்கண்ணனோடு ஒருங்கிணைந்து கயிலையில் அமர்ந்திருத்தல் என்பது அவன் உடலோடு உடலாய் ஒரு பாதியாக அமைந்து விளங்கும்

அருங்காட்சிதான். இறைவனுடைய செம்மேனிக்கு மாறான கருமையும் பசுமையான நிறமுடையளாய் உள்ளாள் இவள்”[11] என்று உமையுள் இறைவனும் இணைந்த வடிவை மு. சண்முகம்பிள்ளை மேற்கோள் காட்டிக் குறிப்பிடுவர்.

சங்க இலக்கியங்களில் கலித்தொகை சிவன் உமையுடன் இணைந்திருக்கும் காட்சியை “உமை அமர்ந்து உயர்மலை இருந்தனன்” (கலி. 38: 2) என்று குறிப்பிடுகிறது. இமைக்காத கண்கள் உடையவனாகிய சிவபெருமான் தன் ஒரு பாகத்தில் உமையைக் கொண்டு முப்புராசுரர்களை வென்றொழித்தான் என்று திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது.

**“உமை அமர்ந்து விளங்கும் இமையா முக்கண்**
**மூஎயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்”** (திருமுருகு.153-154)

## கொற்றவை

தமிழ் மொழியின் தொன்மையான இலக்கண நூலான தொல்காப்பியம் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் நான்கு நிலங்களுக்கும் தெய்வங்களை வகுத்துக் கூறியிருக்கிறது. பிற்கால இலக்கண நூலான நம்பியகப்பொருள் பாலை நிலத்துக்கான தெய்வத்தைக் கொற்றவை எனக் குறிப்பிடுகிறது. அவ்வாறே புற இலக்கண நூலான புறப்பொருள் வெண்பாமாலை நிரைகவர்தல் தொழிலுக்குரிய வெட்சித்திணையில் கொற்றவை நிலை என்னும் துறையை வகுத்துள்ளது. இதனால் பாலைக்கு கொற்றவையைத் தெய்வமாகக் கொண்டது பிற்கால வழக்கெனல் பொருந்தும்.

“கன்னி விடலை காளை மீளி”[12] என்னும் நூற்பா அடியால் கன்னி என்னும் சொல் பாலைக்குரிய தெய்வமாகத் துர்க்கையைக் குறிப்பிடுகிறது. துர்க்கையை வெற்றி தெய்வம் என்றும் கொற்றவை என்றும் குறிப்பதுண்டு. புறப்பொருள் வெண்பாமாலை போரில் வெற்றி தந்த கொற்றவைக்கு வீரர்கள் நன்றி செலுத்தும் நிகழ்வொன்றைக் கொற்றவை நிலை என்னும் துறையாக வகுத்துரைக்கிறது.

**“ஒளியின் நீங்கா விறற்படையோன்**
**அளியினீங்கா அருளுரைத் தன்று”[13]**

இதனால் கொற்றவையைப் பாலைக்குரிய தெய்வம் என்று வரையறை செய்தது பிற்கால வழக்கென்று புலப்படும்.

குறிஞ்சி நிலமும் முல்லை நிலமும் கோடையில் தம் இயல்பு மாறுதல் பாலை. ஆக, கொற்றவையின் இருப்பிடம் பாலை. அதாவது குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிந்த நிலம் என்பது புலப்படும் முல்லைப்பாட்டில் தலைவியின் துன்பம் தீர விரிச்சி கேட்கும் நிகழ்வும் நெடுநல்வாடையில் தலைவனுக்கு வெற்றி வேண்டிக் கொற்றவைக்கு நிகழ்த்தும் வழிபாடும் பன்னெடும் காலத்துக்கு முன்பே தமிழகத்தில் கொற்றவை வழிபாடு சிறந்திருந்தமைக்குச் சான்றுகள்.

சங்க இலக்கிய நூலான புறநானூறு கொற்றவையை பழையோள் (புறம். 166: 2) என்று குறிப்பிடுகிறது. சிவனை தொடக்கமும் முடிவும் அற்றவன் என்றும் குறிப்பிடும் இலக்கியங்கள்

சிவனுக்கு முது முதல்வன் என்னும் பெயரைப் பதிவு செய்துள்ளன. பழையோள் என்றும் கொற்றவை என்னும் பெயர்ப்பதிவுகள் திருமுருகாற்றுப்படையில் காணப்படும் காரணத்தால் சிவனின் தேவியாகிய உமையம்மையே சிவனுடன் இயைத்து அவளையும் ஆதியந்தம் அற்ற பழையோள் என்றும் வெற்றிக்குக் காரணமாக இருப்பதால் கொற்றவை என்றும் அழைத்திருக்கலாம் எனப் புலனாகிறது. திருமுருகாற்றுப்படை வெற்றிக்குரியவள் கொற்றவை என்பதைப் பதிவு செய்து அவளே உமை என்று அறியவும் வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுக்கிறது.

**“வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ**

**இழையணி சிறப்பின் பழையோள் குழவி”** (திருமுருகு.258-259)

பாலை நில மறவர்களின் ஒழுக்கத்தைக் குறிப்பிடும்போது இலக்கியங்கள் அவர்களை வன்கண் மறவர் என்றும் அச்சம் அறியாதவர்கள் என்று குறிப்பிடுகின்றன. புறநானூறு, குறுந்தொகை, பரிபாடல், கலித்தொகை முதலான இலக்கியங்கள் பாலை நிலத் தெய்வம் கொற்றவை என்பதற்கான சான்றுகளைத் தன்னகத்தே கொண்டு விளக்குகின்றன. தொல்காப்பியர் கொற்றவையை முழுமையாக இனம் காட்டவில்லை எனினும் சங்க இலக்கியக் காலத்தில் கொற்றவை வழிபாடு பெருவழக்குப் பெற்றமையினையே இலக்கியங்கள் தெளிவுப்படுத்தியுள்ளன. கொற்றவை கானகத்தைத் தன்னுடைய இருப்பிடமாகக் கொண்டவள். பெரிய காட்டினை தன் இருப்பிடமாகக் கொண்டு கானகத்தில் வாழ்பவர்களுக்குக் காவலாக இருப்பவள் என்று இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இதனை,

“ஓங்கு புகழ் கானமர் செல்வி” (அகம். 345: 3 - 4) “பெருங் காட்டுக் கொற்றி” (கலி. 89: 8) என்னும் சான்றுகளால் அறியலாம்.

கொற்றவை சூலத்தை தன் கையில் கொண்டிருக்கும் காரணத்தால் சூலி என்று அழைக்கப்பட்டமையினைக் குறுந்தொகை “விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலி” (குறுந். 218: 1) என்னும் சான்றால் வலியுறுத்துகிறது. கொற்றவையின் தோற்றம் அச்சம் கொள்ளத்தக்கதாகவும் நுதல் விழியுடன் தோற்றமளித்ததாகவும் பரிபாடல்,

**“நெற்றி விழியால் நிறை திலகம் இட்டாளே**
**கொற்றவை கோலம் கொண்டு ஓர் பெண்”** (பரி. 11: 99 - 100)

என்னும் அடியில் பதிவு செய்துள்ளது. “இவள் (கொற்றவை) உலகத்திற்கும் வெற்றி தருபவள். போர் வீரர்கள் வாகை மரத்தின் துய்களையுடைய பூவைப் பனங்குருத்தோடு தொடுத்து அணிந்து கொள்கின்றனர். இந்த வாகைப்பூ வெற்றிக்கு அறிகுறியாக அணியப்படுவது”[14] எனக் கூறும் கருத்து கொற்றவை வெற்றிக்குரிய தெய்வம் என்றும் அவளை வழிபட வாகை மலருடன் பனங்குறுத்தைத் தொடுத்து அணிந்தமையை அறிய முடிகிறது.

கொற்றவையின் கோயில் ஊரின் புறத்தே விளங்கியது என்பதற்கு முல்லைப்பாட்டும் நெடுநல்வாடையும் சான்றளிக்கின்றன. விரிச்சி கேட்கும் பெண்கள் ஊர் புறத்தே இருக்கும் கோயிலை நாடினர் என்று கூறுவதால் இதனை அறியலாம்.

**“பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை**
**அருங்கடி மூதூர் மருங்கிற் போகி**
**யாழிசை இனவன் டார்ப்ப நெல்லொடு**
**நாழி கொண்ட நறுவீ முல்லை**
**அரும்பவி ழலரி தூஉய்க் கைதொழுது**
**பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப”** (முல்லை. 6 - 11)

விரிச்சி கேட்கும் காலத்தில் நெல்லும் மலரும் தூவி வழிபடும் காரணத்தால் நெல்லும் மலரும் கொற்றவையின் வழிபாட்டில் சிறந்தமையினை அறியலாம். பொதுவான நிலையில் கொற்றவையின் வழிபாட்டிடம் காட்டிடத்தே இருந்தமையினைப் பட்டினப்பாலை உறுதிப்படுத்துகிறது.

**“பூதம் காக்கும் புகல் அருங் கடிநகர்**
**தூதுணம் புறவொடு துச்சில் சேக்கும்**
**முதுமரத்த முரண்களரி”** (பட்டின. 57 - 59)

என்னும் பட்டினப்பாலை அடிகள் காவல் சூழ்ந்த நகரை அடுத்து பூதங்கள் கோயிலைச் சூழ்ந்து காவல் காக்கப் பழமையான காட்டகத்தே கொற்றவையின் கோயில் இருந்ததாகக் குறிப்பிடுகிறது. மான்கள், குரங்குகள் நிறைந்து வாழும் காட்டகத்தே கொற்றவையின் கோயில் விளங்கியமையினை,

“**யானை தந்த முளிமர விறகின்**
**கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து**
**மடமான் பெருநிரை வைகுதுயில் எடுப்பி**
**மந்தி சீக்கும் அணங்குடை முன்றில்”** (புறம். 247: 1 - 4)

என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

கொற்றவையை வழிபடும் மறவர்கள் முறைப்படியாகப் பணிந்து வழிபட்டமையினையும் இரத்தமே கொற்றவைக்குரிய படைப்புப் பொருள் என்பதனையும் இரத்தம் கலந்து செய்த சோற்றுப் பிண்டங்கள் கொண்டு அவள் வழிபடப்பட்டாள் என்று பின்வரும் இலக்கியச் சான்றுகள் குறிப்பிடுகின்றன.

**"விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்**
**கடனும் பூணாம் கைந்நூல் யாவாம்"** (குறுந். 218: 1 - 2)

**"அணங்குடை மரபின் கட்டில்மேல் இருந்து**
**தும்பை சான்ற மெய்தயங்கு உயக்கத்து**
**நிறம்படு குறுதி புறம்படின் அல்லது**
**மடை எதிர் கொள்ளா அஞ்சு வரு மரபின்**
**கடவுள் அயிரை"** (பதிற். 9: 14 - 18)

**"குருதி விதிர்ந்த குவவுச் சோற்றுக் குன்றொடு**
**உருகெழு மரபின் அயிரை பரவி"** (பதிற். 88: 11 - 12)

பதிற்றுப்பத்தில் அயிரை மலையில் வாழ்கின்ற கொற்றவை குறித்த குறிப்புகள் விரிவான நிலையில் காணக் கிடக்கின்றன.

கொற்றவை வழிபாடு குறித்து தமிழிலக்கியத்தில் கொற்றவை என்பதற்கு ஆறலைக் கள்வர்களுக்குக் கொற்றம் தருபவள் பழங்கால வேட்டைத் தெய்வமே பின்னர் இப்படி மாறியிருக்கிறது. உரோமானியரின் கன்னித் தேவதையின் டயானாவும் வேட்டைத் தெய்வமே. இவளே ஆற்றுத் துறைகளில் காவல் செய்பவள். காட்டு விலங்குகளையும் வேட்டுவர்களையும் காப்பவளாகக் கருதப்பட்டாள்.

வில்லும், அம்பும் கையில் வைத்திருப்பாள். தலையில் பிறை நிலா அணிந்திருப்பாள். தமிழிலக்கியத்தில் வரும் கொற்றவையும் சிலவற்றில் ஒற்றுமையுடன் திகழ்வதை உணர முடியும். இனக்குழு மக்களின் வேட்டைக்குக் கொற்றம் தருபவளான கொற்றவையே பின்னர் வேந்தருக்கும் வீரருக்கும் கொற்றம் தருபவளாகக் கொண்டாடப்பட்டாள்”[15] என்று பி. எல். சாமி கூறும் கருத்து சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய சிலப்பதிகாரம் வேட்டுவவரி என்னும் பகுதியில் கொற்றவை வழிபாடு விரிவான நிலையில் கூறப்பட்டுள்ளது. ஆறலைக் கள்வர்கள் பாலை நிலத்தில் வாழ்பவர்கள் அவர்களின் தொழில் கொள்ளையிடுவது வழிப்பறி செய்வது. அவர்கள் கொற்றவையை வழிபடுவதைத் தம் குணமாகக் கொண்டிருந்தனர். தொல்காப்பியத்தில் கோடிட்டுக் காட்டப்பட்ட கொற்றவை வழிபாடு சங்க இலக்கியத்தில் பெரும்பான்மை வழிபாடாக நிலைபெற்றும் பிற்காலத்தில் முறைப்படுத்தப்பட்ட வழிபாடாக மாற்றம் அடைந்தது என்பதற்குத் தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் மற்றும் சிலப்பதிகாரம் ஆகியன சான்றுகளாக அமைந்திருக்கின்றன.

## திருமால் அவதாரங்கள்

தொல்காப்பியர் குறிப்பிடும் நானிலத் தெய்வங்களுள் முல்லைக்குரிய திருமாலின் அவதாரங்கள் பலவும் சங்க இலக்கிய நூல்களில் பரவலான நிலையில் பேசப்பட்டுள்ளன.

## பலதேவன்

பலதேவன் வாலியோன் என்றும் வெள்ளை மூர்த்தி என்றும் அழைக்கப்படுகிறான். பலதேவன் குறித்த உருவ எழிலை இலக்கியங்களின் வழி அறிய முடிகிறது. குறிப்பாகக் கலித்தொகை, பரிபாடல் ஆகிய இலக்கியங்கள் அவனது வெண்மை நிறம் குறித்து விரிவான நிலையில் பேசியுள்ளன. அவனது உருவ எழிலுக்கு வெண்மை நிறமான பொருள்கள் உவமையாகக் கூறப்பட்டுள்ளன. பால் போன்ற வெண்மை நிறமான உருவத்தை உடையவன் குற்றமற்ற வெண்மை நிறத்தை உடையவன் என்பதை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இதனை,

**"பால் நிற உருவின் பனைக் கொடியோன்" (புறம். 58: 14)**
**"வளையொடு புரையும் வாலியோன்" (பரி. 21: 20)**

**"ஒரு குழையவன் மார்பில் செண்தார் போல் ஒளிமிகப்**
**பொரு அறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்"**
**(கலி.105:11-12)**

என்னும் இலக்கியச் சான்றுகளான் அறியலாம். ஆறாம் படைவீடு என்றழைக்கப்படும் திருமாலிருங்குன்றம் (பழமுதிர்ச்சோலை) மலையில் இருந்து வழியும் அருவி பலதேவன் மார்பில் அணிந்திருக்கும் மாலையினை ஒத்துக் காணப்படுவதாகப் பரிபாடல் குறிப்பிடுகிறது.

**"அராஅணர் கயந்தலைத் தம்முன் மார்பின்**
**மராமலர்த் தாரின் மாண்வரத் தோன்றி**

**அலங்கும் அருவி ஆர்த்து இமிழ்பு இழிய" (பரி. 15: 19 - 21)**

பலதேவனுக்குரிய கொடியாக பனைக் கொடியும், கலப்பைக் கொடியும் கூறப்பட்டுள்ளன. இதனை "நாஞ்சிலோன்" (பரி. 13: 33) "பனைக் கொடியோன்" (புறம். 58: 14) என்றும் இலக்கியங்கள் அழைக்கின்றன. மேலும் நரசிம்மாவதாரம் குறித்த செய்தியும் (பரி. 4: 10 - 21) பகுதியால் அறியக் கிடக்கிறது.

**கண்ணன்**

திருமாலின் அவதார நிகழ்வுகளில் சிறப்பாகக் கருதத்தக்கது கண்ணன் அவதாரம். நாட்டில் நடைபெறும் அநீதிகளை அழித்து அறத்தை நிலைநாட்டுவதற்குக் கண்ணன் அவதாரம் உதவியது எனலாம். மகாபாரதக் கதை நிகழ்விற்கும் கண்ணனுக்கும் இயைபு உண்டு. உலகில் அநீதி பெருகும் போது இறைவனே ஏதேனும் ஓர் உருவில் அநீதியைத் தடுத்து அறத்தை நிலை நாட்டுவான் என்பதை உணர்த்திய அவதாரமே கண்ணன் அவதாரம்.

சங்க இலக்கிய நூல்களில் காலத்தால் பிற்பட்டனவாகக் கருதப்படும் கலித்தொகையும் பரிபாடலும் கண்ணன் அவதாரத்தை விரிவான நிலையில் எடுத்துக் கூறியுள்ளன. கண்ணன் பலதேவனுக்கு இணையானவனாகக் கருதப்படுகிறான். இச்செய்தியைப் பரிபாடல் உணர்த்துகிறது. (பரி. 2: 20 - 21)

கண்ணன் ஆயர் பாடியில் சிறுவனாக இருந்து வளர்ந்த காலத்து நிகழ்த்திய செயல்கள் அவனது விளையாட்டுக் குணத்தை எடுத்துக்காட்டுவன. இதனை ஆழ்வார் பாசுரங்கள் தெளிவுறுத்தும்.

கண்ணன் விளையாட்டுக் குணங்களுடன் சிறந்த கலைஞனாகவும் உலகை ஆளும் ஒப்புமை கூற இயலாத மன்னனாக விளங்கிய தன்மையினை,

**“இடவல குடஅல கோவல காவல**
**காணா மரப நீயா நினைவ**
**மாயா மன்ன உலகு ஆள் மன்னவ” (பரி. 3: 83 - 86)**

என்னும் அடிகள் எடுத்துக்காட்டுகின்றன. கண்ணன் குறித்த தொன்மங்கள் சங்க இலக்கியப் பாக்களில் பயின்று வந்துள்ளன. திருமால் கண்ணன் அவதாரத்தில் பெண்களின் ஆடையைக் கவர்ந்து சென்ற நிகழ்வினைக் கண்ணன் குறித்த தொன்மமாக அகநானூறு,

**“வண்புனல் தொழுதை வார்மணல் அகன்றுறை**
**அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்**
**மரம் செல மிதித்த மாசுல் போல” (அகம். 59: 3 - 5)**

என்னும் அடிகளால் தெளிவு படுத்தியிருக்கிறது. அவுணர்களை அழித்த சிறப்புடையவன் திருமால், அவன் கம்சனால் ஏவப்பட்ட குதிரையை வாய்பிளந்து கொன்றான் என்று கலித்தொகை குறிப்பிடுகிறது. புராண நிகழ்வுகள் சங்க இலக்கியங்களில் பொதிந்திருக்கும் பான்மையில் மதுரைக்காஞ்சியில் இடம் பெற்றிருக்கும்.

**“தொல்லானை நல்லாசிரியர்**
**புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்**
**நிலந்தரு திருவி நெடியோன் போல” (மதுரை. 761 - 763)**

என்னும் அடிகளை எடுத்துக்காட்டும் மு. சண்முகம்பிள்ளை இவ்வடிகள் நிலந்தரு திருவின் நெடியோனாகிய திருமாலைக் குறிப்பன என்றும் அவன் கண்ணன் அவதாரத்தில் வழங்கிய கீதை நிகழ்வை இவ்வடிகள் உணர்த்துகின்றன என்றும் நச்சினார்க்கினியரை மேற்கோள்காட்டிக் குறிப்பிடுகின்றார்.

கண்ணனின் இளமைக் காலம் அவனது பக்குவப்பட்ட பருவத்தில் இருந்து முற்றிலும் மாறுபட்டது எனினும் கண்ணனது காலம் முழுமையுமே அதிசயமான பல செயல்கள் நிறைந்திருக்கின்றன. சங்க இலக்கியங்களில் மன்னர்களைப் புகழ்ந்துபாடும் ஒப்புமைகளில் பாரதக் கதைத் தொன்மங்கள் காணப்படுகின்றன. அத்தொன்மங்கள் கண்ணன் குறித்த செய்திகளை அறிந்து கொள்ளத் துணைபுரிகின்றன. “எல்லா நிலத்தையும் தன்னிடத்தே காட்டின பெருஞ் செல்வத்தையுடைய மாயோனைப்போலத் தொல்லாணையை உடைய நல்லாசிரியர் என்றது. கண்ணன் எப்பொருளும் தானாயிருக்கிற படியைக் காட்டி ஸ்ரீகீதை அருளிச் செய்து எல்லாரையும் போதித்தாற்போலப் போதிக்க வல்ல ஆசிரியர்”[16] என்று நச்சினார்க்கினியரை எடுத்துக்காட்டி புறப்பாடலை கீதை உரையுடன் தொடர்புபடுத்தியுள்ளார் சண்முகம்பிள்ளை.

கலித்தொகைப் பாடல்கள் புராணச் செய்திகளின் இருப்பிடமாகத் திகழ்கின்றன. அவற்றுள் மகாபாரதத் தொன்மங்கள் குறிப்பிடத்தக்கவை. பாரதக் கதையில் கண்ணில்லாத மன்னனாக

வரும் திரிதராட்டிரனின் மக்கள் நூற்று வரும் கவுரவர்கள் கலித்தொகை திருதிராட்டிரனை வடமொழிப் பெயர் பெற்றவன் என்றும் அவனது மக்கள் ஈரைம்பதின்மர் என்றும் புறநானூறு குறிப்பிடுகின்றது. கலித்தொகப் பாடலடிகள் தமக்கு முன் சமுதாயத்தில் வழங்கப்பட்ட மகாபாரதத் தொன்மத்தை விரிவான நிலையில் எடுத்துக் கூறியுள்ளன (கலி. 25: 1 - 8).

கண்ணன் பாரதப் போரின் மூலம் என்பதை உணர்ந்து கொள்ளும் வண்ணம் அவ்வவதாரச் சிறப்புக்களைச் சங்கப் பாடல்கள் எடுத்துக் கூறியுள்ளன.

## இருபெரும் தெய்வம்

கண்ணனையும் பலதேவனையும் இருபெரும் தெய்வங்களாகக் கொண்டு வணங்கும் மரபு நிலையினை இலக்கியங்கள் தெளிவுபடுத்தியுள்ளன. கண்ணனும் பலதேவனும் ஒன்றாகவே வைத்து எண்ணப்படும் நிலையினைப் பரிபாடல்,

**“நீயே வளையொரு புரையும் வாலியோற்கு அவன்**
**இளையன் என்போர்க்கு இளையை ஆதலும்**
**புதைஇருள் உடுக்கைப் பொலம்பனைக் கொடியோற்கு**
**முதியை என்போர்க்கு முதுமை தோன்றலும்**
**வடுஇல் கொள்கையின் உயர்ந்தோர் ஆய்ந்த**
**கெடுகில் கேள்வியுள் நடு ஆகுதலும்**
**இந்நிலைத் தெரிபொருள் தேரின் இந்நிலை**
**நின் நிலைத் தோன்றும் நின்தொல் நிலைச் சிறப்பே”**

**(பரி. 2: 20 - 27)**

என்னும் பாடலடிகளின் வழி எடுத்துக்காட்டியுள்ளது. கண்ணனும் பலதேவனும் உலக உயிர்களை எல்லாம் காத்தருளும் ஒரே பணியினை மேற்கொள்ளும் உயரிய தத்துவார்த்தச் சிந்தனையை பரிபாடல் தெளிவுபடுத்துகிறது (பரி. 15: 13 - 14). திருமால் வராக அவதாரம் எடுத்து நீருக்குள் புதைந்து கிடந்த பூமியை மீட்டுக் கொண்டு வந்த வராக அவதாரத்தைப் பரிபாடலும் (பரி. 2: 16 -19) மகாபலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண் கேட்டுத் திருவிக்கிரம அவதாரம் எடுத்து மூவடியால் உலகளந்த வரலாற்றை முல்லைப்பாட்டும், பெரும்பாணாற்றுப்படையும், கலித்தொகையும் எடுத்துக் கூறியுள்ளன. இதனை,

**“நீர் செல நிமிர்ந்த மாஅல் போல” (முல்லை. 3)**

**“இருநிலம் கடந்த திருமறு மார்பன்**
**முந்நீர் வண்ணன்” (பெரும். 29 - 30)**

**“ஞாலம் மூன்று அடித்தாய முதல்வன்” (கலி. 124: 1)**

என்னும் சான்றுகள் எடுத்துரைக்கும்.

## இல்லுறை தெய்வ வழிபாடு

பண்டைத் தமிழ் மக்கள் தாம் வாழ்கின்ற இல்லத்தில் வணிக நிறுவனங்களில் தெய்வங்கள் உறைவதாக எண்ணி வழிபாடாற்றினர். நம்பிக்கையின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட அவ் வழிபாட்டு முறை பிற்கால வழிபாட்டு முறையின் வளர்ச்சிக்குத் தோற்றுவாயாக அமைந்தது எனக்

கூறலாம். இல்லுறை தெய்வத்தைக் கைகூப்பி வணங்கிப் பலி செலுத்தியமையினை அகநானூற்றுப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**“நல்லிறை மெல்விரல் கூப்பி**
**இல்லுறை கடவுட்கு ஆக்குதும் பலியே” (அகம். 282: 17 - 18)**

தோழி கூற்றாக அமையும் இப்பாடலில் பழமையான வழிபாட்டு வழக்கம் முன்வைக்கப்படுகிறது. நினைத்த செயல் நடந்த காரணத்தால் இல்லுறை தெய்வத்திற்கு உணவுப் பலியிட்ட வழக்கம் தெளிவாகிறது.

சூர் என்னும் வருத்தும் தெய்வத்தை இல்லத்தில் வழிபட்டமையினை நற்றிணைப்பாடல் அறிவிக்கிறது. சூர் மகளுக்குப் பலியாகக் கொடுத்த உணவை உண்ணுவதற்காகச் செல்வச் செழிப்புள்ள மனையில் காக்கைகள் கூட்டமாக அமர்ந்திருந்தமை தெளிவாகிறது.

**“கொடுங்கண் காக்கைக் கூர்வாய்ப் பேடை**
**நடுங்கு சிறைப் பிள்ளை தழீஇக் கிளை பயிர்ந்து**
**கருங்கண் கருனைச் செந்நெல் வெண்சோறு**
**சூருடைப் பலியொடு கவரிய குறுங்கால்**
**கூழுடை நல்மனைக் குழுவின இருக்கும்” (நற். 367: 1 - 5)**

இல்லுறை தெய்வத்திற்கான உணவாக நெல் சோறும் கருணைக் கிழங்கும் படைக்கப்பட்டது. தற்காலத்தில் சுவற்றில் தெய்வ உருவங்கள் படமாக மாட்டப்பட்டு வழிபாடு நடத்தப்படுவது வழக்கம். இவ்வழக்கம் பண்டை நாளிலேயே இருந்தது என்பதை அகநானூற்றுப் பாடல் உணர்த்துகிறது. தலைவி உடன் போக்குச்

சென்ற பின் செவிலித்தாய் அவளை நினைத்துப் புலம்பும் காலத்து தலைவி வழக்கமாக வழிபடும் சுவர் ஓவியத்துக்கும் வழிபாடு நடத்தப்படவில்லை என்பதைக் குறிப்பிடுகிறாள்.

**"காழ் புனைந் தியற்றிய வனப்பமை நோன்சுவர்**
**பாவையும் பலி எனப் பெறாஅ"** (அகம். 369: 7 - 8)

கூதிர் காலத்தைச் சிறப்பிக்கும் நெடுநல்வாடையில் பிச்சிப்பூ மலர்ந்ததை அறிந்து பெண்கள் தம் இல்லத்தில் மாலைக்கால வழிபாடாற்றியமைக்கான குறிப்புகள் காணப்படுகின்றன.

**"வெள்ளி வள்ளி வீங்கிறைப் பணைத்தோள்**
**மெத்தென் சாயல் முத்துறல் முறுவல்**
**பூங்குழைக்கு அமர்ந்த ஏந்தெழில் மழைக்கண்**
**மடவரல் மகளிர் பிடகைப் பெய்த**
**செவ்வி அரும்பின் பைங்காற் பித்திகத்து**
**அவ்விதழ் அவிழ்பதம் கமழப் பொழுதறிந்து**
**இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரி கொளீஇ**
**நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது**
**மல்லல் ஆவணம் மாலை யயர"** (நெடுநல். 36 - 44)

மென்மையான சாயலை உடைய பெண்கள் மாலைக் காலம் வந்தமையினைப் பிச்சிப் பூக்கள் மலர்ந்தது கண்டு அறிந்தனர். இல்லுறை வழிபாட்டில் நெல், மலர், விளக்கு ஆகியன பயன் கொள்ளப்பட்டன. இரும்பு விளக்கில் திரி இட்டு நெய் வார்த்து நெல், மலர் ஆகியவற்றைத் தூவி இல்லுறை தெய்வத்தை வழிபட்டதாக அறிய முடிகிறது. பட்டினப்பாலை மாலைக் காலத்தில்

இல்லங்களிலும் வணிக நிறுவனங்களிலும் வழிபாடு நிகழ்ந்தமையினைக் குறிப்பிடுகிறது.

## தென்புலத்தார் வழிபாடு

இறந்தவர்களுக்கு ஆண்டு தோறும் நிகழ்த்தப்படும் வழிபாடு தென்புலத்தார் வழிபாடு. மறு பிறவி குறித்த நம்பிக்கைகள் தமிழ் இலக்கியங்களில் ஆங்காங்கே பதிவு பெற்றுள்ளன. இறந்தவர்களின் ஆன்மா அமைதி அடைய வேண்டும். தம்மைச் சார்ந்த உறவுகளை அது எப்போதும் வாழ்த்த வேண்டும் நன்மைகளை வழங்க வேண்டும் என்னும் அடிப்படையில் தென்புலத்தார் வழிபாடு நிகழ்த்தப்படுகிறது.

**"இம்மை உலகத்து இறையாடும் விளங்கி**
**மறுமை உலகமும் மறு இன்று எய்துப**
**செறுநரும் விழையும் செயிர்தீர்க் காட்சிச்**
**சிறுவர்ப் பயந்த செம்மலோர் என" (அகம். 66)**

என்னும் அகப்பாடலடிகள் இம்மை மறுமை குறித்த நம்பிக்கையினைப் பதிவு செய்துள்ளன. பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் என்னும் மன்னன் துறக்க உலகை அடைந்த தன் முன்னோர்களுக்கு முறையான வழிபாட்டை மேற்கொண்டான் என்பதை அகநானூறு குறிப்பிடுகிறது.

**"துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை**
**முதியவர்ப் பேணிய உதியஞ் சேரல்**
**பெருஞ்சோறு கொடுத்த ஞான்றே" (அகம். 240: 7 - 9)**

நெட்டிமையார் போர் நெறிகளைக் கூற வரும்போது தமக்கான இறுதிக்கடன்களைச் செய்வதற்கும் தென்புலத்தில் வாழ்பவர்களுக்கு வழிபாடாற்றுவதற்கு குழந்தைகளைப் பெறாதவர்களுக்குப் போரில் இருந்து விலக்கினை அறிவிக்கிறார். அவர்கள் பாதுகாக்கப்பட வேண்டியவர்கள். எனவே பாதுகாப்பான இடத்திற்குச் சென்று விட வேண்டும் என்று வலியுறுத்துகிறார். "தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்/ பொன்போல் புதல்வர்ப் பெறாஅ தீரும்" (புறம். 9: 3 - 4) இறந்தவர்களுக்கு வான்சோறு வழங்கும் வழிபாட்டு முறையும் பண்டை நாளில் நிகழ்ந்தமையினைப் புறநானூறு பதிவு செய்துள்ளது.

> "**வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்**
> **முனித்தலைப் புதல்வர் தந்தை**
> **தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே"** (புறம். 250: 7-9)

## காவல்மர வழிபாடு

காவல் மரம் பண்டை மன்னர்களின் மானம் சார்ந்த குறியீடாக விளங்கியது. காவல் மரம் பண்டைய மன்னர்களின் குலக் குறியாகவும் பயன்பட்டிருக்கிறது. தாவரங்கள், விலங்குகள், சடப்பொருள்கள் ஆகியவற்றோடு தனி மனிதரோ ஒரு வர்க்கத்தினரோ கொண்டிருக்கும் குறியீட்டுத் தொடர்பினைக் குறிக்கும் சொல்தான் குலக் குறியியல் என்னும் உறவு முறையின் அடிப்படையில் கூட்டம் கூட்டமாக வாழும் மக்களுக்கும் தாவர வகைகள் விலங்கினங்கள் இயற்கைப் பொருள்கள் போன்றவற்றிற்கும் இடையில் ஒருவகைப் புதிரான தொடர்பு நிலவுகிறது என்பது பற்றிய நம்பிக்கையே குலக்குறியியல்"[17] என்பர்.

காவல் மரம் மன்னனின் காவலுக்கு உரியதாக இருந்தது. காவல் மரம் வெட்டப்படுவது மன்னனின் இழுக்குக்கு உரிய செயலாகக் கருதப்பட்டது. காவல் மரத்தால் செய்யப்பட்ட முரசு வழிபாட்டுக்கு உரியதாக இருந்தது.

**“முரண்மிகு சிறப்பின் உயர்ந்த ஒக்கலை**
**பலர்மொசித் தோம்பியை திரள்பூங் கடம்பின்**
**கடியுடை முழுமுதல் துமிய வேஎய்**
**வென்றெறி முழங்க பணை செய்த வெல்போர்**
**நாரரி நறவின் ஆர மார்பி**
**போரடு தானைச் சேரலாத”** (பதிற். 11: 11 - 16)

காவல் மரத்தில் அணங்கு இருப்பதாக நம்பி அதற்கு வழிபாடு நிகழ்த்தப்பட்டது. அணங்குடைக் கடம்பு” (பதிற். 88: 6).

## யாழ் வழிபாடு

தொழிலுக்குப் பயன்படும் வாழ்வியல் சார்ந்த கருவிகளையும் வணங்குவது தமிழர் பண்பாட்டு மரபு. அவ்வாறே பண்டை இலக்கியங்களில் கலைகளைப் போற்றி வளர்த்த பாணர் முதலானோர் தங்கள் இசைக் கருவிகளையும் வழிபாட்டுக்கு உரியதாகக் கொண்டு வணங்கினர். “அணங்கு மெய்ந்நின்ற அமைவரு காட்சி” (பொருந. 20) “கை தொழு மரபின் – யாழ்” (அகம். 115: 9) என்னும் சான்றுகள் இதனை வலியுறுத்தும். பொதுவாக இசைக் கருவிகள் அனைத்தும் தெய்வம் உறைவதாகக் கொண்டு வணங்கப்பட்டன.

## முரசு வழிபாடு

மன்னனின் மனம், கொடை, வெற்றி, போர் முதலான நிகழ்வுகளை அறிவிக்கும் முகமாக முரசு பயன்படுத்தப்பட்டது. முரசுக்குப் பலி கொடுத்துப் போற்றும் வழக்கம் நிலவியமையினைப் புறநானூறு குறிப்பிடுகிறது.

**"மாசற விசித்த வார்புறு வள்பின்**
**மைபடு மருங்குப் பொலிய மஞ்ஞை**
**ஒலி நெடும் பீலி ஒண்பொறி மணித்தார்**
**பொலங்குழை உழிஞையொடு பொலியச் சூட்டி**
**குருதி வேட்கை உருகெழு முரசம்" (புறம். 50: 1 - 6)**

முரசு வைரம் பாய்ந்த மரத்தால் செய்யப்பட்டு மயில் பீலிகளும் உழிஞைப் பூக்களும் கொண்டு அழகுப்படுத்தப்பட்டு குருதிப்பலி இடப்படுவதை மேற்கண்ட பாடலடிகள் பதிவு செய்துள்ளன. முரசுக்குக் குருதி பலியாகக் கொடுக்கப்பட்டமையின,

**"பலிபெறு முரசம் பாசறைச் சிலைப்ப" (புறம். 362: 3)**
**"குருதிப் பலிய முரசு முழங்கு" (புறம். 369: 5)**

என்னும் சான்றுகளும் தெளிவுபடுத்துகின்றன.

## கடல் தெய்வ வழிபாடு

பண்டைத் தமிழர்கள் இயற்கையில் இறைவனைக் கண்டனர். அவ்வகையில் மனித வாழ்வுக்கு ஆதாரமான நீர் நிலைகளிலும் தெய்வங்கள் உறைவதாக எண்ணி வழிபட்டு வந்தனர். நெய்தல் நிலம் சார்ந்து வாழ்ந்த பரதவர்கள் கடலைத் தெய்வமாக வணங்கினர்.

மீன்பிடி தொழில் செய்து வாழ்ந்தவர்களுக்கு கடல் தெய்வமாக இருந்து தம்மைக் காக்கும் என்ற எண்ணம் இருந்தது. பட்டினப்பாலை பரதவர்கள் கடல் தெய்வத்தை வழிபட்ட பான்மையினை எடுத்துக் கூறியிருக்கிறது. பரதவர்கள் அமாவாசை பவுர்ணமி நாட்களில் கடலில் அலை எழுச்சி அதிகமாக இருக்கின்ற காரணத்தால் மீன்பிடிக்கச் செல்லாமல் கடலில் நீராடியும் நல்ல நீரில் குளித்தும் கடல் தெய்வத்தை வழிபட்டமைக்கு,

**"சினைச் சுறவின் கோடு நட்டு**
**மனைச் சேர்த்திய வல் அணகினான்**
**மடல் தாழை மலர் மலைந்தும்**
**பிணர்ப் பெண்ணைப் பிழி மாந்தியும்**
**புன் தலை இரும் பரதவர்**
**பைந்தழை மா மகளிரொடு**
**பாயிரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது**
**உவ்வு மடிந்து உண்டாடியும்"** (பட்டினப்பாலை. 86 - 92)

என்னும் அடிகள் சான்றாக அமைகின்றன. பரதவர்கள் கடற்கரை மணல் பரப்பில் சுறாவின் கொம்பினை நட்டு அதற்குத் தாழை மலர்களால் அலங்காரம் செய்து பனைமரத்தில் இருந்து எடுக்கப்பட்ட கள்ளையும் உண்டு தம் மனைவியரோடு கடலுக்கு மீன்பிடிக்கச் செல்லாமல் பகல் பொழுது முழுவதையும் கடற்கரையில் விளையாண்டு கழித்தமையினை அறிய முடிகிறது.

## கந்து வழிபாடு

பண்டைய வழிபாட்டு முறைகளுள் கந்து வழிபாடு சிறந்திருந்தது. திருமுருகாற்றுப்படை முருகன் இருக்கும் இடங்களில் ஒன்றாகக் கந்து என்பதைக் குறிப்பிடுகிறது. இதனைக் கந்துடை நிலையினும் (திருமுருகு. 226) என்னும் அடியினால் அறியலாம்.

கந்து வழிபாடு என்பது கற்களில் தெய்வத்தை நிறுத்தி வழிபடுவதாகும். மேடை அமைப்பில் ஏற்படுத்தப்பட்ட கற்களை வழிபடுவது கந்து வழிபாடு. இவ்வழிபாட்டைப் பட்டினப்பாலை குறிப்பிடுகிறது. போர்க்காலத்தில் அடிமைகளாக அழைத்து வரப்பட்ட பெண்கள் மாலை வேளையில் நீரில் மூழ்கிக் குளித்துக் கோயில்களை மெழுகித் தூய்மை செய்து விளக்கேற்றி வழிபாடு நடத்தியதைப் பட்டினப்பாலை தெரிவிக்கிறது.

**“கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி**
**அந்தி மாட்டிய நந்தா விளக்கின்**
**மலரணி மெழுக்கம் ஏறிப் பலர்தொழ**
**வம்பலர் சேக்கும் கந்துரைப் பொதியில்”** (பட்டினப். 246 - 49)

## பேய் வழிபாடு

பண்டைக்காலத்தில் வருத்தும் தெய்வங்கள் பலவும் அச்சத்தின் காரணமாக வழிபாட்டில் இருந்தன. மனிதனுக்கு நன்மை செய்யும் தெய்வங்களும் அச்சம் கொள்ளச் செய்யும் தெய்வங்களும் உண்டு என்னும் அடிப்படையில் பேய், பிசாசு, பூதம் என்பனவும் வழிபாட்டுக்குரியதாக விளங்கின. அச்சம் தரக்கூடிய இவை

கொற்றவையில் பரிகாரங்களாக விளங்கியனவாகும். சங்க அக, புற இலக்கியங்களில் பேய்கள், பிசாசுகள் குறித்த தகவல்கள் விரிவான நிலையில் எடுத்தாளப்பட்டுள்ளன. மக்களுக்கு அச்சத்தை விளைத்ததன் காரணமாக நற்றிணை இவற்றை உருகெழு தெய்வம் எனக் குறிப்பிடுகிறது (நற். 398: 1). தொல்காப்பியம் 'உரு' என்னும் சொல்லுக்கு 'அச்சம்' எனப் பொருள் தருகிறது. அச்சம் தரத்தக்க தெய்வம் உருகெழு தெய்வமென வழங்கப்பட்டதை இதன் மூலம் அறியலாம். பேய், பிசாசு, பூதம் ஆகியவற்றின்மேல் மக்கள் கொண்ட அச்சம் வழிபாட்டுக்குக் காரணமாக அமைந்தது. பேய், பிசாசு மற்றும் அதன் இனங்களை பலிகொடுத்து அமைதிப்படுத்துவதன் மூலம் அவை தரும் இன்னல்களிலிருந்து காத்துக்கொள்ள முடியும் என மக்கள் நம்பினர்.

சங்க இலக்கியங்களில் பேய், பிசாசு குறித்த பதிவுகள் மக்கள் கொண்ட நம்பிக்கையினை எடுத்துக்காட்டுவனவாக அமைகின்றன. இரவுப் பொழுது பேய், பிசாசுகள் நடமாடும் காலம் என்பதை இலக்கியப் பதிவு தெளிவுபடுத்துகிறது. பேய்கள் உலாவும் காலம் நள்ளிரவு என்பதை மதுரைக்காஞ்சி பதிவு செய்துள்ளது.

**"பானாள் கொண்ட கங்குல் இடையது**
**பேயும் அணங்கும் உருவு கொண்டு ஆய்கோல்**
**கூற்றக் கொல்தேர் கழுதொடு கொட்ப"** (மதுரைக். 631 - 633)

என்னும் அடிகளில் நள்ளிரவு பேய் பிசாசு ஆகியவற்றுக்கு உரியது என்னும் சிந்தனை பதிவு பெற்றுள்ளது. இக்காலத்தில் ஒன்றுக்கொன்று மாறுபட்ட குணமுடைய கழுது, கூனி, பூதம்

ஆகியன அலைந்து திரியும் என்னும் சிந்தனை மக்கள் கொண்ட நம்பிக்கைக்குச் சான்றாகின்றது. காட்டில் வாழக்கூடிய கொற்றவையின் பரிவாரங்களாக அகநானூறு பேய் இனங்களைக் குறிப்பிடுகிறது. கொற்றவை கோயில் கொண்டிருக்கும் இடத்தில் கொற்றவைக்கான பணிகளைச் செய்து அவளுடைய அருளில் வாழ்வனவாகப் பேய்கள் குறிப்பிடப்படுகின்றன. (பெரும். 459, கலி. 89: 8).

பேய்கள் அச்சம் தரத்தக்க உருவம் உடையவை என்பதை சங்கப்பாடல்கள் பலவும் பதிவு செய்துள்ளன. பேய்களின் தலை, தலைமுடி, கண், வாய், பார்வை, காதுகள், நாக்கு, பற்கள், நகங்கள், கால்கள் முழுமையான தோற்றம் ஆகியவை அச்சம் கொள்ளத்தக்க வடிவத்தில் இருந்தமையை அறிய முடிகிறது. பேய்கள் இரண்டாகப் பிளவுபட்ட தலையை உடையனவாக இருந்தன என்னும் பொருண்மையில் பதிற்றுப்பத்து பேய் குறித்த காட்சியை “கவைத் தலை பேய்மகள்” (பதிற்று. 13 - 15) என்று குறிப்பிடுகிறது. பேய்களின் தோற்றம் அச்சம் கொள்ளக் காரணமாகப் பேயின் கண்கள் குறிப்பிடப்படுகின்றன. அவற்றின் பார்வை காண்பவர்களை அச்சம் கொள்ளச் செய்வது என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. (மதுரைக். 161) பேய்களின் காட்சி காண்பவர்களுக்கு இனிமை தருவது அல்ல என்பதே இலக்கியச் சான்றுகளின் பொருளாகிறது.

திருமுருகாற்றுப்படை பல்வகைப் பேய்களின் காட்சியைக் குறிப்பிடுகிறது.

**“உலறிய கதுப்பின் பிறழ்பல் பேழ்வாய்**

**கழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கின்**

**கழல்கட் கூகையோடு கடும் பாம்பு தூங்கப்**

**பெருமுலை அலைக்கும் காதின் பிணர்மோட்டு**

**உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்”** (திருமுருகு. 47 - 51)

என்னும் அடிகள் பேய்மகள் காய்ந்துபோன தலைமுடியினையும் முறையாக இல்லாமல் அமைந்த பல்வரிசையினையும் கழலக்கூடிய கண்களையும் பாம்புகள் தொங்கக் கூடிய பெரிய காதினையும் அச்சம் கொள்ளத்தக்க உருவத்தையும் கொண்டு விலங்கியதாகக் குறிப்பிடுகின்றன. திருமுருகாற்றுப்படை குள்ளமான உருவம் உடைய பேய்கள் இருந்தமையைப் பதிவு செய்துள்ளது. பேய்கள் ஒன்றுக்கொன்று வாகனமாக இருந்து பயணிப்பன என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. ஊர் மக்கள் அமைதியாக உறங்கக் கூடிய இரவுப்பொழுதில் பேய்கள் சுற்றித் திரிவதை இலக்கியங்கள் பரவலாகப் பேசியுள்ளன. பிணங்களை எரிக்கும் சுடுகாட்டில் பேய்கள் கூட்டமாக வசிப்பதைப் புறநானூறு எடுத்துக்காட்டியுள்ளது. பேஎய் ஆயமொடு பெட்டாங்கு வழங்கும் காடு முன்னின்னே நானே கட் காமுறுநன் (புறம். 238: 4 - 5) போரால் சிதலமடைந்த இடங்களிலும் பல இடங்களிலும் பேய்கள் வாழும் என்பதைப் பதிற்றுப்பத்து, மதுரைக்காஞ்சி ஆகியன குறிப்பிடுகின்றன. பேய்களுக்குப் பலியிடும் வழக்கம் அறியப்படுகிறது. முள் முருங்கை மரத்தின் காய்ந்து சுருண்ட நெற்றுகளைப்போல விரல்களை உடைய பேய்கள் பழமையான ஊரில் தமக்கு இடக்கூடிய பலி உணவை உண்ணுவதற்குக் கூட்டமாக வந்த தன்மையினை

**“வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன**

**மாணா விரல வல்வாய்ப் பேஎய்**

**மல்லல் மூதூர் மலர்ப்பலி உணீஇய**

**மன்றம் போழும் புன்கண் மாலை”** (நற். 73: 1 - 4)

என்னும் அடிகள் தெளிவுபடுத்துகின்றன.

நாடாண்ட மன்னர்களும் நன்மையின் பொருட்டுப் பேய்களுக்குப் பலி கொடுப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். மிஞிலி என்னும் மன்னன் பேய்களுக்குப் பலி உணவு கொடுத்த செய்தியை அகநானூறு எடுத்துக்கூறுகிறது. (அகம். 142: 9 - 11) பேய் பிடித்தவர்களுக்கு பேயினால் துன்பம் நிகழாமல் விட்டு விலகும் பொருட்டுப் பலி கொடுப்பது வழக்கில் இருந்தது. போர்க்களத்தில் இறந்த வீரர்களின் தசையைத்தின்று குடலை அள்ளி மாலையாக அணிந்துகொண்டு பேய்கள் விளங்கிய காட்சிகளை இலக்கியங்கள் எடுத்துக்காட்டியுள்ளன.

**“பேய் மகளிர் பிணம் தழூஉப் பற்றி**

**விளர் ஊன் தின்ற வெம்புவால் மெய்யர்”** (புறம். 359: 4 - 5)

பண்டைய மக்கள் பேய்கள் மீதும் தீய சக்திகள் மீதும் நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தனர் என்பதற்கு புறநானூறு, மதுரைக்காஞ்சி முதலான இலக்கியங்களில் பரந்த அளவில் சான்றுகள் கிடைக்கப் பெறுகின்றன. இலக்கியங்களில் காணப்படும் பேய்கள் மற்றும் பூதங்கள் குறித்த செய்திகள் மக்கள் கொண்ட நம்பிக்கையினைத் தெளிவுபடுத்துகின்றன. மக்கள் பேய்களையும் பிற தீய சக்திகளையும் வணங்கவில்லை எனினும் அவை தரும்

துன்பங்களில் இருந்து தம்மைக் காத்துக்கொள்வதற்கு அவற்றிற்குப் பலி கொடுப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை இலக்கியச் சான்றுகள் தெளிவுபடுத்துகின்றன.

## முடிவுகள்

- சங்க இலக்கியங்களில் சிவன் வழிபாடு பரந்த நிலையில் பேசப்பட்டிருக்கிறது.
- ஆலமர்ச் செல்வன், கறைக் கண்டன், நெற்றிக் கண்ணை உடையவன், நீறணிந்தவன், சடைமுடியையும் கொன்றை மாலையும் உடையவன் என்றவாறாகச் சிவனை அடையாளப்படுத்தும் தோற்றப் புனைவுகள் பெரும்பான்மையும் விளக்கப்பட்டுள்ளன.
- சிவனின் நிறம் செம்மை என்பதைப் பாக்கள் விளக்கிக் கூறி இருக்கின்றன.
- தேவர்களைக் காக்க விடம் உண்ட காரணத்தால் சிவன் கறைக்கண்டம் பெற்றமை விளக்கப்பட்டுள்ளது.
- சிவனுக்குரிய மாலையாகக் கொன்றையும், வாகனமாகக் காளையும், கொடியாகக் காளைக் கொடியும் விளக்கப்பட்டுள்ளன.
- மழுவாயுதம் ஏந்தியவனாகச் சிவனை இலக்கியங்கள் அடையாளப்படுத்தியுள்ளன.
- உமையுடன் இணைந்திருக்கும் கயிலாயக் காட்சி மாதொருபாகனாக விளங்கும் காட்சி ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.
- இராவணன் கயிலை மலையைப் பெயர்த்த நிகழ்வு தொன்மமாக இடம்பெற்றுள்ளது.

❖ கொற்றவை காட்டுக்குரிய தெய்வமாகவும் போர்த் தெய்வமாகவும் வெற்றிக்குரிய தெய்வமாகவும் வழிபட்டமையினை அறிய முடிகிறது.

❖ திருமாலின் பல்வேறு அவதாரங்களும் சிறப்புகளும் விளக்கப்பட்டுள்ளன.

❖ இல்லுறைத் தெய்வ வழிபாடு பண்டைக் காலத்தில் பெருவழக்காக இருந்தமை அறிய முடிகிறது.

❖ இல்லுறைத் தெய்வ வழிபாட்டில் விளக்கேற்றுதல் நெல் மலர் தூவி வழிபடல் பலி கொடுத்தல் என்னும் செயல்கள் வழக்கில் இருந்தமை அறியப்படுகிறது.

❖ தென்புலத்தார் வழிபாடு இறந்தவர்களின் மனம் அமைதி அடையும் வண்ணம் மேற்கொள்ளப்பட்டமையினை அறிய முடிகிறது.

❖ இறந்தவர்களைப் புதைத்த பின்பு தலைமகன் படைத்து வழிபடும் சோறு வான்சோறு எனப்பட்டமை இலக்கியங்களால் அறியப்படுகிறது.

❖ காவல் மர வழிபாடு மன்னனின் வீரம், வெற்றி ஆகியவற்றை விளக்குவதாக அமைந்தது.

❖ இசைக்கருவிகளில் தெய்வம் உறைவதாக எண்ணி வழிபட்ட வழக்கம், முரசு வழிபாடு என்பன பெரு வழக்காக இருந்தமை அறியப்படுகிறது.

- ❖ கடல் தெய்வ வழிபாடு வழக்கில் இருந்தது. கடற்கரை மணல் வெளியில் பரதவர்கள் கடல் வழிபாடு நிகழ்த்தியமை அறிய முடிகிறது.
- ❖ கந்து வழிபாடு, தூண் வழிபாடு, உருவ வழிபாட்டிற்கு முன்னோடியாக அமைந்தது.
- ❖ மக்கள் அச்சம் கொண்ட பேய் பூதம் முதலியனவற்றிற்குப் பலி கொடுப்பதால் அவை தரும் துன்பங்களில் இருந்து தப்பலாம் என்று மக்கள் கொண்ட நம்பிக்கையை அறிய முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. www. wikipeadia.com.
2. மேலது.
3. மேலது.
4. மேலது.
5. மேலது.
6. மு.சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப. 89.
7. நா. கதிரைவேல்பிள்ளை, தமிழ் மொழி அகராதி, ப. 1275.
8. மேலது.
9. மு. சண்முகம்பிள்ளை. சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப. 92.
10. ஆறுமுகநாவலர், இந்து மத இணைப்பு விளக்கம், ப. 39.
11. மு. சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப. 98.
12. நம்பி அகம். 21: 1.
13. புறம் வெட்சி கொற்றவை, 19.
14. மு. சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப. 97.
15. சாமி. தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு, ப. 121.
16. மு. சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப. 66.
17. ஆ. தனஞ்செயன், சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும், ப. 2.

# இயல் – நான்கு

## விழாக்களும் சடங்குகளும்

பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பழங்காலத் தமிழ் மக்களின் வழிபாட்டு நெறிமுறைகளை எடுத்துக்கூறியதுடன் அக்காலத்தில் நடைபெற்ற விழாக்கள் அவற்றின் செயல்பாட்டு முறைகள் ஆகியவற்றையும் எடுத்துக்கூறியுள்ளன. அவற்றை இவ்வியல் ஆராய்கிறது.

### விழா விளக்கம்

"தன் உள்ளத்தில் அடங்கி ஒடுங்கிக் கிடந்த மகிழ்ச்சியினை வெளிப்படுத்த மனிதனுக்குக் கிடைத்த வாய்ப்புகளே விழாக்கள்"[1] விழாக்கள், "உள மகிழ்ச்சியினையும் செயலாற்றுவதற்குரிய நம்பிக்கையினையும் மனிதனுக்கு அளிக்கின்றன"[2] மக்கள் தாங்கள் வழிபடும் கடவுளர்களுக்கு மேற்கொண்ட சடங்கு முறைமைகள் காலப் போக்கில் விழாக்களாகப் பரிணமித்தன. இதற்கு மக்கள் மனத்தில் குடிகொண்டிருந்த அச்சமும் நம்பிக்கையும் காரணமாகும். விழா, விழவு, சாறு, விழா என்னும் பெயர்களால் அழைக்கப்பட்டமையினை அறிய முடிகிறது. இதனைப் பின்வரும் பாடற் சான்றுகளால் அறியலாம்.

**"அழியா விழவின் அஞ்சுவரு மூதூர்"[3]**
**ஆலமர் செல்வன் அணிசால் மகன் விழா"[4]**
**காதல ருழைய ராகப் பெரிது வந்து**

**சாறுகொளூரிற் புகல்வேன்”[5]**

மரபு வழிப்பட்ட மக்கள் இனத்தின் தோற்றம் பெற்ற விழாக்கள் தமிழ் மக்களின் வழிபாட்டு முறை வளர்ச்சியினை அறிந்து கொள்ளச் சான்றாக இலங்குகின்றன.

## விழாக்களின் தோற்றக் காரணம்

தமிழக விழாக்கள் பண்பட்ட சமுதாயத்தின் நெறிமுறைகளைக் கொண்டு கட்டமைக்கப்பட்டவையாகும். மக்கள் கொண்டாடும் பண்டிகைகளும் விழாக்களும் நமது சமுதாயத்தில் இறை வழிபாட்டு நம்பிக்கையின் அடிப்படையில் கட்டமைக்கப்பட்டுள்ளன. சாமி. சிதம்பரனார், ‘குறிப்பிட்ட சில’ நாட்களைப் பண்டிகைகளாக – பெரு நாட்களாக – சிறந்த நாட்களாகக் கொண்டாடும் வழக்கம் எல்லா நாட்டிலும் உண்டு. எல்லா இன மக்களிடமும் உண்டு. எல்லா மதத்தினரிடமும் உண்டு. பொருள் வசதி படைத்த குடும்பத்தினர் இத்தகைய நாட்களை மகிழ்ச்சியுடன் கொண்டாடுகின்றனர். மனைவி மக்களுடன், உற்றார் உறவினருடன் கூடிக் குதூகலிக்கின்றனர். பண்டிகைகள் மூட நம்பிக்கைகளுடன் மூட நம்பிக்கைகளின் அடிப்படையில் தோன்றியவை. ஆதலால் அவை ஒழிக்கப்பட வேண்டும் என்று கூறுவோர் உண்டு. எத்தனை எதிர்ப்புகள் வந்தாலும் அவை நிலைத்து வாழ்கின்றன”[6] என்று பண்டிகைகளின் நிலைப்பேற்றைக் குறிப்பிடுவர். பண்டிகைகள் இறையியல் தொடர்பான நிகழ்வுகளில் இருந்து தோன்றியவை. தீமை தோற்று நன்மை வென்றதன் அடிப்படையில் கொண்டாடப்படுபவை. ஆனால்

விழாக்கள் தெய்வங்களைச் சிறப்பிக்கும் நோக்குடன் மக்கள் இனத்தால் கட்டமைக்கப்பட்டவை. மக்கள் இறை வழிபாட்டில் மேற்கொண்ட சடங்குகள் காலப் போக்கில் செம்மையான வடிவம் பெற்று விழாக்களாக மாற்றம் கண்டன. “சடங்குகளே விழாக்களுக்கு அடிப்படை. சடங்குகளுடன் ஒன்றிணைக்கப்பட்ட கூட்டுத் தொகுதியினை விழா எனலாம். சடங்கு என்பது வாழ்வியல் நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்ட விழாக்கள் சமுதாயம் மற்றும் சமயம் சார்ந்த மந்திரங்களோடும் இயற்கையிறந்த மீவியலாற்றல்களோடும் தொடர்புடையனவாகக் காட்சி தருகின்றன. விழாக்கள் மகிழ்ச்சியினை அடிப்படையாகக் கொண்டு சமுதாயம் தழுவியதாக அமையும். ஆனால் சடங்குகள் செயல் முறையினை அடிப்படையாகக் கொண்ட இறுக்கமான விதிகளை உள்ளடக்கியதாகவே காட்சி தருகின்றன”[7] சடங்குகள் நம்பிக்கையின் அடிப்படையில் தோற்றம் பெற்றவை. தெய்வங்கள் மீவியல்பாற்றல் உள்ளன என்னும் சிந்தனை மனித மனத்தில் கால் கொண்ட காரணத்தால் வழிபாட்டு முறையில் சடங்குகளின் தோற்றம் நிகழ்ந்தது. பண்டைய இலக்கியங்களில் வழக்கில் இருந்த பூப்பலி என்னும் நிகழ்வு இன்று பூச்சொரிதல் என்னும் பெரு விழாவாக மாற்றம் கண்டிருக்கிறது.

தெய்வங்களுக்காகக் கொண்டாடப்படும் விழாக்கள் மனித வாழ்வில் வளம் மகிழ்ச்சி ஆகியவற்றைக் கொண்டு வரும் என்னும் நம்பிக்கை நீண்டகால வழக்கில் உள்ளது. விழாக்களை நிகழ்த்துவதன் மூலம் தீமை விலகி நன்மை நடைபெறும் – மழைவளம்

பெருகி விளைச்சல் கண்டு வறுமை ஒழியும் என்னும் நம்பிக்கை மக்களிடம் உள்ளது. "விழாக்கள் நம்பிக்கையின் காரணமாக மனிதன் மீவியற்கைச் சக்திகளைத் தனக்குச் சாதகமாக்க முயன்ற நிலையில் தோன்றியனவாகக் காட்சி தருகின்றன. மனிதனது சிந்தனை கொண்டு மீவியல்பு ஆற்றல்களுக்குக் காரணம் காண இயலாத நிலை ஏற்படும்போது மனம் வேறு சில செயற்பாடுகளை நிகழ்த்துவதன் வாயிலாக அவ்வாற்றல்களின் பாதிப்புகளில் இருந்து தப்பிக்க நினைக்கிறது. அந்நிலையில் மந்திரங்களும் நம்பிக்கைகளும் தோன்றி விடுகின்றன. இவை பண்டைச் சமுதாயங்களிடையே விஞ்சி நிற்பதையே சமூக வரலாறுகள் உணர்த்துகின்றன"[8] என்னும் க. காந்தியின் கருத்து தெய்வ சக்தியைத் தனக்கு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்ள மனிதன் மேற்கொண்ட முயற்சியே விழா என்னும் சிந்தனையைத் தோற்றுவிக்கிறது.

## விழாக்கள் தோன்றிய நிலம் – காலம்

பண்டைத் தமிழர்கள் வாழ்வியலில் திணை வழி நிலப் பாகுபாடு சிறப்புற்றிருந்தது. தொல்காப்பியர் நிலங்களையும் தெய்வங்களையும் தொல்காப்பிய இலக்கண நூலில் அறிமுகம் செய்திருக்கிறார்.

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**

**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே”**[9]

நானிலங்களுள் மருத நிலம் நீர் வளம் நிரம்பியது. விவசாயத் தொழில் சிறப்பாக நடைபெற்ற பகுதி. மருத நிலத்தில் மக்கள் வாழ்ந்த பகுதி ‘ஊர்’ எனப்பட்டது. முல்லை நிலமும் மருத நிலமும் மனித நாகரிகத்தின் தொட்டில்கள் எனலாம். விவசாயம் மருத நில மக்கள் வளமாக வாழ்ந்தனர். அவர்கள் தங்களின் ஓய்வு நேரங்களில் பொழுது போக்குவதில் கவனம் செலுத்தினர். எனவே விழாக்களின் தோற்றத்திற்குக் காரணமாக இருந்த நிலமாக மருத நிலம் அறியப்படுகிறது. பிற இலக்கியங்களில் திணை சார்ந்த கொண்டாட்டங்கள் நடைபெற்றன எனினும் நன்றாகக் கட்டமைக்கப்பட்ட விழாக்கள் மருத நிலத்திலேயே தோற்றம் பெற்றன.

விழாக்கள் நல்ல நாளில் கொண்டாடப்பட வேண்டும் என்னும் சிந்தனை உடையவர்களாக மக்கள் இருந்தனர். மனித வாழ்வாயினும் இறை விழாவாயினும் அதற்கு நல்ல நாள் குறிக்கப்பட்டது. “அகநானூறு பண்டைத் தமிழர்களின் மணவிழா” சந்திரனும் உரோகிணியும் கூடிய நன்னாளில் நிகழ்த்தப்பட்டது” என்று குறிப்பிடுகிறது. (அகம். 86, 136) ஓய்வுக் காலத்தில் விழாக்களை நிகழ்த்துவது மரபாக இருந்தது. குறிப்பாக வேனில் காலம் தேர்ந்தெடுக்கப்பட்டது. குளத்தில் நீர் வற்றிக் காய்ந்திருக்கும் கற்கள் வெப்பத்தால் கனன்று கொண்டிருக்கும் கடும் வெயிலால் பலா மரங்கள் நிறைந்த காடு வெம்பிக் கிடக்கும். கலைஞர்கள் விழாவிற்காக முழவைத் தூக்கிக் கொண்டு மன்னர்கள் பயணம்

செல்லுவர் என்று அகநானூறு கோடைக் காலத்தில் விழா நடைபெற்றதற்கான குறிப்பைத் தருகிறது.

> **“பசும்பழப் பலவின் கானம் வெம்பி**
> **விசும்புகண் ணழிய வேனில் நீழக்**
> **கயங்கண் ணற்ற கல்லோங்கு வைப்பின்**
> **நானுயிர் மடப்பிடி தழீஇ வேறு நாட்டு**
> **விழவுபடர் மள்ளரின் முழவெடுத் துயரிக்**
> **களிறதர்ப் படுத்த கல்லுயர் கவாஅன்” (அகம். 189: 1 - 6)**

அவ்வாறே விழா நடைபெறும் காலமும் விழாவின் தொடக்கத்தை அடிப்படையாகக் கொண்டு வரையறை செய்யப்பட்டது.

## விழா நடத்தும் முறையும் அறிவிப்பும்

விழாக்கள் இறை வழிபாட்டு முறையின் அடிப்படையில் தோன்றியவை என்பதால் திட்டமிட்ட வடிவத்தைக் கொண்டிருந்தன. அதன் அடிப்படையில் விழாவின் கூறுபாடுகளை மறுவர உணர்ந்தவர்களே விழா நடத்துவதற்காக நியமிக்கப்பட்டனர். விழாவினைத் திட்டமிடல், அறிவித்தல் முதலியன திட்டமிட்ட முறையில் அமைந்தன. மணிமேகலை இந்திர விழாவை அறிமுகம் செய்யும்போது விழாவறைகாதை என்னும் காதையை அமைத்து விழாவை அறிவிப்பது மரபு என்பதை வலியுறுத்தி உள்ளது. விழாவை நடத்துபவர்கள் விழாவாற்றுவோர் எனப்பட்டனர். “விழாவில் காணப்படும் வினைமுறைகளை ஆற்றுவோர் விழாவாற்றுவோர் எனப்பட்டனர். இவர்களை இன்று புரோகிதர் என அழைக்கின்றோம். பண்டைய அரசச் சுற்றமான ஐம்பெருங் குழுவில்

இடம்பெற்றிருந்த நிலை அவர்களின் வாழ்வியல் பாங்கினைப் புலப்படுத்தும்”[10] என்பர் எனவே, விழாவாற்றுவோர் சமூகத்தில் அரசனால் ஆதரிக்கப்பட்டவர்களாகவும் அரசுப்பொறுப்பில் இருந்தவர்களாகவும் அறியப்படுகின்றனர். விழாவை முறைப்படியாக மக்களுக்கு அறிவிக்கும் நிகழ்வு விழாவறைதல் எனப்பட்டது. குயவர்கள் விழாவை அறிவிக்கும் பணியை மேற் கொண்டனர் என்று நற்றிணை குறிப்பிடுகிறது.

**“கண்ணி கட்டிய கதிர லன்ன**
**ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி**
**யாறுகிடந் தன்ன அகனெடுந் தெருவிற்**
**சாறென நுவலு முதுவாய்க் குயவ” (நற். 200: 1 - 4)**

சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய இரண்டு காப்பியங்களும் விழாவை அறிவித்தல் விழாவை முடித்தல் என்னும் அறிவிப்புகள் இடம் பெற்றமையினை அறிய முடிகிறது.

**“வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்**
**கச்சை யானைப் பிடர்த்தலை போற்றி**
**வால்வெண் களிற்றரசு வயங்கிய தோட்டத்துக்**
**கால்கோள் விழவின் கடைநிலை சாற்றி” (சிலம்பு.5:141 - 144)**

**“இருபெருங் குரவரு மொருபெரு நாளான்**
**மணவணி காண மகிழ்ந்தனர் மகிழ்ந்துழி**
**யானை யெருத்தத் தணியிழையார் மேலிரீஇ**
**மாநகர்க் கீந்தார் மணம்” (சிலம்பு. 1: 41 - 44)**

விழா நடைபெறும் இடத்தில் புதுமணல் பரப்புதல் பண்டை நாளில் பெரு வழக்காக இருந்தது. மண விழாவாயினும் தெய்வ விழாவாயினும் இம்முறை வழுவாமல் கடைப்பிடிக்கப்பட்டது. க. காந்தி, "நன்மையினை எதிர் நோக்கும் மகிழ்ச்சியினை அறப்படையாகக் கொண்ட விழாக்களிலும் சடங்குகளிலும் புதுமணல் பரப்பல் வழக்கமாகப் பின்பற்றப்பட்டு வருவதனை இலக்கியச் சான்றுகளும் இன்றைய வாழ்வியல் சான்றுகளும் உறுதி செய்கின்றன"[11] என்பர் இதனை,

**"வார்கழல் பொலிந்த வன்கண் மழவர்**
**பூந்தொடை விழவின் தலைநா ளன்ன**
**தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்" (அகம். 187: 7 - 9)**

என்னும் இலக்கியச் சான்றால் அறியலாம். விழாக்கள் நடைபெறும் நாள் நன்மைகள் பலவும் நடைபெற வாய்ப்பாக அமைந்தது. விருந்து உபசரிப்பு, குற்றங்கள் மன்னிக்கப்பட்டுக் குற்றவாளிகள் விடுவிக்கப்படுதல். வறுமை நீங்கி வளம் நிறைதல் என்னும் நிகழ்வுகள் நடைபெற்றன. விழாக் காலத்தில் மக்களின் மனம் மகிழும் வண்ணம் கலைஞர்கள் பல்வகைக் கூத்துக்களையும் நிகழ்த்தினர். ஆடல், பாடல், இசை நிரம்பியதாக விழாக்கள் நடைபெற்றன. விழாக்களில் குரவை துணங்கை என்னும் கூத்துகள் சிறப்பிடம் பெற்றிருந்தன.

## விழாச்சூழல்

தெய்வ விழாக்களில் விழாவை அறிவிக்கும் பொருட்டுக் கொடி ஏற்றுதல் வழக்காக இருந்தது. கொடி ஏற்றுதல் கோயில் விழா நடைபெறப்போகிறது என்பதை உணர்த்தும் அறிவிப்பாக இருந்தது. கோயிலில் விழா தொடங்கும் முன்பு காப்புக் கட்டுவதும் இதனையே உணர்த்தும். கொடி ஏற்றிய பின்பு ஊரார்கள் விழாவுக்குத் தயாராவதும் வெளியூரில் இருப்பவர்கள் தம் ஊருக்கு வந்து விழாவில் கலந்து கொள்வதற்குமான அறிவிப்பாகவும் அமைகிறது. கோயிலில் விழா தொடங்கும் முன்பு கொடி ஏற்றிய நிகழ்வினைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.

**“தங்கிய கொள்கைத் தகுநிலைக் கோட்டத்து**
**மங்கல நெடுங்கொடி வானுற வெடுத்து”**[12]

விழா நாள் ஒலி நிறைந்ததாக விளங்கியது. மக்கள் தங்களை அலங்கரித்துக் கொண்டு தெய்வ விழாக்களைக் காணச் சென்றமை, கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றமை குறித்த பதிவுகள் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

## தமிழக விழாக்கள்

பண்டைத் தமிழகம் சேர, சோழ, பாண்டிய என்னும் மூன்று நாடுகளாகப் பாகுபடுத்தப்பட்டிருந்தது. எனினும் விழாக்கள் அவ்வப்பகுதிகளுக்குரிய பொதுவும் சிறப்புமான பண்புகளுடன் கொண்டாடப்பட்டன.

## கார்த்திகை விழா

தமிழகத்தில் கொண்டாடப்படும் பழமையான விழாக்களுள் ஒன்று கார்த்திகை விளக்கீட்டு விழா. பண்டை நாளில் பெரு வழக்குடன் இவ்விழா கொண்டாடப்பட்டிருக்கிறது என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்றாக அமைகின்றன. தற்காலத்தில் திருவண்ணாமலையில் கார்த்திகை மாதம் பரணி மற்றும் கார்த்திகை நட்சத்திரங்கள் வரும் நாளில் கார்த்திகை விளக்கு ஏற்றிச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. “படைத்தல் தொழிலைச் செய்யும் பிரம்மனும் காத்தல் தொழிலைச் செய்யும் விஷ்ணுவும் நானே பெரியவன் என்று வாதாடிப் பல வருடங்கள் போரிட்டனர். சிவபெருமான் சோதிப்பிழம்பாகத் தோன்றினார். அடியையும் முடியையும் தேடும்படி அசரீரி கூறியது. இருவரும் அடி முடி தேடிக் காண முடியாமல் சிவ பெருமானே முழு முதற் கடவுள் என்று ஏற்றுக் கொண்டனர். அவர்கள் இருவரும் தாம் கண்ட சோதியை எல்லோரும் காணும்படிக் காட்டியருள வேண்டும் என்று விண்ணப்பிக்க அவர் திருக்கார்த்திகை நட்சத்திரத்தன்று காட்டியருளினார். இந்தக் தத்துவத்தை விளக்குவதே கார்த்திகை விளக்கீடு”[13] என்று புராணங்கள் கார்த்திகை விழாவுக்கான தத்துவத்தை விவரிக்கின்றன. கார்த்திகை மாதம் நடைபெறும் இப்பெருவிழாவைக் கார்த்திகை நட்சத்திரத்தில் நடத்துதல் மரபு. கார்த்திகை நட்சத்திரத்தை “அங்கி, அளக்கர், அளகு, அறுவாய், ஆரல், இறால், எரிநாள், நாவிதன்”[14] என்னும் சொற்களால் சூடாமணி நிகண்டு குறிப்பிடுகிறது. நற்றிணை கார்த்திகை நாள் முழு

நிலாவை “அறஞ்செய் திங்கள்” (நற். 202) என்று குறிப்பிடுகிறது. கார்த்திகை விண்மீன்களின் கூட்டம் “மகர குண்டலம்போல ஒளிர்வதாக” (பரிபாடல் திரட்டு. 10) பரிபாடல் திரட்டுக் குறிப்பிடுகிறது. கார்த்திகை நட்சத்திரத்திற்கு “எம்45”[15] என்னும் பொதுவான அறிவியல் பெயராக வானியல் ஆய்வாளர்களால் வழங்கப்படுகிறது.

கார்த்திகை விளக்கீட்டு விழா பெருவிழா என்றும் கார்த்திகைச் சாறு என்றும் அழைக்கப்பட்டது. மதுரைக்காஞ்சி, அகநானூறு, களவழி நாற்பது, கார் நாற்பது, கலித்தொகை முதலான இலக்கியங்களில் கார்த்திகை விளக்கீடு குறித்த செய்திகள் காணப்படுகின்றன. முழு நிலா நாளில் கார்த்திகை மீனை நிலவு நெருங்கும் தெருவெங்கும் மாலைகள் தோரணங்கள் கட்டித் தெருவெங்கும் விளக்கு ஏற்றி வழிபாடு நிகழ்த்தப்பட்டதாக அகநானூறு குறிப்பிடுகிறது.

**“மழைகால் நீங்கிய மாக விசும்பிற்**
**குறுமுயல் மறுநிறங்கிள மதிநிறைந்து**
**அறுமீன் சேரு மகலிருள் நடுதான்**
**மறுகு விளக்குறுத்து மாலை தூக்கிப்**
**பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய**
**விழவுடனயர வருகதில் அம்ம” (அகம். 141: 6 - 11)**

கார்த்திகை விளக்கின் சுடர் இலவமலரின் இதழ்களுக்கு ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளது. வெயில் காயும் கடுமையான வழியில் இலவ மரங்களில் இருந்து இதழ்கள் உதிர்ந்து கிடக்கும்

மரங்களில் பூத்திருக்கும் இலவ மலர்கள் விழாக்காலத்தில் விளக்கினை ஏற்றிக் கொண்டு மகளிர்கள் செல்வதுபோலத் தோன்றும் என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

**"கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கல்**
**பெருங்களிறு உரிஞ்சிய மண் அரை யாஅத்து**
**அருஞ்சுரக் கவலைய அதர்படு மருங்கின்**
**நீள் அரை இலவத்து ஊழ்கழி பல்மலர்**
**விழவுத் தலைக் கொண்ட பழவிறல் மூதூர்**
**நெல் உமிழ் சுடரின் கால் பொரச் சில்கி**
**வைகுறு மீனின் தோன்றும்**
**மைபடு மாமலை விலங்கிய சுரனே" (அகம். 17: 15 - 22)**

இறை வழிபாட்டில் விளக்கைச் சுற்றி (ஆலாத்தி எடுப்பதுபோல்) வணங்குவது வழக்கம். களவழி நாற்பது என்னும் கீழ்க்கணக்குப் புற இலக்கியம் போர்க்களத்தில் வெட்டிய காயத்தில் இருந்து சுழன்று கொட்டிய குருதியினைக் கார்த்திகைத் திருவிழாவில் விளக்குச் சுற்றுவதுபோல இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளது.

**"தாக்கி எறிதர வீழ்தரும் ஒண்குருதி**
**கார்த்திகைச் சாற்றில் கழிவிளக்குப் போன்றனவே"**

**(கள.17:2 - 3)**

தலைவன் பிரிந்து சென்ற வழியின் கொடுமையினைத் தலைவி கூற வரும் காலத்துப் பாலை வழியில் பூத்திருக்கும் செந்நிறமான இலவ மலர்களைக் கார்த்திகை விளக்கிற்கு ஒப்பிடும் போக்கினை அகநானூற்றால் அறியலாம்.

**“வேனி லத்தத் தாங்கண் வானுலந்து**
**அருவி யான்ற வுயர்சிமை மருங்கிற்**
**பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்**
**இலையில மலர்ந்த இலவமொடு**
**நிலையுயர் பிறங்கல் மலையிறந் தோரே” (அகம். 185: 9 - 13)**

கார்நாற்பது என்னும் அகநூல் கார்த்திகை மாதத்தின் முதல் நாள் விளக்கீட்டைச் சிறப்பித்துப் பேசுகிறது. இதனால் கார்த்திகை நாளன்று மட்டுமல்லாது கார்த்திகை மாதம் முழுவதுமே விளக்கீடு நடைபெற்றமையை அறிய முடிகிறது.

**“நலமிகு கார்த்திகை நாட்டவர் இட்ட**
**தலைநாள் விளக்கில் தகையுடைய வாகிப்**
**புலமெலாம் பூத்தன தோன்றி சிலமொழி**
**தூதொடு வந்த மழை”   (கார் நாற்பது. 26)**

இப்பாடலில், தோன்றிப் பூக்கள் பூத்திருக்கும் காட்சி கார்த்திகை விளக்கீட்டிற்கு ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளது. கார்த்திகை விளக்கீடு குறித்து இலக்கியங்கள் தரும் செய்திகளால் பண்டைய நாளில் கார்த்திகை விழா சிறப்பாக மக்களால் கொண்டாடப்பட்டமை அறியப்படுகிறது.

## இந்திர விழா

மருத நிலத்தின் கடவுள் இந்திரன். “வேந்தன் மேய தீம்புனல் உலகமும்” (தொல். பொருள். அகத். 5: 3) வேந்தன் என்னும் பெயர் இந்திரனைக் குறிக்கும் தூங்கெயில் எறிந்த தொடித்தோள் செம்பியன் என்ற சோழ மன்னன் இதைத் தொடங்கினான். சிலப்பதிகாரம்,

மணிமேகலை காலங்களில் இவ்விழா அரசாங்க விழாவாகவே கொண்டாடப்பட்டது. கற்பகக் கோட்டத்தில் வெள்ளானைக்கொடி ஏற்றப்பட்டது. பல தெய்வங்களுக்கும் பூசையிடப்பட்டு, இசையும் கூத்தும் கலந்து மக்கட்கு இன்பமூட்டின. அறிஞர்கள் குழுமியிருந்து பட்டிமண்டபத்தில் வாதிட்டனர். பல்வேறு சமயத்தவரும் செற்றமும் கலகமும் செய்யாது ஒற்றுமையாய் இருக்குமாறு கேட்டுக்கொள்ளப்பட்டனர் அவ்விதத்தில் இவ்விழா சமய ஒற்றுமையை வலியுறுத்தும் விழாவாக இருந்தது என அறியலாம்”[16] இந்திர விழா என்பது இந்திரனைக் குறித்துச் செய்யப்படும் விழாவாகும். இந்திரன் வேதகாலக் கடவுளரில் சிறப்புமிக்கவன். வாயு மண்டல நிகழ்ச்சிகளுக்கு அடிப்படையாகக் கருதப்படுபவன். வேதகாலத்தில் இவன் வலிமை மிகுந்த முதன்மைக் கடவுளாகக் கருதப்பட்டதனை வேதங்களில் முதலாவதாக ரிக் வேதப் பாடல்களில் புகழப்படுவது கொண்டு அறியலாம் என்பர்”[17] பண்டைத் தமிழ் இலக்கியங்களில் காணப்படும் இந்திரன் குறித்த குறிப்புகளைக் கொண்டு இந்திரன் செல்வாக்கு மிக்க கடவுள் என்னும் முடிவுக்கு வருவதற்கான சூழல்கள் உள்ளன. “பழந்தமிழர் வாழ்வியலில் வேதகால எண்ணங்களும் செயல் முறைகளும் கலந்துள்ளன என்பது உண்மையே. எனினும் அவை தமிழர் வாழ்வில் செல்வாக்குப் பெற்ற நிலையினைப் பரிபாடல், கலித்தொகை மற்றும் திருமுருகாற்றுபடையின் வழி காண முடிகிறது. வேதகாலத்தில் சிறப்பாகக் குறிக்கப்பட்ட இந்திரன், இதிகாசங்கள் தோன்றிய காலத்தில் இரண்டாம் நிலைக்குத் தள்ளப்பட்டதாகச் சுட்டுவர்”[18]

என்னும் கூற்றின் வழியாக வேதகாலத்தை அடுத்து இந்திரன் செல்வாக்குடன் விளங்கியமை அறிந்துகொள்ள முடிகிறது. இந்திர விழா இந்திர கோடாணை, இந்திர கோடனை விழா, தீவக சாந்தி, ஆயிரங்கண்ணோன் விழா, இந்திர விழா, வானவன் விழா"[19] என்னும் பெயர்களால் அழைக்கப்பட்டது.

இந்திர விழாவில் மிகுதியான பூக்கள் பயன்படுத்தப்பட்டது. மலர்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் விழாவாகக் கொண்டாடப்பட்டது. "இந்திர விழாவிற் பூவினன்ன" (ஐங். 62: 1) என்னும் ஐங்குறுநூற்றுப்பாடலடி இதனைத் தெளிவுபடுத்தும். சித்திரை மாத முழு நிலா நாளில் இந்திர விழா கொண்டாடப்பட்டது.

**"சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென**
**வெற்றிவேன் மன்னற் குற்றதை யொழிக்கெனத்**
**தேவர் கோமா னேவலிற் போந்த**
**காவற் பூதத்துக் கடைகெழு பீடிகை"[20]**

இந்திர விழாவில் இந்திரன் எழுந்தருளி அருள் வழங்குவான் என்னும் நம்பிக்கை மணிமேகலையின் வழி அறிய முடிகிறது.

**"விண்ணவர் தலைவனை வணங்கிமுன் னின்று**
**மண்ணகத் தென்றன் வான்பதி தன்னுள்**
**மேலோர் விழைய விழாக்கோ ளெடுத்த**
**நாலேழ் நாளினு நன்கினி துறைகென**
**அமரர் தலைவ னாங்கது நேர்ந்தது"[21]**

விழா அறிவித்தல் நகரைத் தூய்மைப்படுத்துதல், நகரை அலங்கரித்தல் முதலான நிகழ்வுகளை மணிமேகலை விரிவான நிலையில் பதிவு செய்திருக்கின்றது. இதனை,

**"வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்**
**கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி**
**வால்வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்**
**கால்கோள் விழவின் கடைநிலை சாற்றி"** (மணி. 1: 141 - 144)

என்னும் சான்று உணர்த்தும் பதிற்றுப்பத்து இந்திர விழாவை பல்பூ விழா என்று குறிப்பிடுகிறது.

**"கால மன்றியும் கரும்பறுத் தொழியாது**
**அரிகா லவித்துப் பலபூ விழவின்**
**நேம்பாய் மருத முதல்படக் கொன்று**
**வெண்டலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்**
**பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்**
**சிறைகொள் பூசலிற் புகன்ற வாயம்**
**முழவிமிழ் மூதூர் விழவுக் காணூஉப் பெயருஞ்**
**செழும்பல் வைப்பிற் பழனப் பாலும்" (பதிற். 30: 14 - 21)**

சேர நாட்டில் எல்லாக் காலங்களிலும் கரும்பு விளையும். நெல் அறுவடை செய்த வயலில் மலர் விழாக் கொண்டாடுவார்கள் என்று கூறுவதால் இந்திர விழா மருத நிலத்துக்குரியது என்பது புலனாகிறது. இந்திரவிழா வறுமை ஒழியவும் வளமை பெருகவுமான விழாவாக அமைந்தது. இந்திரவிழா மழைக்கால விழாவாக அமைந்தது என்பதை மணிமேகலை குறிப்பிடுகிறது.

**“திருவிழை மூதூர் வாழ்கென் றேத்தி**
**வானமும் மாரி பொழிக மன்னவன்**
**கோணிலை திரியாக் கோலோ னாகுக**
**தீவகச் சாந்தி செய்தரு நன்னாள்”[22]**

தர்மச் சக்கரம் என்னும் இதழும் மழை பெய்வதற்கான விழாவாக இந்திரவிழா நடத்தப்பட்டமையினைப் பதிவு செய்துள்ளது. “பழந்தமிழ் இலக்கியச் சான்றுகளின் அடிப்படையில் நோக்கும் பொழுது இந்திரன் தெய்வமாகக் கருதப்பட்டான் என்பது உறுதியாகின்றது. இரட்டைக் காப்பியத்தில் தமிழ் மக்களால் சிறப்பாகக் கருதப்பட்ட இந்திர வழிபாடு கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்குப் பிறகு தமிழகத்தில் அறவே மறைந்து விட்டதாகக் கருதுவர்”[23] இவற்றால் பண்டைக் காலத்தில் தமிழகத்தில் இந்திரவிழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டமை விளங்கும்.

## நீராடல் விழா

பண்டைய நாளில் நீர் தெய்வமாக வணங்கப்பட்டது. அருவியிலும் பொய்கையிலும் ஆற்றிலும் தெய்வம் உறைவதாக எண்ணி மக்கள் வழிபட்டனர். ஆடி பதினெட்டாம்பெருக்கு நாளில் நடைபெறும் நீர் வழிபாடு, தீபாவளி தினத்தன்று நீரில் கங்கை உறைவதாக எண்ணி வழிபடுதல் முதலானவை இறை வழிபாட்டின் பகுதியாகவே உள்ளன. பண்டை நாளில் புனலாடுதல் விழா மிகப் பெரும் விழாவாகக் கொண்டாடப்பட்டதைப் பரிபாடல் எடுத்துக்காட்டுகிறது. மழை பொழிந்து ஆற்றில் நீர்ப்பெருக்கு ஏற்படும்போது அதனை வரவேற்று வழிபடுவது வழக்கில் உள்ளது.

காவிரி கடலுடன் கலக்கும் இடத்தில் நடைபெற்ற நீராடலைப் பட்டினப்பாலை எடுத்துக்கூறுகிறது. அமாவாசை தினத்தன்று மீனவர்கள் கடலுக்கு மீன் பிடிக்கச் செல்லாமல் காவிரி கடலுடன் கலக்கும் இடத்தில் நீராடி மகிழ்ந்த நிகழ்வும் அதனை அடுத்து அவர்கள் நன்னீரில் குளித்து உடலைத் தூய்மைப்படுத்திக் கொண்டனர்.

**"தேறுநீர்ப் புணரியோ டியாறுதலை மணக்கும்**
**மலியோதத் தொலிகடல்**
**தீது நீங்கக் கடலாடியும்**
**மாசு போகப் புனல் படிந்து" (பட்டினப். 97 - 100)**

சேர நாட்டில் புனலாட்டு விழா சிறப்பாக நடைபெற்றமை பதிற்றுப்பத்தின் வாயிலாக அறியக் கிடக்கிறது. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் பாடிய பாடல் காஞ்சி ஆற்றில் நீர்விழாக் கொண்டாடுவதில் சிறந்தவன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்று குறிப்பிடுகிறது.

**"நின்மலைப் பிறந்து நின்கடன் மண்டும்**
**மலிபுன னிகழ்தருந் தீநீர் விழவிற்**
**பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை**
**மேவரு சுற்றமொ ருண்டினிது நுகரும்**
**தீம்புன லாய மாடும்**
**காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே"**

**(பதிற். 48: 13 - 18)**

வைகை ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுக்கும் காலத்தில் மதுரை திருப்பரங்குன்றம் முதலான பகுதிகளில் இருந்து மக்கள் தேர்கள்

குதிரைகள் யானைகள் பிற வாகனங்கள் மூலமும் கால் நடையாகவும் சென்று மனப் பொருள்கள் கொண்டும் பிற வாசனைத் திரவியங்கள் வாசனைப் பொருள்கள் கொண்டும் புது நீரில் நீராடி மகிழ்ந்ததைப் பரிபாடல் விளக்குகிறது. புது நீராடல் விழா பறையறைந்து அறிவிக்கப்பட்டது.

**“வெந்நாற்று வேசனை நாற்றங் குதுகுதுப்ப**
**ஊரூர் பறையொலி கொண்டன் றுயர் மதிலில்”**

**(பரி. 20: 13 - 14)**

நீர் இளமையின் சின்னமாகக் கருதப்பட்டது. மங்கலப் பொருள்களை இட்டும் பொன்னால் செய்யப்பட்ட சங்கு நண்டு மீன் முதலான உருவங்களை நீரில் இட்டு எந்நாளும் வளம் நிறைய வேண்டும் என வைகையிடம் பெண்கள் வேண்டிக்கொண்ட பான்மையினைப் பரிபாடல் விளக்குகிறது.

**“அவியம ரழலென வரைக்குநர்**
**நந்தொடு நள்ளி நடையிறவு வயவாளை**
**வித்தி யலையில் விளைக பொலிகென்பார்” (பரி. 10: 84 - 86)**

பண்டைய புனலாட்டு விழாவின் தொடர்ச்சியாகவே நீர் வழிபாட்டிற்கு உரியதாகக் கருதப்படுகிறது. கோயில்கள் சார்ந்த நீர் நிலைகள், ஆறுகள், கடல் தீர்த்தம் ஆகியவற்றில் நீராடி இறைவனை வழிபடுவதும் நடைபெற்று வருகிறது.

## பெருமங்கலம் – பிறந்தநாள் விழா

மன்னனின் பிறந்தநாள் விழா பெருமங்கலம் எனப்பட்டது. “பிற்கால இலக்கண நூலான புறப்பொருள் வெண்பாமாலை

மன்னனிற்கு உரித்தான மங்கலங்கள் பலவற்றைக் குறிப்பிடுகின்றது. வேந்தனின் செம்மாந்திருந்த வெற்றியினைச் சிறப்பித்தலை வீற்றினிதிருந்த பெருமங்கலம் என்றும், வேந்தனின் திருமணத்தினை விவரிப்பதனை மணமங்கலம் என்றும், மன்னனின் மகன் பிறந்தநாள் விழாவைப் பொலிவு மங்கலம் என்றும்"[24] மன்னனின் வாழ்வில் குறிப்பிடத்தக்க நாட்கள் ஒவ்வொன்றும் விழாவாகக் கொண்டாடப்பட்ட பான்மையினைப் புறப்பொருள் வெண்பாமாலை எடுத்துரைக்கிறது. தொல்காப்பியமும் மன்னனின் பிறந்த நாளைப் பெருமங்கலம் என்று குறிப்பிடுகிறது. "சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப் / பிறந்த நாள் வயின் பெருமங்கலமும்"[25] மன்னனின் பிறந்த நாள் அனைவராலும் கொண்டாடப்பட்டதாக விளங்கியது. புறப்பொருள் வெண்பாமாலை மன்னனின் பிறந்தநாள் சிறப்பைக் கூறுவது நாள் மங்கலம் என்று குறிப்பிடுகிறது. "அறந்தரு செங்கோல் அருள் வெய்யோன்/ பிறந்த நாள் சிறப்புரைத்தன்று"[26] மன்னன் தன் பிறந்த நாள் விழாவில் தன்னைக் காணும் பொருட்டு நாடி வந்த அனைவருக்கும் பரிசில் வழங்கியதையும் பரிசில் பெற்றவர்கள் ஊருக்குச் செல்ல விரும்புவதையும் மன்னன் அவர்களுக்குக் களிறு, குதிரை, தேர் முதலானவற்றைக் கொடுத்து வழியனுப்பியதையும் ஆள்வினை வேள்வி என்னும் விருந்தோம்பல் நடத்தியமையினையும் புறப்பொருள் வெண்பாமாலை எடுத்துக் கூறியுள்ளது.

**"புரவலன் மகிழ்தூங்க**
**இரவலன் கடைக்கூடின்று"[27]**

**"வேந்தன் உள்மகிழ் வெல்புகழ் அறைந்தோர்க்கு**
**ஈந்து பரிசில் இன்புற விடுத்தன்று"[28]**

**"வினை முற்றிய கனை கழலோன்**
**மனை வேள்வி மலிவு ரைத்தன்று"[29]**

"சிலப்பதிகாரத்தில் சேரன் செங்குட்டுவனின் பிறந்த நாள் விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டதாகக் குறிப்புக் காணப்படுகிறது"[30] "வெள்ளணி விழா என்றும் இவ்விழா அழைக்கப்பட்டது"[31] மன்னனின் பிறந்தநாள் விழா மக்களுக்கும் பிறருக்கும் மகிழ்ச்சி தருவதாக அமைந்தமையினை இலக்கியச் சான்றுகள் மெய்ப்பிக்கின்றன.

## முருகன் விழா

முருகன் பண்டை நாளில் செவ்வேள் என்று அழைக்கப்பட்டமையினைப் பரிபாடல் குறிப்பிடுகிறது. இலக்கியங்களில் முருகன் ஆலமர்ச் செல்வன் சிவனின் மகனாகக் குறிப்பிடப்பட்டுள்ளமை அறியத்தகும். திருப்பரங்குன்றம் எப்போதும் விழாக்கள் நிறைந்த இடமாக இருந்த சூழல் பரிபாடலில் விளக்கப்படுகிறது. "முருகனை வணங்க வந்த பக்தர்கள் முருகனின் உருவம் முன்பு ஆடிப்பாடி மகிழ்ந்தமையினையும் இசைக்கட்டமைப்புடைய பாடல்களைப் பாடி மகிழ்ந்தமையினையும் பல்வேறு இசைக் கருவிகளை இசைத்து மகிழ்ந்தமையினையும் அறிய முடிகிறது" (பரி. 8: 105 - 110) திருப்பரங்குன்றத்தில் செவ்வேளுக்கு வெறியாட்டு விழா நடத்தப்பட்டது. பலரும் கூடி இருந்து

வெறியாட்டு நிகழ்த்தப்பட்டமையினையும் ஆடு அறுத்துப் பலி கொடுக்கப்பட்டமையினையும் அறிய முடிகிறது. வெறியாட்டு களத்தில் மலர்கள் தூவியும் இரத்தம் கலந்த தினை அரிசி தூவியும் வழிபாடு நிகழ்த்தப்பட்டது.

**"தேம்படு மலர்க்குழை பூந்துகில் வடிமணி**
**ஏந்திலை சுமந்து சாந்தம் விரைஇ**
**விடையரை அசைத்த வேலன் கடிமரம்**
**பரவினர் உரையொடு பண்ணிய இசையினர்**
**விரிமலர் மதுவின் மரம் நனை குன்றத்துக்**
**கோலெரி கொளை நறை புகைக்கொடி ஒருங்கெழ**
**மாலை மாலை அடியுறை இயைநர்**
**மேலோர் உறையுளும் வேண்டுநர் யாஅர்" (பரி. 17:1-8)**

"யாழ், குழல், முழவு என்னும் இசைக்கருவிகள் முழங்கவும் அதற்கேற்றவாறு ஆடல் மகளிர் ஆடல் நிகழ்த்தவும் விழாக்கோலம் கொண்டு விளங்கிய இடமாகத் திருப்பரங்குன்றம் திகழ்ந்தது" (பரி. 17: 9 - 20) "பல்வகை மணப் பொருள்கள் கொண்டு பக்தர்கள் முருகனுக்குப் படைத்து வழிபடுகின்ற காரணத்தால் அப்புகை வான் வெளியில் பரவித் தேவர்களின் இமைக்காத கண்களையும் இமைக்கச் செய்தது" (மேலது. 17: 28 - 32). என்று பரிபாடல் குறிப்பிடுகிறது.

## காமன் விழா

காமன் திருமாலின் மகனாகக் கருதப்படுகிறான். காமன் குறித்து, "காமவேள், உயர்ந்தவன், வல்லவன்" என்னும் பெயர்கள் அறியப்படுகின்றன. (கலி. 27: 23, 24: 30: 12 – 14, 35: 13 - 14)

பண்டைத் தமிழர்கள் காமன் விழாவைச் சிறப்புடன் கொண்டாடியமைக்கான சான்றுகள் இலக்கியங்களின் வழி அறியப்படுகின்றன. “பழங்காலத்தில் உள்ளி விழா எனவும் (காமன் பண்டிகை) வழங்கப்பட்டதாக அறியப்படுகிறது. அகநானூற்றில் கொங்கர் மணி அரையாத்து மறுகின் ஆடும் உள்ளி விழவு’ என்று குறிப்பிடப்பட்டுள்ளதை வைத்து கொங்கு நாட்டில் ஒலி எழுப்புகின்ற மணிகளைக் கோத்து இடுப்பில் கட்டிக் கொண்டு நடுத்தெருக்களில் ஆடிப்பாடிக்கொண்டு இவ்விழாவிக் கொண்டாடினர். உறையூரிலும் (திருச்சிராப்பள்ளி) திருவரங்கத்திலும் ஆற்றின் இடையே இருந்த மணல் திட்டுகளில் ஆடவரும் பெண்டிரும் தத்தமக்கு விருப்பமான இணைகளுடன் சேர்ந்து கொண்டு கூடிக் களிப்பது சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது”[32] என்று விக்கிப்பீடியா காமன் விழாக் குறித்தும் நிகழ்வுகள் குறித்தும் கூறியுள்ள கருத்துகள் மனம் கொள்ளத்தக்கன.

ஆண்டு தோறும் மாசிமாதம் அமாவாசை முடிந்த பின் விழா தொடங்கி நடைபெறுகிறது. காமன் சிவபெருமானால் எரிக்கப்பட்ட பின் அவன் மனைவி ரதிக்கு மட்டும் தெரியும் உருவத்தைச் சிவன் மூலம் பெற்றான் என்பதைப் புராணம் உணர்த்தும். அதன் அடிப்படையில் “உருவிலாளன்”[33] என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. கா. காந்தி “சிறந்த கணவனைத் தனக்குத் தர வேண்டும் எனவும் தன் கணவன் தன்னிடத்தே அன்புடன் பிரியாமலிருக்க வேண்டும் எனவும் காமனைப் பெண்கள் வேண்டி வழிபடுவதே”[34] காமன் விழாவின் நோக்கம் என்று வலியுறுத்துகிறார்.

“காமன் பண்டிகை ஒவ்வோர் ஆண்டும் மாசி மாதம் அமாவாசை முடிந்து மூன்றாம் நாள் தொடங்கி வளர் பிறையில் கொண்டாடப்படுவது வழக்கம் சுமார் பதினைந்து நாட்கள் தொடர்ச்சியாக நடக்கும் இந்நிகழ்வானது காமன் பண்டிகைத் திடல் அல்லது காமன் பண்டிகைத் திட்டு என்று வழங்கப்படும் பொது இடத்தில் நடைபெறும். இசையும் நடனமும் பாட்டும் கலந்து குழுவாகக் காமன் நடத்தை நிகழ்த்துவார்கள். முடிவில் கோவில் அருகிலோ அல்லது தெரு முனையிலோ ஒரு சிறிய இடத்தைத் தேர்வு செய்து நான்கு கால்கள் நிறுத்தி மன்மதனுக்காகப் பந்தலின் நடுவே சிறிய கம்பு ஒன்று நடப்பட்டு அதன் மேலே வைக்கோல் பிரி சுற்றப்பட்டு அதன் தலையில் வரட்டி வைத்துக் கட்டப்படும். மாவிலை, வேப்பிலை, குங்குமம், திருநீறு வைத்து அலங்காரம் செய்யப்பட்டிருக்கும் உருவம் காம தேவன் மன்மதனை உருவகப்படுத்தும்”[35] என்று விக்கிப்பீடியா காமன் விழா நிகழ்வுகளைத் தெளிவுபடுத்துகிறது. எஸ். இராமச் சந்திரன், “காமன் பண்டிகை என்பது இளவேனில் பருவத்தை வரவேற்கின்ற ஒன்றாக அமைந்ததாகும். பின்பனிக் காலம் முடிந்து இளவேனில் பருவம் தொடங்குவதற்கு அறிகுறியாகப் பங்குனி மாதத்தின் இறுதியில் அல்லது சித்திரை மாதத் தொடக்கத்தில் வசந்த விழா என்ற பெயரில் இவ்விழாவைக் கொண்டாடுவது இந்திய நாட்டின் பல பகுதிகளில் வழக்கமாக உள்ளது”[36] என்று குறிப்பிடுவதால் இந்தியப் பண்பாட்டின் பழமையான விழாக்களுள் காமன் விழாவும் ஒன்று என்பது விளங்கும். “காமனுக்குரிய கொடி மீன் கொடி என்றும்”[37] “தன்

காதலர்களை வருத்தம் கொள்ளச் செய்பவன் என்றும்”[38] அறிய முடிகிறது. பண்டைத் தமிழ் இலக்கியங்களின் வழி காமன் விழா இன்ப விழாவாக அறியப்படுகிறது.

## பெருஞ்சோற்று விழா

பண்டைக்காலத்தில் வழக்கில் இருந்த நிகழ்வுகளுள் ஒன்றாகப் பெருஞ்சோற்று விழா நடைபெற்றது. பெருஞ்சோற்று நிகழ்வு இலக்கிய இலக்கண நூல்களில் காணப்படுகிறது. பெருஞ்சோற்று நிலை குறித்து க. காந்தி கூறியுள்ள சிந்தனைகள் இவ்விழா குறித்த மாறுபட்ட கருத்து நிலைகளை எடுத்துக் கூறியுள்ளன. “இலக்கிய இலக்கணங்களில் காணும் சொற்களுக்கும் சொற்றொடர்களுக்கும் பொருள் கொள்ளும் நிலையில் மாறுபட்ட கருத்துகள் நிலவியதாலேயே பல்வேறு உரைகள் தோன்றின. உரையாசிரியர்கள் சில சமயங்களில் மாறுபட்ட பொருள்கோளுக்கு ஈர்த்துச் செல்வதுமுண்டு அவ்வாறு மாறுபட்ட பொருள் கூறிச் சென்றுள்ளமையினைப் பெருஞ்சோற்று நிலை தெரிவிக்கின்றது. தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் பேசும் பெருஞ்சோற்று வழங்கும் நிலைபற்றிப் பல கருத்து மாறுபாடுகள் உரையாசிரியர்களாலும் பின்வந்த ஆராய்ச்சியாளர்களாலும் இயம்பப்பட்டிருக்கக் காண்கிறோம். இப்பெருஞ்சோற்று நிலை போருக்கு முன்னரா பின்னரா என்பதிலும் எவ்வெவ்விடங்களில் எப்பொழுது யாரால் யாருக்குக் கொடுக்கப்பட்டது என்பது பற்றியும் மாறுபட்ட கருத்துகள் ஆராய்ச்சியாளர்களிடையே உண்டு”[39]

தொல்காப்பிய இலக்கண நூல் பெருஞ்சோற்று நிலையினை வஞ்சித் திணையின் துறைகளுள் ஒன்றாகக் கூறியுள்ளது. “ஒருவன் தாங்கிய பெருமை யானும், பிண்டமேய பெருஞ்சோற்று நிலையும்”[40] உ. வே. சாமிநாதையர், “பகைவருடைய வேற்றுப் புலத்தை அழித்துத் தனக்குத் தருவரென்று மிக்க சோற்றை வீரர் கொள்ளும் படி அரசர் கொடுத்தல்”[41] என்று பெருஞ்சோற்று நிலைக்கு விளக்கம் தருகிறார். பெருஞ்சோறு கொடுத்தல் நீண்ட கால வழக்கில் உள்ள நிகழ்வு எனபதைப் புறப்பாடல் தரும் சான்றால் அறியலாம்.

**“வான வரம்பனை நீயோ பெரும்**
**அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ**
**நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை**
**ஈரைம் பதின்மரும்பொருதுகளத் தொழியப்**
**பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்”**

**(புறம்.2:12-16)**

பெருஞ்சோறு கொடுத்தல் போர்க்காலங்களிலும் பிற காலங்களிலும் நடைபெற்றிருத்தல் கூடும் என்பதையே இலக்கிய இலக்கணச் சான்றுகள் தெளிவுபடுத்தியுள்ளன. உணவு கொடுத்தல் அறத்தில் உயர்ந்ததாக பின் தன்னலம் பாராமல் பிறர் நலம் பேணும் நோக்கம் வெளிப்படுவதை அறிய முடிகிறது.

## திருவோண விழா

ஓண விழா மாயோனைச் சிறப்பித்துக் கொண்டாடப்படும் விழாவாகும். பண்டைய சேர நாட்டிலும் (இன்றைய கேரளம்) அதனைச் சார்ந்த பகுதிகளிலும் பரந்த அளவில் இவ்விழா

கொண்டாடப்படுகிறது. "ஓண விழா மாயோனாகிய திருமாலின் நினைவாக ஆற்றப்படும் விழாவாகும். இவ்விழா இன்றைய தமிழகத்தில் வழக்கில் இல்லை. ஆனால் பழந்தமிழ் நாட்டின் பகுதியாகிய சேர நாட்டில் இவ்விழா நாட்டு விழாவாகக் மலையாள மக்களால் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருவதைக் காண்கிறோம் இன்று ஆவணி அவிட்டம் எனச் சுட்டப்படும் ஒன்றே பண்டு ஓண நாளாகக் கருதப்பட்டது"[42] என்று மு. இராகவையங்கார் கூறுவது கருதத்தக்கது.

பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றான மதுரைக்காஞ்சி ஓண விழா குறித்த குறிப்பினைக் கூறியுள்ளது. "மதுரைக்காஞ்சி குறிப்பிடும் ஓண நாள் நிகழ்வுகள் இன்று கொண்டாடப்படும் முறையுடன் ஒத்திருப்பதால்"[43] க. காந்தி குறிப்பிடுகிறார். ஓண நாளில் விருந்தயர்வதும் வழக்கில் இருந்தது. ஓண நாள் விருந்தில் வழங்கப்பட்ட உணவுகளின் வகையை மதுரைக்காஞ்சி தெளிவுபடுத்தியுள்ளது.

**"சோறு நாற்றமும் பலவின் சுளையும்**
**வேறுபடக் கவினிய தேமாங் கனியும்**
**பல்வே றுருவிற் காயும் பழனும்**
**கொண்டல் வளர்ப்பக் கொடிவிடுபு கவினி**
**மென்பிணி யவிழ்ந்த குறுமுறி யடரும்**
**அமிர்தியன் றன்ன தீஞ்சோற்றுக் கடிகையும்**
**புகழ்படப் பண்ணிய பேரூன் சோறும்**
**கீழ் செல வீழ்ந்த கிழங்கொடு பிறவும்**

**இன்சோறு தருநர் பல்வயி னுகர" (மதுரைக். 527 - 535)**

தேன், பலாச்சுளை, பல்வகை மாங்கனிகள், பல்வகை வாழைக் காய்கள், வழுதுணங்காய், வாழைப்பழம், முந்திரிப்பழம், இலைக் கறிகள், இனிய சாறுடைய சர்க்கரை, இறைச்சிச்சோறு, கிழங்குகள், பால்சோறு முதலியன ஓண நாள் விழாவில் வழங்கப்பட்டதாக மேற்கண்ட பாடலடிகள் தெரிவிக்கின்றன. இதனால் ஓண விழா சிறப்புடன் கொண்டாடப்பட்டமை விளங்கும்.

## சடங்குகள்

சமூகத்தில் வாழ்கின்ற மக்கள் தாங்கள் வாழ்கின்ற சூழல்களில் பல்வேறு வழக்குகளை கடைப்பிடிக்கின்றனர் அதற்கு முன்னோர்கள் கடைப்பிடித்து வந்த மரபுகளை காரணமாகும் தாங்கள் செய்கின்ற ஒவ்வொரு செயலையும் முன்னோர்கள் வகுத்துக் கொடுத்த மரபின்படி செய்வதை மக்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர் அதனடிப்படையிலேயே சடங்குகள் தோற்றம் பெற்றுள்ளன.மு சண்முகம் பிள்ளை "மக்கள் தாங்கள் செய்துவரும் வழிபாடு விழா முதலியவற்றை முந்தையோர் முறைப்படி செய்து வந்தனர் இங்கனம் பரம்பரை வழக்கமாக செய்து வரும் செயல்களே சடங்குகளாகும்".[44] என்று சடங்கிற்கு விளக்கம் கூறுவர்.

பண்டைய தமிழ்ச் சமுதாயத்தில் மக்களின் வாழ்க்கைச் சூழல்களுக்கு ஏற்ப பல்வேறு சடங்குமுறைகள் கடைப்பிடிக்கப்பட்டு வந்தனர். சடங்குகள் மரபு வழியாகவும் பழக்க வழக்கங்களின் அடிப்படையிலும் கட்டமைக்கப்பட்டவையாகத் தோற்றம்

தருகின்றன. சடங்கு முறையின் கூறுகள் பண்பட்டவையாகும் சமூக வழக்காறுகளைப் பிரதிபலிப்பதாகவும் அமைந்திருக்கின்றன. சடங்குகள் மேற்கொள்வதால் வாழ்க்கையில் நலமும் வளமும் பெருகும் என்ற நம்பிக்கையும், தீமைகள் விலகி நன்மைகள் பெருகும் என்னும் எண்ணமும் இருந்தது. அதன் காரணமாகக் குடும்பச் சடங்குகளையும் கடவுளுக்காக மேற்கொள்ளும் சடங்குகளையும் முறைப்படி செய்வதை மக்கள் தங்களுடைய கடமைகளாகக் கொண்டனர். குறிப்பாக எந்த நிகழ்ச்சியை எவ்வாறு கட்டமைக்க வேண்டும் எந்தத் திருவிழாவை எவ்வாறு கொண்டாட வேண்டும் என்பதைச் சடங்குகள் அறிவித்தன. நீண்ட காலத்திற்கு முன்பே தமிழர்கள் கொண்டாடிய சடங்குகளும் விழாக்களும் பண்பட்ட முறையில் இருப்பதைக் காணும்போது விழா நெறிமுறைகளை வகுப்பதிலும் அவற்றை வழி நடத்துவதிலும் தமிழ்ச் சமுதாயம் பண்பட்ட நிலையில் இருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது. சங்க இலக்கியங்களில் காணப்படக்கூடிய வெறியாட்டு தெய்வ விழாக்கள் குடும்ப நிகழ்ச்சிகள் முதலியவற்றில் மேற்கொள்ளப்பட்ட சடங்குமுறைகள் காலம்தோறும் சடங்குகள் பெற்றுவந்த வளர்ச்சியை அறிவிப்பதாக உள்ளன.

எந்த ஒரு செயலையும் செய்யும்போது குறிப்பிட்ட படிநிலை வளர்ச்சியில் காரண காரியத்தோடு செய்வது மனித இயல்பு. தெய்வங்கள் மனிதர்களை விட சக்தி மிக்கவை என்று எண்ணிய எண்ணம் இயற்கை நிகழ்ச்சிகளின் வாயிலாகவும் அச்சத்தின் வாயிலாகவும் நிலைபெற்றபோது மனிதர்கள் தெய்வங்களிடம்

இருந்து சக்தியைப் பெறவும் தீய சக்திகளில் இருந்து தன்னைக் காத்துக் கொள்ளவும் சடங்குகளை மேற்கொள்ளத் தொடங்கினர். தொடக்கக் காலத்தில் அவர்கள் மேற்கொண்ட திட்டமிடப்படாத சடங்குகள் காலப்போக்கில் தொடர்ந்த வழக்கத்தின் காரணமாகப் பண்பட்ட நிலையினை அடைந்தன. மக்கள் மேற்கொண்ட பழக்கவழக்கங்களும் ஒரே மாதிரியான நிகழ்ச்சிகளும் சடங்குகள் தோன்றுவதற்கு காரணமாக அமைந்தன. “சடங்குகளே விழாக்களுக்கு அடிப்படை சடங்குகளின் ஒன்றிணைக்கப்பட்ட கூட்டுத் தொகுதியினை விழா என கூறலாம். சடங்கு என்பது வாழ்வியல் நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டது விழாக்கள் சமுதாயம் மற்றும் சமயம் சார்ந்த மந்திரங்களோடும் இயற்கை இறந்த மீவியற்கை ஆற்றல்களோடும் தொடர்புடையனவாகக் காட்சி தருகின்றன. விழாக்கள் மகிழ்ச்சியினை அடிப்படையாகக்கொண்டு சமுதாயம் தழுவியதாக அமையும். ஆனால் சடங்குகள் செயல் முறையினை அடிப்படையாகக்கொண்ட இறுக்கமான விதிகளை உள்ளடக்கியதாகவே காட்சி தருகின்றன என்று குறிப்பிடுவர்”[45] “ சடங்குகள் மரபுவழிப்பட்ட செயல்முறைகளை அடிப்படையாகக் கொண்டு அமையக் காண்கிறோம். நாம் இன்று இவ்விரு சொற்களையும் வரையறையின்றி மாறிமாறிப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறோம். அவற்றின் எல்லைகளையும் நம்மால் வரையறுக்க இயலவில்லை. எனினும் பொதுவாகச் சடங்குகள் என்பன மனிதனோடும் இனக்குழுவோடும் தொடர்புடையன என்றும், விழாக்கள் மீதி இயற்கைக் கூறுகள்ளோடும்

சமுதாயத்தோடும் தொடர்புடையன என்று கூறலாம்"[46] என்று குறிப்பிடுவர்.

இனக்குழு வாழ்க்கையின் தொடக்கத்தில் இயற்கையை கண்டு அச்சம் கொண்ட மனிதர்கள் இயற்கையை வணங்குவதால் இன்னல்களிலிருந்து தப்பலாம் என்று கருதித் தங்களைக் காத்துக் கொள்ளும் பொருட்டு வழிபாட்டை மேற்கொண்ட நிலையில் சடங்குகள் தோற்றம் பெற்றன என்று கூறலாம்.

## சடங்கு மேற்கொள்ளும் முறை

மரபுவழியாகச் சடங்குகளை நடத்துவதற்கு என்று பண்டைக்காலத்தில் சடங்கு வழிமுறைகளை நன்றாக அறிந்தவர்கள் இருந்தனர். அவர்களின் வழிகாட்டலின்பேரில் சடங்குகள் நிகழ்த்தப்பட்ட முறையினை இலக்கியங்கள் தெளிவுபடுத்தியுள்ளன. இதனை,

**"பனிபடு பைதல் விதலைப் பருவத்து**
**ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து**
**மாயிரும் திங்கள் மறுநிறை ஆதிரை**
**புரிநூல் அந்தணர் விழவு தொடங்க" (பரி. 11: 75 -78)**

என்னும் சான்றால் அறியலாம்.

## வாழ்வியல் சடங்குகள்

இறை வழிபாட்டுக்குரிய சடங்குகள் திட்டமிட்டு நடைபெறும் என்பதால் ஆகம விதிகளை நன்றாக அறிந்த சான்றோர்கள்

சடங்குகளை மேற்கொண்டனர். பண்டைக் காலத்திலேயே சடங்குகளைச் செய்ய வேண்டிய முறை சான்றோர்களால் வகுத்து வைக்கப்பட்டது. சடங்குகளை மேற்கொள்பவர்கள் ஆகம விதிகளில் இருந்து மாறுபடாமல் சடங்குகளைச் செய்தனர். சோழ மன்னன் கரிகாலன் தான் மேற்கொண்ட வேள்வியினை வேள்வி முறையை அறிந்த சான்றோர்களைக் கொண்டு நிகழ்த்தினான் என்பதைப் புறநானூறு தெரிவிக்கிறது. இதனை,

**“முறை நன்கு அறியுநர் முன்னுறப் புகழ்ந்த**
**தூயியல் கொள்கை துகளறு மகளிரொடு**
**பருதி உருவின் பல்படைப் புரிசை**
**எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்**
**வேத வேள்வித் தொழில் முடிந்ததூஉம்” (புறம். 224: 5 -9)**

பண்டைக்காலத்தில் தை நீராடல் அம்பா ஆடல் என்று அழைக்கப்பட்டது. கன்னிப்பெண்கள் நோன்பு நோற்று நிகழ்த்தக்கூடிய அம்பா ஆடல் சடங்கு முறைகளுக்கு உட்பட்டு நிகழ்த்தப்பட்டது. அந்தணர் குலத்தைச் சேர்ந்த முதிய பெண்கள் கன்னிப்பெண்களுக்குச் சடங்கு முறைகளை உணர்த்துவதாகப் பரிபாடல் குறிப்பிடுகிறது.இதனை,

**“அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்**
**முனித் துறை முதல்வியர் முறைமை காட்ட**
**………. ………… ……….. ………..**
**தாய் அருகா நின்று தவத் தைந் நீராடுதல்” (பரி. 11: 81 - 91)**

என்னும் சான்று தெளிவுபடுத்தும்.

## சடங்கின் நோக்கம்

சடங்குகள் நன்மைகள் நடைபெறுவதை நோக்கமாக்க் கொண்டு நிகழ்த்தப்பட்டன. “வழிபாடு விழா முதலிய சடங்குகள் மக்கள் பயன் கருதி செய்யப்படும் எனவே மழை வளம் பெருகவும் தங்கள் வாழ்வு சிறக்க ஓமே தெய்வம் போற்றுகின்றனர் இம்மை வாழ்வில் தாம் விரும்பும் பயன்களை தெய்வத்திற்கு செய்யும் பூசை முதலியவற்றால் பெறலாம் என்று கண்டனர்”[47] என்னும் கூற்று நம்பிக்கை, விருப்பம் என்னும் அடிப்படையில் சடங்குகள் நிகழ்த்தப்பட்டதைத் தெளிவுபடுத்துகிறது.

## வாழ்வியல் சடங்குகள்

மக்கள் தங்கள் வாழ்வில் நினைத்த எல்லாம் நினைத்தவாறே நிறைவேற வேண்டும் என்று நினைக்கின்றனர். நிறைவேறாத சூழ்நிலையில் அது தெய்வக் குற்றம் என்று கருதுகின்றனர். நினைத்த எல்லாம் நினைத்தவாறே நடைபெறுவதற்குத் தெய்வ அருள் வேண்டும் என்பதால் நம்பிக்கையின் அடிப்படையில் சடங்குகளையும் மேற்கொள்கின்றனர். தனி மனித நலனுக்கு மட்டுமன்றிப் பொது நலத்திற்காகவும் சடங்குகள் நடைபெறுவது உண்டு. சமூக வாழ்வு சிறக்கவும் மழை பொழியவும் அரசு சிறப்பாக நடைபெறவும் மக்கள் வளமாக வாழவும் பல்வேறு சடங்குகள் இயற்றப்பட்டன. சடங்குகள் செய்வதன் முக்கியமான நோக்கம் பயன்களை பெறுவதே ஆகும். அடிப்படையிலேயே வழிபாடு விழா தொடர்பான சடங்குகளும் பிற சடங்குகளும் தோற்றம் பெற்றன.

சங்க இலக்கியங்களில் பல்வேறு சடங்குகளை மேற்கொள்ளப்பட்டதற்கான குறிப்புகள் காணப்படுகின்றன.

இல்லற வாழ்க்கையில் பெறத்தக்க பேறுகளில் ஒன்றாகக் குழந்தைப் பேறு கருதப்படுகிறது. குழந்தைச் செல்வத்தைப் பெற்றவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் துன்பம் இல்லை என்பது அறிவுடை நம்பியின் கூற்று. கருக்கொண்டிருக்கும் மகளிர் நல்ல முறையில் குழந்தையைப் பெற்றெடுக்கவும் அறிவார்ந்த குழந்தையைப் பெற்றெடுக்கவும் தெய்வத்திற்குப் பல்வேறு சடங்குகளைச் செய்து வழிபட்டனர் அவ்வாறு வழிபடுவதனால் தங்கள் எண்ணம் நிறைவேறும் என்று நம்பினர். பண்டைத் தமிழ் இலக்கிய நூலாகிய பரிபாடல் பெண்கள் கருவுற்ற காலத்தில் சடங்கு செய்தமையைக் குறிப்பிடுகிறது. இதனை, "கரு வயிறு உறுக எனக் கடம்படுவோரும்" (பரி. 8: 106 -108) என்னும் சான்றால் அறியலாம். கடவுளுக்கு நேர்த்திக்கடன் செய்வதன் மூலமாக நல்ல பலன்களைப் பெறலாம் என்பதை ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.இதனை,

**"குன்றக்குறவன் கடவுள் பேணி**
**இருந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்"( ஐங். 257)**

என்னும் சான்றால் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குறவன் கடவுளை வழிபட்டு அதன் பயனாகக் குழந்தை பெற்ற நிகழ்வை அறிய முடிகிறது. அவ்வாறு கருக்கொண்ட மகளிர் தெய்வங்களுக்கு வழிபாடு நடத்தியதோடு பல்வேறு சடங்கு முறைகளையும் மேற்கொண்டனர். மதுரைக்காஞ்சி கருக்கொண்ட பெண்கள் கடவுளுக்குப் பால் சோறு கொடுத்து வழிபட்டதை அறியமுடிகிறது.

வீடுகளில் தீயசக்தி அணுகாத வண்ணமும்குழந்தை பெற்ற மகளிரை அணங்குகளிடமிருந்து காக்கவும் சடங்குகள் நிகழ்த்தப்பட்டன. தெய்வ வழிபாட்டை நிகழ்த்தி தீயசக்திகள் அணுகாத வண்ணம் நெய்யோடு சேர்த்து வெண் சிறு கடுகு மாளிகையில் பூசி வைத்தமையை அறியமுடிகிறது. குழந்தைகளைத் தீயசக்தி அணுகாவண்ணம் அவர்களுக்கு கரு நிறமான பொட்டியிடுதல் மை தீட்டுதல் முதலான வழக்கங்கள் கடைப்பிடிக்கப்பட்டன. குழந்தை பெற்ற பெண்கள் வெண்சிறு கடுகைப் புகைத்தும் மணமுடைய புகையை உருவாக்கியும் அணங்குகள் இடமிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொண்டனர். இச்செய்தியை நற்றிணை பதிவுசெய்துள்ளது.

**“நெய்யும் குய்யும் வாடி மெய்யொடு**
**மாசுபட் டன்றே கலிங்கமும் தோளும்**
**திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்ற**
**புதல்வற் புல்லிப் புனிறு நாறும்மே” (நற். 380: 1 - 4)**

குழந்தை பெற்ற பெண்கள் தம் குழந்தைகள் நோயில்லாமல் நன்றாக வாழவேண்டும் என்றும் துன்பங்கள் சேரக்கூடாது என்றும் இறைவனை வேண்டிச் சடங்குகள் செய்து காத்தனர். குழந்தையின் நலன் பொருட்டு விரிச்சி கேட்பதும் நிமித்தம் பார்ப்பதும் வழக்கில் இருந்தன.

## சடங்கும் இறை உணர்வும்

உலகில் வாழக்கூடிய மக்கள் தாம் வாழ்கின்ற சூழலுக்கேற்றவாறு தம் வாழ்வை அமைத்துக் கொள்கின்றனர். மனித வாழ்வில் குறிப்பிடத்தக்க நம்பிக்கையை தோற்றுவிப்பது இறை உணர்வு.

குடும்பங்களில் இறை வழிபாடு நடத்துவதாலும் வழிபாட்டுச் சடங்குகளை மேற்கொள்வதாலும் குடும்பத்திலுள்ள இளம் உறுப்பினர்களும் வழிபாட்டு சிந்தனை உடையவர்கள் ஆகிறார்கள். இவ் அடிப்படையிலேயே வழிபாட்டு நெறிகளும் சடங்குகளும் நம்பிக்கைகளும் தொன்று தொட்டுக் காப்பாற்றப்பட்டு வருகின்றன. குடும்பத்தில் வழிபாடு நடத்தும் பெண்களும் ஆண்களும் நம்முடைய குழந்தைகளை சடங்குகளில் ஈடுபடுத்துவதாலும் கோயில்களுக்கு அழைத்துச் செல்வதாலும் அவர்கள் இறை உணர்வினைப் பெறுகிறார்கள் என்று கருதுவதற்கு இடம் இருக்கிறது. சிறு குழந்தைகளுக்கும் இறை வழிபாட்டை மேற்கொள்ள வேண்டிய முறையினை எடுத்துக்கூறி வழி அனுப்பிய செய்தியைக் கலித்தொகை பதிவுசெய்துள்ளது.

**“கடவுள் கடிநகர் தோறும் இவனை**
**வலம் கொளீஇ வாஎன சென்றாய்” (கலி. 84: 5 -7)**

## கல்வி

மனித வாழ்க்கையின் நிலைபேற்றிருக்கும் அமைதியான வாழ்க்கைக்கும் கல்வி அவசியம். மனித வாழ்க்கையில் கல்வியானது நடத்தை மாற்றத்தை ஏற்படுத்துகிறது. அதன் வாயிலாக மனித வாழ்க்கை பக்குவம் அடைகிறது. கல்வியின் சிறப்பை உணர்ந்த பண்டைய மக்கள் கல்வி கற்கத் தொடங்குவதை சடங்காகவே நிகழ்த்தி இருக்கின்றனர். எத்தகைய சூழ்நிலையிலும் கல்வியைக் கைவிடலாகாது என்பதை இலக்கியங்கள் கூறியுள்ளன.

திருவள்ளுவர் “கல்வியே சிறந்த செல்வம் பிற செல்வங்கள் எல்லாம் செல்வங்கள் அல்ல”[48] என்று குறிப்பிடுவார். பாண்டிய மன்னன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் அறிவுடையவனை நாடியே அரசு செல்லும் என்று குறிப்பிட்டிருக்கிறார். நான்கு வருணத்தார் தவிர வேறொரு குலத்தைச் சார்ந்த ஒருவன் கல்வி கற்று உயர் நிலையை அடைந்தால் நான்கு வருணத்தைச் சேர்ந்தவர்களும் உதவி பெற அவனை நாடவேண்டும் என்னும் சிந்தனையைப்புறநானூறு கூறுவது கருதத்தக்கது.

கல்வி கற்கத் தொடங்கும் நிகழ்ச்சி சங்ககாலம் முதல் சடங்காகவே நிகழ்த்தப்பட்டு வந்தது. கல்வி குறித்தும் கல்வியில் மேற்கொள்ளக்கூடிய படிநிலைகள் குறித்தும் பல்வேறு கலைச்சொற்கள் இலக்கியங்களில் காணப்படுகின்றன. ஆசிரியரை மதிக்க வேண்டும் அவருக்கு கொடுக்க வேண்டிய பொருளைக் காலத்தால் கொடுக்கவேண்டும் என்பது முதலான செய்திகளைக் கலித்தொகை பதிவுசெய்துள்ளது.

**“கற்பித்தான் நெஞ்சு அழுங்கப் பகர்ந்து உண்ணான்**
**விச்சைக்கண்**
**தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்”**
**(கலி.149: 4-5)**

பழங்காலத்தில் கல்வி வாழ்க்கையின் ஒரு பகுதியாக இருந்தது. பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கும் நிகழ்வு தொடங்குவதைச் சடங்காகவே மேற்கொண்டனர் “கல்வி கற்கச்

செல்லும் மாணவர்களின் ஓலையில் மை பூசும் நிகழ்வு மையாடல் என்னும் சடங்காகவே மேற்கொள்ளப்பட்டது” (பரி.11: 88).

## மகளிர் சடங்கு

சங்க காலத்தில் அம்பா ஆடல் என்னும் நீராடல் சடங்கு பெருவழக்காக இருந்தது. இது நீராடல் சடங்கு என்றும் அழைக்கப்பட்டது. கன்னிப்பெண்கள் இளமைக் காலத்தில் மேற்கொள்ளும் சடங்காக விளங்கியது. முது பெண்கள் வழிகாட்ட அவர்கள் கூறும் விதிமுறைகளைத் தலைமேற்கொண்டு இளம் பெண்கள் அம்பா ஆடல் என்னும் தை நீராடல் மேற்கொண்டனர். நாடு நலம் பெறவும் வாழ்க்கை நலம் பெறவும் இச்சடங்கு மேற்கொள்ளப்பட்டது. “கன்னி மகளிர் இளமையில் நோற்கும் நோன்புகளில் ஒன்று. அம்பா ஆடல் இதனைத் தை நீராடல் என்று குறிப்பிடுவர். இவர் சிறுமி ஆதலின் தாயார் அருகே நிற்க நீராடுகின்றனர். மார்கழி மாதத்து நிறைமதி நாளாகிய திருவாதிரை நாளில் பூசகர் தெய்வத்திற்கு விழா எடுக்கக் கன்னிப் பெண்கள் கூடி பூமியானது மழை வளம் பெற்றுக் குளிர்வதாக என்று அம்பா பாடலை மேற்கொள்கின்றனர். அவர்களுக்கு முதுபெண்கள் நோன்பின் முறைமையினைத் தெரிவிக்கின்றனர். அவர்கள் காட்டிய முறைப்படி அதிகாலையில் நீராடிக் கன்னி மகளிர் நோன்பு நோற்கின்றனர்”[49] அம்பா ஆடல் என்னும் நிகழ்வு கலித்தொகை நற்றிணை ஐங்குறுநூறு பரிபாடல் அகநானூறு ஆகிய இலக்கியங்கள் அறியப்படுகிறது. தை மாதம் நோன்பு நோற்றுக் குளிர்ந்த நீரில் அதிகாலை நீராடுவதால்

வாழ்க்கையில் நினைத்தது நடக்கும் என்று கலித்தொகை குறிப்பிடுவது கருதத்தக்கது.

**“வைஎயிற்றவர் நாப்பண் வகைஅணிப் பொலிந்துநீ**
**தையில் நீர்ஆடிய தவம் தலைப்படுவாயோ” (கலி. 59: 12 -13)**

இளம் பெண்கள் தை நீராடல் என்னும் நிகழ்வைத் தோழிகளோடு ஆடி மகிழ்ந்தனர். தை நீராடலின்போது நீராடும் நீர் நிலைக்கும் வழிபாடு நிகழ்த்தியமையைக் கலித்தொகை சிறப்பிக்கிறது.

**“தைஇய மகளிர்தம் ஆயமோடு அமர்ந்து ஆடும்**
**வையை வார் உயர் எக்கர் நுகர்ச்சியும் உள்ளார்கொல்”**
**(கலி.27: 19 -20)**

நீராடுவதற்கு முன்பு விளையாட்டுக்குரிய பாவையை அழகுபடுத்திக் குரவைக்கூத்து ஆடுதல் முதலான வழக்கங்கள் இருந்தமையை அகநானூறு தெளிவுபடுத்துகிறது.

**“தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்**
**பொலங்காசு நிரைத்த கோடு ஏந்து அல்குல்**
**நலம்கேழ் மாக்குரல் குழையொடு துயல்வர**
**பாடு ஊர்பு எழுதரும் பகுவாய் மண்டிலத்து**
**வயிர் இடைப் பட்ட தெள் விளி இயம்ப**
**வண்டல் பாவை உண் துறை தரீஇ**
**திருநுதல் மகளிர் குரவை அயரும்**
**பெருநீர் கானல் தழீஇய இருக்கை**
**வாணன் சிறுகுடி” (அகம். 269: 14-20)**

தை நீராடலின் நோக்கத்தைப் பரிபாடல் சிறப்பான நிலையில் எடுத்துக்காட்டுகிறது. காதலரைப் பிரியாமல் இருக்க வேண்டும் எம்மால் விரும்பப்படும் கணவர் என்னைப் பாதுகாக்க வேண்டும் குழந்தைகளோடும் செல்வத்தோடும் வாழ வேண்டும் என்னும் நோக்கங்களை மையமிட்டு அம்பா ஆடல் நிகழ்த்தப்படுகிறது. இதனை,

**“நீ தக்காய் தைந்நீர் நிறம் தெளிந்தாய் என்மாரும்**
**கழுத்து அமைகை காதலர்ப் புல்ல**
**விழுத்தகை பெறுக என வேண்டுதும் என்மாரும்**
**பூவீழ் அரியின் புலம்பப் போகாது**
**யாம் வீழ்வார் ஏம்ம் எய்துக என்மாரும்**
**கிழவர் கிழவியர் என்னாது ஏழ்காறும்**
**மழ ஈன்று மல்லற்கேள் மன்னுக” (பரி. 11: 115 -121)**

என்னும் சான்றால் அறியலாம்.

## கட்டு கழங்கு என்னும் சடங்குகள்

சங்ககாலத்தில் அக, புறத்திணைகளின் அடிப்படையில் இலக்கியங்கள் படைக்கப்பட்டன. அவ்விலக்கியங்கள் மக்களின் வாழ்க்கையைப் புரிந்து கொள்வதற்குச் சான்றாக விளங்குகின்றன. தலைவன் தலைவியின் காதல் வாழ்க்கையில் சந்திக்க இயலாத சூழ்நிலைகள் உருவாகின்ற போது தலைவனுடைய நினைவால் தலைவி உடல் மெலிகின்றாள் இதனைக் கண்ட செவிலியும் தாயும் கட்டு வைத்து பார்த்தும் கழங்கு வைத்துப் பார்த்தும் தலைவியின் நோயை அறிவதற்கு முயல்கின்றனர் இந் நிகழ்ச்சிகள் இரண்டும் மரபு

வழியிலான சடங்குகளின் கட்டமைப்போடு செய்யப்படுகின்றன்ன நச்சினார்க்கினியர்“அகன்ற இடத்தையுடைய ஓர் இடத்து கட்டினாலும் கழங்கினாலும் எண்ணி அறிவாரை வினாவி அவன் தெய்வத்தான் வந்த வருத்தம் என்றலின்”[50] என்று கூறுவது நோக்கத்தக்கது. “கட்டுவிச்சியை அகவன் மகள் என்று அழைப்பர். இவள் தெய்வங்களை அழைத்துக் குறி கூறும் இயல்பினள். வெள்ளிய பூண் கட்டிய சிறிய கணுக்களோடு கூடிய மூங்கில்கோலைக் கையிலே பிடித்திருப்பர்”[51]. என்று கூறுவது கருதத்தக்கது.

அகவன் மகள் அதாவது கட்டுவிச்சி நீண்ட கூந்தலை உடையவளாகவும் அழகிய தோற்றத்தை உடையவளாக இருந்தாள் என்பதை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. கட்டுவிச்சி தான் குறி கூறுவதற்கு நெல்லைக் கொண்டு குறி கூறிய முறைமையினை இலக்கியங்களால் அறிய முடிகிறது. தன்னிடம் குறி பார்ப்பவர்களுக்கு நல்ல நிமித்தங்ளையும் தீய நிமித்தங்களையும் ஆராய்ந்து கூறுவது இவர்களின் பணியாகும்.

**“குன்ற நாடன் பிரிவின் சென்று**
**நல் நுதல் பரந்த பசலை கண்டு அன்னை**
**செம்முது பெண்டிரொடு நெல் முன் நிறீஇ**
**கட்டின் கேட்கும் ஆயின்”** **(நற். 288: 4 -7)**

என்னும் பாடல் அடிகளால் கட்டுவிச்சி நெல் கொண்டு குறி கூறிய முறையினை அறிய முடிகிறது. தலைவியின் உடல் மெலிவை கட்டு வைத்துப் பார்ப்பதும் கழங்கு வைத்துப் பார்ப்பதும் வெறி அயர்வதும்

பழங்கால முறைகள். வெறியாடல் கட்டுவிச்சியிடம் குறி கேட்டல் ஆகியவற்றை அகநானூற்றுப் பாடலால் அறிய முடிகிறது.

**“பொய்வல் பெண்டீர் பிரப்பு உளர்ப்பு இரீஇ**
**முருகன் ஆர் அணங்கு என்றலின் அது செத்து**
**ஓவத் தன்ன வினை புனை நல் இல்**
**பாவை அன்ன பலர் ஆய் மாண் கவின்**
**பண்டையின் சிறக்க என் மகற்கு எனப் பரைஇ**
**கூடுகொள் இன்னியம் கறங்க களன் இழைத்து**
**ஆடணி அயர்ந்த அகன் பெரும் பந்தர்**
**வெண்போழ் கடம்பொடு இன்சீர்**
**ஐதுஅ மை பாணிஇரீஇ  கை பெயரா**
**செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்**
**வெறி அயர் வியன்களம் பொற்ப வல்லோன்**
**பொரியமை பாவையின் தூங்கல் வேண்டின்**
**என்ஆம் கொல்லோ தோழி”            (அகம். 98: 9 -21)**

வேலன் வெறியாடல் நிகழ்த்தும்போது கூறுகின்ற குறி கழங்குக் குறியாகும். கழற்சிக்காய் விதைகளைக் கையில் கொண்டு அதனைத் தரையில் இட்டு அதன் மூலமாக்க் குறிகூறுவது வழக்கம். கழங்கு பார்க்கும் குறி சரியாக அமையவில்லை என்றால் அடுத்தகட்டமாக வெறியாடல் நிகழ்த்துவது வழக்கமாக இருந்தது.

## திருமணச் சடங்கு

தலைவன் தலைவியின் கற்பு வாழ்க்கை திருமணத்தில் தொடங்குகிறது கடி வதுவை முதலான பெயர்கள் திருமணத்தைக்

குறிக்கின்றன. திருமணம் நடைபெறுவதற்கு முன்பு திருமணத்தை ஒட்டி இறை வழிபாட்டுச் சடங்குகள் நிகழ்த்தப்பட்டமையினை அறிந்துகொள்ள முடிகிறது. அகநானூற்றுப் பாடல் ஒன்று திருமணத்திற்கு முன்பு தெய்வத்திற்குச் சடங்கு செய்த முறைமையினை எடுத்துக்கூறுகிறது.

**"இன் தீம் பலவின் ஏர்கெழு செல்வத்து**
**எந்தையும் எதிர்ந்தனன்கொடையே அலர் வாய்**
**அம்பல் ஊரும் அவனொடு மொழியும்**
**சாய் இறைத் திரண்டதோள் பாராட்டி**
**யாவும் அவனே என்னும் யாமும்**
**வல்லே வருக வரைந்த நாள் என**
**நம்மிறை மெல் விரல் கூப்பி**
**இல்லுறை கடவுட்கு ஆக்குதும் பலியே" (அகம். 282: 11- 18)**

இப்பாடல் அடிகள் திருமணத்திற்கு முன்பு இல்லுறை தெய்வத்தை வழிபட்டமைக்குச் சான்றாகின்றன.

### வழிபாட்டு சடங்கில் சில மரபுகள்

வழிபாட்டுச் சடங்கு தன்னகத்தே சில மரபுகளைக் கொண்டு விளங்குகிறது. வழிபாட்டின் மூலமாகத் தெய்வங்களிடம் இருந்து நற்பலன்களைப் பெற விருப்பும் மனிதன் அதற்காக வழிபாட்டு முறையில் சில முறைமைகளை ஏற்படுத்தி இருக்கின்றான். தெய்வங்களை இப்படித்தான் வணங்க வேண்டும் என்பதைக் கற்றுக்கொள்வதற்கு மனிதன் படைத்த வழிபாட்டு முறைமைகள் துணை செய்கின்றன.

இறை வழிபாட்டு முறையில் உணவு படைத்தல் உயிரினங்களை வெட்டிப் பலி கொடுத்தல் இறைவனுக்கு அலங்காரம் செய்தல் தலைமைப் பண்பின் பொருட்டு பரிவட்டம் கட்டுதல் ஒளியின் மூலம் இறைவனை வழிபடுதல் பல்வகை விளக்குகள் கொண்டு வழிபடுதல் மணப் புகை புகைத்து வழிபடுதல் தாம்பூலம் வைத்தல் முதலான படிநிலை வளர்ச்சியினைக் காலந்தோறும் காண முடிகிறது.

## உணவு படைத்து வழிபடுதல்

மனிதன் தான் வணங்கும் தெய்வங்களுக்கும் தன்னைப் போலவே உடை அணிவித்து அழகு பார்ப்பதும் அணிகலன்கள் அணிவிப்பதும் உணவு சமைத்துப் படைப்பதும் உண்டு அவ்வகையில் பண்டைக் கால இலக்கியங்கள் பலவற்றிலும் வணங்கும் தெய்வத்திற்கு உணவு படைத்த முறைமையினை அறிய முடிகிறது.

**“காலுடைக் கொழுமஞ்சிகைத்**
**தாழுடைத் தண் பணியத்து**
**வாலரிசிப் பலி சிதறி”** **(பட்டினப்பாலை. 163 - 166)**

தெய்வத்திற்குப் பலியாக உணவிடுதல் வழக்கமாக வரும் பான்மையில் பட்டினப்பாலை வெண்மை நிறமான அரிசியினைத் தூவி இறைவனை வழிபட்டத் தன்மையினை எடுத்துக்காட்டுகிறது. வேலன் வெறியாடல் நிகழ்ச்சியில் வெண் சிறு கடுகு தூவுதல் ரத்தம் கலந்த சோற்றை வெறி ஆடுகளத்தில் படைத்தல் தெய்வங்களுக்குப்

பலி கொடுத்தல் முதலான நிகழ்வுகளை இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. தெய்வங்களின் மனம் குளிர்ந்தால் மனிதனின் தேவைகள் நிறைவேறும் என்னும் அடிப்படையிலேயே தெய்வங்களுக்கு உணவுப் படையல் இடப்படுகிறது.

## கள் படைத்து வழிபடுதல்

பண்டைத் தமிழர்களின் வாழ்க்கையில் 'கள்' முக்கிய உணவாக இருந்தது. அரிசி, தேன் முதலான பொருள்களிலிருந்து 'கள்' தயாரிக்கப்பட்டுள்ளது. தெய்வங்களுக்கு இடப்படும் படையல்களில் மதுத்துளி வார்ப்பது முக்கியமாகக் கருதப்பட்டது. நடுகல் வழிபாட்டில் வீரனுக்காக எடுக்கப்பட்ட நடுகல்லில் அலங்காரம் செய்து அதனைச் சுற்றிலும் மதுத் துளிகளைத் தூவிக் 'கள்' படைத்து வழிபடுவதும் வழக்கிலிருந்தமையினைச் சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. இன்றைய வழிபாட்டு முறைகளும் கிராமத் தெய்வங்களுக்கும் அய்யனார், மதுரை வீரன், கருப்பர் முதலான தெய்வங்களுக்கும் 'கள்' படைத்து வழிபடுதல் வழக்கிலுள்ளது. அகநானூறு அரிசியில் இருந்து தயாரிக்கப்பட்ட கள்ளையும் ஆட்டு மாமிசத்தையும் பலியாகக் கொடுத்ததைத் தெளிவுபடுத்துகிறது. மேலும் தெய்வங்களுக்கு நன்றாகப் புளித்த கள்ளைக் கொண்டு படைத்ததையும் தேனால் செய்யப்பட்ட கள்ளைத் தினசரி வழிபாட்டுக்குப் பயன்படுத்தியதையும் கள்ளும் ஆட்டுக்கறியும் பலியாகக் கொடுக்கப்பட்டதையும் இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. இதனை,

**“தோப்பிக் கள்ளுடன் துரூஉப் பலி கொடுக்கும்**

**நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்” (அகம். 213: 7)**

**“கள்ளும் கண்ணியும் கையுறை யாக**

**நிலக்கோட்டு வெள்ளை நால்செவிவிக்கிடாய்**

**இலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி” (அகம். 156: 13 - 15)**

என்னும் இலக்கியச் சான்றுகள் தெளிவுபடுத்துகின்றன. பண்டைத் தமிழர் சமுதாயத்தில் ‘கள்’ போர் வாழ்விலும் சமூக வாழ்விலும் பேரிடம் பெற்றிருந்தது. மக்கள் அதனை விருப்பமோடு உண்டனர். உடல் உழைப்பினால் ஏற்பட்டக் களைப்பினைப் போக்கிக்கொள்வதற்கு அவர்கள் கள்ளை அருந்தினர். தாம் உண்ணும் உணவைக் கடவுளும் ஏற்பார் என்னும் பான்மையில் கடவுளுக்கும் கள் வைத்து வழிபட்டனர்.

## தெய்வங்களை அழகுபடுத்துதல்

மனிதன் தன்னை அலங்காரம் செய்து கொள்வதில் ஆர்வமுடையவன். அவனுடைய அழகியல் குணம் இறை வழிபாட்டிலும் எதிரொலிப்பதை இலக்கியங்கள் வெளிக்காட்டி உள்ளன. நடுகல் வழிபாட்டில் நடுகல்லுக்கு அழகு செய்யும் போக்கினைக் காண முடிகிறது.

**“பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்**

**பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்” (அகம். 67: 9 - 11)**

என்னும் சான்றால் நடுகல்லுக்கு மயில் பீலியால் அழகு செய்து வழிபட்ட தன்மையினை அறிய முடிகிறது. மலர் மாலைகளைக்

கொண்டு தெய்வங்களை அழகுபடுத்துவது பண்டைக்கால வழக்குகளுள் ஒன்றாக இருந்தது.

**"பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை**
**துணையற அறுத்துத் தூங்க நாற்றி" (திருமுருகு. 236 - 237)**

## உடை அணிவித்தல்

இறை வழிபாட்டில் மக்கள் வண்ண ஆடைகளைத் தெய்வங்களுக்கு அணிவித்து வணங்குவதில் கவனம் செலுத்தினர். தெய்வங்களின் தன்மைக்கு ஏற்றவாறு உடைகள் அமைந்திருந்த பான்மையினைக் குறுந்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடலில் முருகனுக்குரிய ஆடை செம்மை நிறமானது என்ற பதிவு காணப்படுகிறது.

**"தாமரை புரையும் காமர் சேவடி**
**பவளத் தன்ன மேனித் திகழொளி**
**குன்றி ஏய்க்கும் உடுக்கை" (குறுந். க. வா)**

குறுந்தொகையில் இடம்பெறும் பாடல் ஒன்று முருகப்பெருமான் அணிந்திருக்கும் ஆடைக்கு இந்திரகோபப் பூச்சியின் நிறத்தை உவமையாகக் கூறுகிறது. இந்திரகோபப் பூச்சியைப் போன்று இயற்கையான நிறமுடைய ஆடையை அணிந்திருந்ததாக இலக்கியச் சான்று தெரிவிக்கிறது. இதனைக் கோபத் தன்ன தோயாப் பூந்துகில் (திருமுரு. 15) என்னும் அடியின் மூலம் அறியலாம்.

## ஒளி வழிபாடு

இறைவனை ஒளி வடிவில் காண்பது மரபு. அவ்வடிப்படையில் இறைவனுக்கு விளக்கு ஏற்றி வைப்பதும் மரபு. நெருப்பைக் கண்டு அச்சம் கொண்ட ஆதி மனிதன் நெருப்பை வழிபடத் தொடங்கியதன் காரணமாக ஒளி வழிபாடு தோற்றம் பெற்றது. பண்டைய இலக்கியங்களில் அகநானூறு, கார் நாற்பது, களவழி நாற்பது முதலான இலக்கியங்களில் கார்த்திகை விழா குறிப்பிடப்படுவதால் கார்த்திகை நட்சத்திரக் கூட்டம் ஊழலற்ற குட்டம் என்று சொல்லப்படுவதால் நெருப்பு வழிபாடு நீண்ட காலத்திற்கு முன்பே தோன்றி இருக்க வேண்டும் என்பது விளங்கும். பரிபாடல் இறைவனை அல்லல் இல் அனலன் (பரிபாடல். 5: 57) என்று குறிப்பிடுவதனால் இறைவனை நெருப்பாக எண்ணி வழிபடப்பட்ட தன்மை விளங்கும். விளக்கேற்றி துன்பங்கள் நீங்கும் என்பது மக்களுடைய நம்பிக்கை. திருப்பரங்குன்றத்தில் நடைபெற்ற விழாவிற்கு மக்கள் பலரும் விளக்கினை எடுத்துச் சென்று வழிபாடு நடத்தியதைப் பரிபாடல் தெளிவுபடுத்துகிறது. விளக்கினைக் கொண்டு செல்லும் வழியில் அணையாமல் இருப்பதற்காக அதனைப் பாதுகாப்பாக எடுத்துச்சென்றதை ஆறுசெல் வளியின் அவியா விளக்கமும் (பரிபாடல். 8: 98) என்னும் அடியால் அறியலாம்.

“விளக்கும் தமிழர் வரலாற்றோடு தொடர்புடைய இன்றியமையாத பொருள். அது பண்டுதொட்டு இன்றுவரை தமிழர்களின் இல்லத்தில் ஒரு மதிப்பிற்குரிய மங்கலப் பொருளாக

மதிக்கப்பட்டு வருகிறது. (இராகவன். தமிழ்நாட்டுத் திருவிளக்குகள். ப. 1) என்று தமிழர் பண்பாட்டில் விளக்குகள் பெற்றிருக்கும் இடத்தை எடுத்துக்காட்டுவர்.

“குறிஞ்சி நில மக்களும் முல்லை நில மக்களும் கல் விளக்குகளைப் பயன்படுத்தினர். மருத நில மக்கள் மண் விளக்குப் பயன்படுத்தினர். காலப்போக்கில் உலோகத்தால் செய்யப்பட்ட விளக்குகள் பயன்பாட்டில் வந்தன. (மேலது. பக். 33 - 41). காலப்போக்கில் இறைவழிபாட்டில் விளக்கு நீங்கா இடம் பெற்றது. பட்டினப்பாலை இறைவழிபாட்டிற்கு இரும்பு விளக்கு பயன்படுத்தியதைக் குறிப்பிடுகிறது. இரும்பு விளக்கில் திரி இட்டு விளக்கு ஏற்றியமை ‘‘இரும்பு செய் விளக்கின் ஈர்ந்திரி கொழீஇ’’ (பட்டினப்பாலை. 27) என்னும் அடியினால் அறியலாம். நீண்டிருக்கும் விளக்கின் சுடர் நெடுஞ் சுடர் என்று (மதுரைக்காஞ்சி. 556) மதுரைக்காஞ்சி தெளிவுபடுத்துகிறது. அணையாமல் நீண்ட நேரம் எரிந்து விளக்கு நந்தா விளக்கு எனப்பட்டது. அந்தி மாட்டிய நந்தா விளக்கு (பட்டினப்பாலை. 247).

விளக்கு வழிபாட்டுடன் மணமிக்க பொருள்களைக் கொண்டு புகையிட்டு வழிபாடு நடத்தியதை இலக்கியங்கள் பரக்கப் பேசுகின்றன. பரிபாடல்,

**“நெடுவேட்டு எடுத்த**
**முருகுகமழ் புகை நுழைந்த வளியும்” (பரிபாடல். 21: 50 - 52)**

என்னும் அடியினால் முருகனுக்கு மனம் நிறைந்த புகை புகைத்து வழிபட்ட முறையினை அறிய முடிகிறது. பரிபாடல் புகையும் சுடரும் ஏந்தி வழிபட்ட பார்வையினை புகைபூ ஆராதனை அழல்பல ஏந்தி (பரிபாடல். 6: 11) என்னும் சான்றால் அறியலாம். குறிஞ்சி நில மக்கள் புகை வழிபாட்டில் சிறந்து விளங்கியதையும் புகை வழிபாட்டால் மலையெங்கும் புகை நிறைந்து விளங்கியதையும் திருமுருகாற்றுப்படை பதிவு செய்துள்ளது. இதனை நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி (திருமுருகாற்றுப்படை. 235) என்னும் அடியினால் அறியலாம்.

இறை வழிபாட்டில் ஒளியும் மணப்புகையும் எவ்வாறு முக்கியத்துவம் பெற்றனவோ அவ்வாறே மங்கலப் பொருள்களும் சிறப்புப் பெற்றன. வழிபாட்டில் மஞ்சள் வெற்றிலை ஆகியன பயன்படுத்தப்பட்ட சூழல்கள் இலக்கியங்களில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. இதனை, சிறு பசு மஞ்சளுடன் நறுவிரை தெளித்து (திருமுருகாற்றுப்படை. 235), பாகு உகுத்த மஞ்சிகை (பட்டினப்பாலை. 166) என்னும் சான்றுகளின் வழி அறியலாம்.

## மனிதனின் விருப்பங்கள்

இறைவழிபாட்டில் மனிதன் தன்னுடைய மன விருப்பங்களை இறைவன் நிறைவேற்றித் தரவேண்டும் என்று கேட்பது இயற்கை. அவ்வகையில் மனிதன் இறைவனுக்கு நடத்தும் வழிபாட்டு முறைகள் யாவும் பயனை நோக்கியனவாகும். நல்வாழ்வு வேண்டுவதும் கை கூப்பி வணங்குவதும் தரையில் படிந்து வணங்குவதும் இறைவனின்

புகழ் கூறி வணங்குவதும் புகழ் கூறி வழிபடுவதும் எனப் பல்வேறு வழிபாட்டு வடிவங்களை இலக்கியங்களின் மூலம் அறிய முடிகிறது. வாழ்க்கையில் ஏற்படக்கூடிய குறைகளைப் போக்க வேண்டும் என்றும் நல்வாழ்க்கை அமைய வேண்டுமென்றும் வழிபாடு காலந்தோறும் மேற்கொள்ளப்பட்டு வந்திருக்கிறது. மலைபடுகடாம் தெய்வத்தை கை கூப்பி வணங்கியதைப் பதிவு செய்துள்ளது (மலைபடுகடாம். 360) பரிபாடல் பயன் கருதிவழிபடக்கூடிய முறையினை எடுத்துக் கூறுகிறது.

**"நின் புகழ் ஏத்தி**
**அணி நெடுங்குன்றம் பாடியும் தொழுதும்**
**அவை யாமும் எம் சுற்றமும் பரவுதும்**
**ஏம வைகல் பெருகயாம் எனவே" (பரிபாடல். 17: 48 - 53)**

பகைவர்களிடம் இருந்து காத்துக் கொள்ளவும் தீய சக்திகளில் இருந்து விடுபடவும் இறை வழிபாட்டை மேற் கொண்ட முறைமையினைப் பதிற்றுப்பத்து பதிவு செய்துள்ளது. இதனை, பகைபெரு மையில் தெய்வம் செப்ப (பதிற்றுப்பத்து. 8: 82) போருக்காகப் போர்க்களத்திற்குச் செல்லும் வீரர்கள் தங்களுக்கு வெற்றி அருள வேண்டும் என்று இறைவனை வேண்டி வழிபடும் முறையினை ஐஅமர் அடுக என அருச்சிப் போரும் (பரிபாடல். 8: 108) என்னும் அடியால் அறிய முடிகிறது. பொருள் வளம் பெற வேண்டும். திருமணம் கைகூட வேண்டும் என இறைவனை வேண்டி வழிபட்டமைக்கான சான்றுகள் காணக்கிடைக்கின்றன. செய்பொருள் வாய்க்க (பரிபாடல். 8: 107) எந்தையும் கொடுக்க

எனவேட் டேமே (ஐங்குறுநூறு. 6 - 8) திருமண நாளில் கோயில்கள் அலங்காரம் செய்யப்பட்டு மண நிகழ்வு நடைபெற்றதை அகநானூறு தெரிவிக்கிறது.

**"கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்**
**படுமணி முழவொடு பரூஉப் பணைஇமிழ**
**வதுவை மண்ணிய மகளிர்" (அகம். 136: 6 - 8)**

திருமணத்தின் பின்பு மகளிர் குழந்தை வேண்டி இறைவனை வழிபட்டதைப் பரிபாடல் தெரிவிக்கிறது. கரு வயிறு உறூக எனக் கடம்படுவோரும் (பரிபாடல். 8: 196) மகளிர் கருக்கொண்ட காலத்தில் காப்பதோடு குழந்தைப் பேறு காலத்திலும் இறைவன் துணையாக இருந்து காக்க வேண்டும் என்பதைக் கடுஞ்சூழ் மகளிர் பேணிக் கைதொழுது (மதுரைக். 609) என்னும் சான்றால் அறிய முடிகிறது. நினைத்த செயல் நினைத்தவாறு வெற்றிபெறும்போது தெய்வத்திற்குப் பல்வேறு படையல்கள் செய்து வழிபடும் முறையை,

**"பகழிடப் போக்கு நினைந்து கானவன்**
**பணம் கொடு நின்றது மலை வான் கொள்க என**
**கடவுள் ஓங்கு வரை வேண்டுமாறு கேட்டு எழுந்து**
**கிளையொடு மகிழும்" (நற். 15: 2 - 5)**

என்னும் நற்றிணை அடிகளால் அறியலாம். வழிபாட்டோடு தொடர்புடைய சடங்கின் படிநிலைகள் மனிதன் நன்மை பெறும் பொருட்டு நிகழ்த்திய சடங்குகளை அறியப்பயன்படுகின்றன.

## முடிவுகள்

- ❖ விழாக்கள் மனித நாகரிகத்தின் பண்பாட்டு வளர்ச்சியினை அறிந்துகொள்ளத் துணை புரிகின்றன.
- ❖ தமிழ்ச் சமுதாயம் பண்பட்ட சமுதாயமாக விளங்கிய காரணத்தால் பண்டைக் காலத்திலேயே விழாக்கள் திட்டமிட்ட முறையில் நடத்தப்பட்டன.
- ❖ விழாவைக் குறிக்க விழவு, சாறு, விழா முதலான சொற்கள் வழக்கில் இருந்தமையை அறிய முடிகின்றது.
- ❖ நம்பிக்கையின் அடிப்படையிலும் இறையருள் பெரும் எண்ணத்திலும் தெய்வங்களை மகிழ்ச்சிப்படுத்தும் நோக்கிலும் விழாக்கள் கொண்டாடப்பட்டன.
- ❖ இறை நம்பிக்கையின் அடிப்படையில் பண்டிகைகள் தோற்றம் பெற்றன.
- ❖ பண்டைய மக்கள் தோற்றுவித்த வழிபாட்டு முறையில் இருந்து தோன்றிய விழாக்களும் பண்டிகைகளும் அவற்றைச் சார்ந்த சடங்குகளும் தமிழ் இனத்தின் பழமையை அறிந்துகொள்ளத் துணைபுரிகின்றன.
- ❖ திணைப் பிரிவின் அடிப்படையில் மருத நிலம் நாகரிக வளர்ச்சி அடைந்ததாக இருந்த காரணத்தால் விழாக்கள் மருத நிலத்தில் தோற்றம் பெற்றன.
- ❖ விழாவை நடத்த நல்ல நாள் தெரிவு செய்யப்பட்டமை அறிய முடிகிறது.

- ❖ விழா தொடங்கும் முன்பு அதனை முறையாக அறிவிக்கும் வழக்கம் நிலவியதை அறிய முடிகிறது.
- ❖ விழாவை நடத்துவதற்கு ஏதுவான சூழல் அனைவரும் சேர்ந்து விழாவை நடத்த வேண்டிய பொறுப்பு ஆகியன எடுத்துக் கூறப்பட்டுள்ளன.
- ❖ பண்டைத் தமிழர் விழாக்களில் பழமையானதாகவும் பண்பாட்டு முறைமை நிறைந்ததாகவும் கார்த்திகை விளக்கீடு அமைந்திருக்கிறது. கார்த்திகை மாதப் பௌர்ணமி நாளில் இவ்விழா கொண்டாடப்பட்டது.
- ❖ சங்ககால விழாக்களில் பழமையான விழாவாகிய இந்திர விழா நாட்களில் பல்வேறு கலை நிகழ்ச்சிகள் நிகழ்ந்ததாக அறியப்படுகிறது.
- ❖ சங்க காலத்திலும் சங்க காலத்திற்குப் பிறகும் செல்வாக்குப் பெற்ற விழாவாக இந்திரவிழா விளங்கியது. மழை பெய்து உலகம் வளம் பெற இவ்விழா நடத்தப்பட்டது.
- ❖ தீமை நீங்கவும் நல்வாழ்வு பெறவும் நல்ல நாளில் கடலில் நீடாடுவதும் குளங்களில் நீராடுவதும் வழக்கில் இருந்தமையை அறிய முடிகிறது.
- ❖ இறை வழிபாட்டு விழாக்களுக்கு நிகராக மன்னரின் பிறந்த நாள் விழாவும் கொண்டாடப்பட்டதை இலக்கியங்கள் எடுத்துக்காட்டியுள்ளன.
- ❖ குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகப்பெருமானுக்குக் குறிஞ்சி நில மக்கள் விழா எடுத்ததையும் பல்வேறு முருக வழிபாட்டு

தளங்களில் முருகனுக்கு விழாக்கள் நடைபெற்ற செய்திகளையும் அறிய முடிகிறது.

- ❖ பண்டைக்காலத்தில் காமன் விழா சிறப்பாக நடத்தப்பட்டது. பெண்கள் தனக்கு நல்ல கணவன் வேண்டிக் காமனை வழிபாடு செய்தமை அறியப்படுகிறது.
- ❖ போர்க்காலத்தில் உணவு கொடுக்கும் விழாவாகப் பெருஞ்சோற்று விழா அமைந்திருந்தமை அறிய முடிகிறது.
- ❖ திருமாலுக்கு எடுக்கப்பட்ட விழாவாகத் திருவோண விழா அறியப்படுகிறது. பல்வேறு உணவுகளைச் சமைத்து இறைவனை வழிபட்டமையும் இவ்விழா பல்பூ விழா என்று அழைக்கப்பட்டதையும் அறிய முடிகிறது.
- ❖ வழிபாட்டின் அடிப்படையில் சடங்குகள் தோற்றம் பெற்றன. இறை வழிபாட்டுச் சடங்குகளைச் செய்வதற்கென்றே நன்றாகச் சடங்குகளை மேற்கொள்பவர்கள் இருந்ததனை அறிய முடிகிறது.
- ❖ மனித வாழ்வில் நம்பிக்கையின் அடிப்படையில் இறை வழிபாட்டுடன் சேர்த்துப் பல்வேறு சடங்குகள் மேற்கொள்ளப்பட்டன.
- ❖ கல்வி கற்கத் தொடங்கும்போது இறை வழிபாட்டுச் சடங்கினை மேற்கொள்வது வழக்கிலிருந்தது.
- ❖ இறை வழிபாட்டின் அடிப்படையில் பெண்கள் நல்ல வாழ்க்கை வேண்டித் தை நீராடல் நடத்தியதை இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன.

❖ தீய சக்திகளில் இருந்து காத்துக் கொள்வதற்கும் பாதுகாப்பாக இருப்பதற்கும் கட்டு கழங்கு முதலான நிகழ்வுகள் கடைப்பிடிக்கப்பட்டன.

❖ திருமணக் காலத்தில் திருமண நிகழ்வு நன்றாக நிகழ வேண்டுமென்று கருதிச் சடங்குகள் மேற்கொள்ளப்பட்டன.

❖ தெய்வத்திற்கு உணவு படைத்தல் அலங்காரம் செய்தல் பலியிடுதல் முதலான நிகழ்வுகள் அனைத்தும் பயன் கருதி மேற்கொள்ளப்பட்டன.

❖ பண்டைத் தமிழர்களின் விழாக்களும் சடங்குகளும் தமிழகத்தின் வழிபாடு சார்ந்த வழக்குகளை அறிந்துகொள்வதற்குப் பயன்படுகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. பொன்னி. தமிழகத் திருவிழாக்கள், ப. 5.
2. க. காந்தி. தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 52.
3. அகம். 15: 1.
4. கலி. 83: 14.
5. குறுந். 41: 1 – 2.
6. சாமி சிதம்பரனார். பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப. 71.
7. The Random house Dictionary of the English language, p. 24.
8. க. காந்தி. முற்குறித்த நூல், பக். 53 – 54.
9. தொல். பொருள். அகத். 5.
10. க. காந்தி, மு. கு. நூ. ப.
11. மேலது. ப. 59.
12. சிலம்பு. 5: 145 – 146.
13. www. wikipeadia. com.
14. மேலது.
15. மேலது.
16. மேலது.
17. க. காந்தி, மு. கு. நூ. ப. 75.
18. A Classical Dictionary of Hindu mythology and Religion, p. 5.
19. மணி. 7: 16 – 18; 5: 94 – 95; 2: 1 – 3; 1: 26 – 38 சிலம்பு. 6: 3 – 6; 6: 72 – 73.
20. சிலம்பு. 5: 64 – 67.
21. மணி. 1: 5 – 9.
22. மேலது. 1: 32 – 35.
23. தர்மச்சக்கரம், சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துகள் (கட்), ஆதி பாலசுந்தரன் (க. ஆ), ப. 115.
24. புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண், 20 – 24.
25. தொல். பொருள். 88: 7 – 8.

26. புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண், 20.
27. மேலது. 21.
28. மேலது. 22.
29. மேலது. 23.
30. சிலம்பு. 27: 40 – 44.
31. தொல். பொருள். நச்சர் உரை. ப. 285.
32. www. wikipeadia. com.
33. சிலம்பு. 4: 82 – 84.
34. க. காந்தி, மு. கு. நூ. ப.
35. www. wikipeadia. com.
36. எஸ். இராமச்சந்திரன், காமவேள் விழவு (இணையக் கட்டுரை).
37. மணி. 20: 89 – 93.
38. சிலம்பு. 11: 1 – 2.
39. க. காந்தி, மு. கு. நூ. பக். 80 – 81.
40. தொல். பொருள். வஞ்சி. 65.
41. உ. வே. சாமிநாதையர், புறநானூறு, ப. 654.
42. மு. இராகவையங்கார், கட்டுரை மணிகள், ப. 29.
43. க. காந்தி, மு. கு. நூ. ப. 71.
44. மேலது. ப. 232.
45. மேலது. ப. 51.
46. மேலது. ப. 52.
47. மு. சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும். ப. 233.
48. குறள். 400.
49. மு. சண்முகம்பிள்ளை, மு. கு. நூ. ப. 243.
50. மேலது. ப. 250.
51. மேலது. ப. 250.

# முடிவுரை

**சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்** என்னும் தலைப்பிலான முனைவர் பட்ட ஆய்வில் கண்டறிந்த முடிவுகள் பின்வருமாறு தொகுத்து உரைக்கப்படுகின்றன.

சங்க காலத்தில் படைக்கப்பட்ட பழந்தமிழ் இலக்கிய நூல்கள் சங்க இலக்கியங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இவ்விலக்கியங்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ்ச் சமுதாயத்தின் வாழ்க்கை முறை, பண்பாடு, நாகரிகம், விழாக்கள், வழிபாட்டு முறைகள், நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள் முதலியவற்றை அறிந்துகொள்ளப் பயன்படுகின்றன. அவ்வகையில் பண்டைய தமிழர்களின் வழிபாடு வழிபாட்டு முறைகள் ஆகியவற்றை அறிந்துகொள்ளச் சங்க இலக்கியங்கள் பேருதவி புரிகின்றன.

இயற்கையின் பேராற்றலைக் கண்டு அச்சம் கொண்ட மனிதன் இயற்கையை வணங்கத் தொடங்கியதன் காரணமாக இறைவழிபாடு தோற்றம் பெற்றது. இடி, மழை, மின்னல், வெள்ளப்பெருக்கு முதலானவற்றைக் கண்டு அச்சம் கொண்ட மனிதன் இயற்கையை வழிபடுவதன் மூலமாகத் தமக்கு வரும் துன்பங்களைப் போக்கிக்கொள்ள முடியும் என்று கருதினான். தமக்குத் தெரிந்த முறையில் இயற்கையை வழிபடத் தொடங்கினான். இயற்கையால் தோற்றுவிக்கப்பட்ட மலை, குன்றுகள், பாறைகள் ஆகியவை தெய்வீக சக்தி பொருந்தியவை என்னும் எண்ணம் மனிதனின்

மனத்தில் எழுந்த காரணத்தால், மலைகளில் தெய்வங்கள் உறைவதாக நம்பி வழிபடத் தொடங்கியதால் மலை வழிபாடு தோற்றம் பெற்றது. மலையைச் சார்ந்த காடுகள் சோலைகள் மலைச்சாரல் முதலிய இடங்கள் வழிபாட்டுக்கு உரியனவாக இருந்தன. மக்கள் தாம் கண்டு அச்சம் கொண்ட அனைத்தையும் வழிபடுவதை நோக்கமாகக் கொண்டனர். வழிபாடு சூரிய வழிபாடு, சந்திர வழிபாடு முதலிய வழிபாட்டு முறைகள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை முறையில் பண்டைக்காலத்தில் வழக்கில் இருந்ததைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக்காட்டியுள்ளன. இயற்கை வழிபாடு தமிழ்ச் சமுதாயத்தின் தொன்மையான வழிபாடு என்பதையும் இயற்கை வழிபாட்டில் இருந்தே இன்றைய பண்பட்ட வழிபாட்டு முறை தோன்றியது என்பதை அறிந்துகொள்ளவும் சங்க இலக்கியங்கள் புதுமைக்கும் பழமைக்கும் பாலமாக அமைகின்றன. அச்சத்தின் காரணமாக சூர், அணங்கு முதலான வழிபாட்டு முறைகளும் வழக்கில் இருந்தமையை சங்க இலக்கியங்கள் காட்டியுள்ளன.

இயற்கையின் போற்றலைக் கண்டு வழிபட்ட மனிதன் சூரியன், சந்திரன், நாள்மீன், கோள்மீன், சூரிய, சந்திர ஒளி மறைப்பு ஆகியவற்றைத் தன்னுடைய நுண்ணறிவினால் பகுத்தாய்ந்து வழிபட்டமையை அறிய முடிகிறது. குறிப்பாக வானவியலில் பேரறிவு பெற்று விளங்கிய தமிழர்கள் சூரியனுடைய சுழற்சி, சந்திரனின் சுழற்சி, கோள்கள் மாறும் காலம், நன்மை தரத்தக்க, தீமை தரத்தக்க நட்சத்திரங்கள் தோன்றக்கூடிய காலம், அவற்றால் விளையக்கூடிய

துன்பங்கள், நன்மைகள், உலகில் ஏற்படக்கூடிய மாற்றங்கள் முதலியவற்றை நுட்பமாக அறிந்திருந்தனர். இயற்கை ஒளி படைத்த சூரியன் மற்றும் சந்திரன் ஆகியவற்றிடம் இருந்து அருள்பெறும் நோக்கில் அவற்றுக்கு வழிபாடு ஆற்றிய தன்மையினை இலக்கியங்கள் எடுத்துக்காட்டியுள்ளன. பண்டைத் தமிழர்களின் இயற்கை வழிபாட்டு முறை இறைவழிபாட்டின் அடிப்படையாக அமைந்தாலும் வழிபாடு செம்மையான உருவை அடைவதற்குச் சங்க கால வழிபாட்டு முறை உதவியிருப்பது அறியத்தக்கது.

பண்டைத் தமிழர்களின் வழிபாட்டு முறையில் இயற்கை வழிபாட்டின் பின்பு திணைகளின் அடிப்படையில் இறைவழிபாடு கட்டமைக்கப்பட்டது. இயற்கையோடு இயைந்த வாழ்க்கை வாழ்ந்த மக்கள் அந்தந்த நிலத்துக்குரிய தெய்வத்தை வழிபட்டமைக்குத் தொல்காப்பியம் முதன்மையான சான்றாகிறது. முல்லைக்கு மாயோனும் குறிஞ்சிக்குச் சேயோனும் மருதத்திற்கு இந்திரனும் நெய்தலுக்கு வருணனும் தெய்வங்களாக இருந்தமையை இலக்கியங்களும் இலக்கணங்களும் பறைசாற்றுகின்றன. முல்லை நில மக்களின் கடவுளாகத் திருமால் இருந்த போதும் சங்க இலக்கியங்களில் புராணம் சார்ந்த செய்திகள் இடம்பெற்றுள்ளன. குறிப்பாகக் கலித்தொகை, பரிபாடல் முதலான இலக்கியங்கள் திருமால் குறித்த தொன்மங்களை எடுத்துக் கூறியுள்ள காரணத்தால் திருமால் வழிபாடு பண்டைக்காலத்தில் செல்வாக்கோடு விளங்கியமை அறிய முடிகிறது.

குறிஞ்சி நில மக்களின் தெய்வமான சேயோன் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குரவர்களாலும் பிற மக்களாலும் வழிபடப்பட்ட முறையும் வேலனின் வழிபாட்டின் போது நிகழ்த்தப்பட்ட வழிபாட்டு முறைகளும் சேயோன் என்னும் தொன்மத்தின் பழமையினை வலியுறுத்துவனவாக உள்ளன. குறிஞ்சி நிலத்துக்குரிய இயற்கைச் சூழலோடு முருக வழிபாடு காட்டப்பட்டாலும் திருமுருகாற்றுப்படையில் முருக வழிபாட்டின் வளர்ச்சி நிலையை அறிய முடிகிறது. சங்க காலத்தில் இந்திர வழிபாடு சிறப்புற்று விளங்கியதையும் இந்திரவிழா எடுக்கப்பட்டதையும் இலக்கியங்கள் அறிவிக்கின்றன. வருணன் வழிபாடு கடற்கரை சார்ந்த பகுதிகளில் மேற்கொள்ளப்பட்டது. ஒவ்வொரு நிலத்துக்கும் உரிய வழிபாட்டு முறைகள் அங்கு வாழ்ந்த மக்களுடைய பண்பாட்டு முறைமைகளை ஒட்டி அமைந்தன. சங்க காலத்தில் வழக்கிலிருந்த வழிபாட்டு முறை இயற்கை வழிபாட்டின் தொடர்ச்சியாக அமைந்து நிலையான வழிபாட்டுமுறை அமைவதற்கு வழி ஏற்படுத்திக் கொடுத்த செய்தியை இலக்கியங்கள் அறிவிக்கின்றன.

திணைநிலைத் தெய்வ வழிபாட்டைத் தொடர்ந்து சங்க இலக்கியங்களில் சிவ வழிபாடு பெரும்பான்மையாகப் பேசப்பட்டிருக்கிறது. சிவனின் கைலாயக் காட்சி, உமையோடு சேர்ந்த காட்சி ஆகியன விளக்கப்பட்டுள்ளன. குறிப்பாகச் சிவனின் உருக்காட்சி விடமுண்டமை முப்புரம் எரித்த நிகழ்வு ராவணனின் ஆணவம் அழித்தமை முதலான செய்திகள் பேசப்பட்டுள்ளன. சிவன் குறித்த வழிபாட்டு செய்திகளில் சிவனுக்குரிய தொன்மங்கள்

பரவலாகப் பேசப்பட்டுள்ளன. இலக்கியங்களில் பேசப்பட்டுள்ள சிவனின் சடையோடு கூடிய தோற்றம் சடையில் கங்கையைத் தாங்கிய தோறாம் நீறு பூசிய தோற்றம் முதலான செய்திகள் சங்க காலத்திற்கு முன்பே தமிழகத்தில் சிறப்புற விளங்கியிருக்க வேண்டும் என்பதையே தெளிவுபடுத்துகின்றன.

பெருந்தெய்வ வழிபாட்டு முறை வழக்கில் இருந்த சங்க காலத்தில் கொற்றவை பழையோள் என்றும் அழைக்கப்பட்டமையினைத் திருமுருகாற்றுப்படை தெளிவுபடுத்துகிறது. சங்க காலத்திலும் அதனைத் தொடர்ந்த காலத்திலும் கொற்றவை வழிபாடு பெரும் செல்வாக்குடன் விளங்கியமைக்குப் புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை ஆகிய நூல்கள் தெளிவுபடுத்தியுள்ளன. நிலத்துக்கு உரியவர் கொற்றவை என்பதையும் அவளுடைய பரிவாரங்களாகப் பேய், பூதங்கள் விளங்கியமையினையும் இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன.

பண்டைய மக்கள் வீடுகளிலும் தெய்வம் உறைவதாக நம்பியதன் காரணமாகத் தங்கள் வீடுகளிலும் முறையான தெய்வ வழிபாட்டினை மேற்கொண்டனர். அதற்காக வீடுகளை முறையாகப் பராமரித்ததுடன் மாலைக்கால வழிபாடு விழாக்கால வழிபாடு ஆகியவற்றை முறையாக நடத்தியிருக்கின்றனர். இல்லுறை தெய்வ வழிபாட்டில் நெல்லும், மலரும் வழிபாட்டிற்குரிய பொருள்களாகப் பயன்படுத்தப்பட்டன. இறந்த முன்னோர்களின் ஆன்மா அமைதி அடையும் பொருட்டு ஆண்டுதோறும் வழிபாடு நடத்தப்பட்டதையும்

உணவாகப் பிண்டம் படைக்கப்பட்டதையும் இலக்கியங்கள் விளக்கியுள்ள காரணத்தால் முன்னோர் வழிபாடு தொன்றுதொட்டு வருவது என்பதை இலக்கியச் சான்றுகள் வலியுறுத்துகின்றன.

மன்னனுக்குரிய அடையாள மரமாகிய காவல் மரம் மானத்தின் சின்னமாகவும் அம் மரத்தில் தெய்வம் உறைவதாகவும் எண்ணி வழிபாட்டுக்குரியதாகப் போற்றப்பட்டது. மக்கள் பயன்படுத்திய யாழ், முரசு ஆகியவற்றுக்கும் முறையாக வழிபாடு நடத்தப்பட்ட காரணத்தால் பயன்படுத்தும் பொருள்களை மதிக்கும் பண்பும் வழிபடும் பண்பும் காலந்தோறும் இருந்தமையை அறிய முடிகிறது. கடல் தெய்வ வழிபாடு பரதவர்களால் மேற்கொள்ளப்பட்டது. தாம் அறிந்த முறையில் அவர்கள் வருணன் வழிபாட்டை மேற்கொண்டமைக்கு இலக்கியங்கள் சான்றாகின்றன. பேய்கள், பூதங்கள் மீது மக்கள் கொண்ட நம்பிக்கை அவற்றுக்கு பலி கொடுப்பதால் அறியப்படுகிறது. தீய சக்திகளிடமிருந்து தங்களைக் காத்துக்கொள்ள விரும்பிய மக்கள் அவற்றுக்குப் பலி கொடுத்துத் தங்களுடைய துன்பங்களைப் போக்கிக் கொண்டனர்.

சங்க கால வழிபாட்டு முறையில் விழாக்களும் சடங்குகளும் தெய்வ வழிபாட்டோடு இணைந்திருந்தன. வழிபாடுகளை மேற்கொள்வதற்கும் சடங்குகளை மேற்கொள்வதற்கும் முறையான செயல்பாடுகள் கடைப்பிடிக்கப்பட்டமையைப் பண்டைய விழாக்களும், சடங்குகளும் அறிவிக்கின்றன. விழாக்களை முறையாகத் திட்டமிடுதல் ஊர் மக்களுக்கு அறிவித்தல் நடைபெறும்

காலத்தை முடிவு செய்தல் நகரை அழகுபடுத்துதல் வளமும் நலமும் பெருக இறைவனை வேண்டுதல் முதலியன விழாக்களின் நோக்கங்களாக இருந்தன.

பண்டைக்காலத்தில் கார்த்திகை விழா, இந்திர விழா, நீராடல் விழா, பெருமங்கலம் என்னும் மன்னன் பிறந்தநாள் விழா, காமன் விழா, பெருஞ்சோற்று விழா, திருவோண விழா ஆகியவை பழமையான பண்பாட்டு மரபின் அடிப்படையில் நடத்தப்பட்டிருக்கின்றன. சடங்குகள் வாழ்வியல் சடங்குகள் ஆகவும் இறைவழிபாட்டின் அடிப்படையிலும் பண்டிகைகளின் அடிப்படையிலும் அமைந்தன. வாழ்வியல் சடங்குகள் மரபு முறைகளைப் பின்பற்றித் தெய்வ அருளைப் பெற வேண்டும் என்னும் நோக்கத்துடன் நிகழ்த்தப்பட்டன. பண்டைய சடங்கு முறைமைகள் வாழ்க்கையோடு இயைந்ததாக இருந்தன. கல்வி கற்றல், கட்டு கழங்கு, நீராடல், திருமணம் முதலான சடங்குகள் பழமையான மரபு முறைமாறாமல் மக்களால் கடைப்பிடிக்கப்பட்டன.

பண்டைக்கால வழிபாட்டு முறைகள் சடங்குகள் ஆகியவை திட்டமிட்ட முறையில் நடத்தப்பட்டிருக்கின்றன. இயற்கை வழிபாடு நடுகல் வழிபாடு உருவ வழிபாடு வழிபாட்டு முறைகள் திருவிழாக்கள் சடங்குகள் என்னும் தெய்வ வழிபாட்டின் படிநிலைகள் வழிபாட்டு முறைகளை அறிந்துகொள்ளத் துணைபுரிகின்றன.

## மேலாய்வு களங்கள்

**சங்க இலக்கியத்தில் வழிபாட்டு முறைகள்** என்னும் முனைவர் பட்ட ஆய்வின் தொடர்ச்சியாக ஆய்வாளர்கள் சங்க இலக்கியங்களில் வழிபாட்டு உளவியல், சங்க காலம் தற்காலம் வழிபாடும் மரபும் மாற்றமும், சங்ககால விழா மரபு என்னும் தலைப்புகளை ஆய்வாக நிகழ்த்துவதற்கு வாய்ப்புகள் உள்ளன.

## துணைநூற் பட்டியல்


இராகவன். அ. - தமிழ்நாட்டுத் திருவிளக்குகள் சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி. லிமிட்), 1964.

இராகவையங்கார். மு. - கட்டுரைமணிகள் நாராயணயங்கார் எம்.ஆர் (பதி), மானாமதுரை. (ப. ஆ. இ)

இராமச்சந்திரன் சுப. - காமவேள் விழவு; சங்க காலத்தில் காதலர் தினம், தென்னிந்திய சமூக வரலாற்று ஆய்வு நிறுவனம்.

இலக்குவனார். சி. - சங்க இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் புதுக்கோட்டை, வள்ளுவர் பதிப்பகம். (ப. ஆ. இ)

இளம்பூரணர் (உ. ஆ) - தொல்காப்பியம் பொருளதிகாரம் சென்னை, கழக வெளியீடு, 1967.

இளம்பூரணர் (உ. ஆ) - தொல்காப்பியம்
பொருளதிகாரம்
சென்னை, கழக வெளியீடு,1969.

கதிரைவேல்பிள்ளை. நா. - தமிழ்மொழி அகராதி
புதுதில்லி,
ஏசியன் எஜீகேசனல் சர்வீஸ், 1992.

கதிர்முருகு (உ. ஆ) - பத்துப்பாட்டு
சென்னை, சாரதா
பதிப்பகம், 2009.

கதிர்முருகு (உ. ஆ) - புறப்பொருள் வெண்பாமாலை
சென்னை,
சாரதா பதிப்பகம், 2009.

காசிநாதன். நடன - தமிழர் தெய்வங்கள்
சென்னை,
தென்றல் நிலையம், 2003.

காந்தி. க. - தமிழர் பழக்க
வழக்கங்களும் நம்பிக்கைகளும்
சென்னை,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், 1980.

குழந்தை (உ. ஆ) - தொல்காப்பியம்
பொருளதிகாரம்
ஈரோடு, வேலா பதிப்பகம், 1968.

குழந்தை புலவர் - தொல்காப்பியர் காலத் தமிழர்
சென்னை, பாரி நிலையம், 1968.

கைலாசபதி. க. - பண்டைத்தமிழர் வாழ்வும்
வழிபாடும்
சென்னை, பாரி நிலையம்,
1978.

சண்முகம்பிள்ளை. மு. - சங்கத்தமிழர் வாழ்வியல்
சென்னை,
உலகத்தமிழாராய்ச்சி
நிறுவனம், 2006.

சாமி. பி. எல். - தமிழ் இலக்கியத்தில்
தாய்த்தெய்வ வழிபாடு
சென்னை, என். சி. பி. எச்,
1978.

சாமிநாதையர் உ. வே (பதி) - புறநானூறு
சென்னை,
உ. வே. சா நூல் நிலையம், 1971.

சாமிநாதையர் உ. வே - குறுந்தொகை
சென்னை,
உ. வே. சா நூல் நிலையம், 1947.

சாமிநாதையர் உ. வே (பதி) - மணிமேகலை
சென்னை, 2006.

சிங்காரவேலு முதலியார் - அபிதான சிந்தாமணி
புதுதில்லி,
ஏசியன் எஜீகேசனல் சர்வீஸ், 1994.

சிதம்பரனா. சாமி. - பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்
சென்னை,
இலக்கிய நிலையம், 1988.

சீனிவாசன். ஆர். - நாம் வணங்கும் தெய்வங்கள்
சென்னை,
இளங்கோ பதிப்பகம், (ப.ஆ. இ)

சுப்பிரமணியபிள்ளை. கா. - தமிழர் சமயம்
சென்னை, பாரி நிலையம், 2010.

சோமசுந்தரம். பொ.வே. - ஐங்குறுநூறு
சென்னை, கழக வெளியீடு 1972.

சோமசுந்தரம். பொ.வே. - அகநானூறு
(மணிமிடைப்பவளம்,
நித்திலக்கோவை)
சென்னை, கழக வெளியீடு,1974.

சோமசுந்தரம். பொ.வே. - பரிபாடல்
சென்னை, கழக வெளியீடு
1975.

சோமசுந்தரம். பொ.வே. - அகநானூறு
(களிற்றுயானை நிரை)
சென்னை, கழக வெளியீடு, 1981

தங்கராசு. ம (பதி) - நாட்டுப்புறத் தெய்வங்கள்
அண்ணாமலைப்
பல்கலைக்கழகம், 2005.

தங்கராசு. ம (பதி) - இறைவழிபாடு
அண்ணாமலைப்
பல்கலைக்கழகம், 2005.

தட்சிணாமூர்த்தி. அ. - தமிழர் நாகரிகமும்
பண்பாடும்
சென்னை,
கழக வெளியீடு, 1994.

துரைசாமிபிள்ளை ஐவை. சு. - பதிற்றுப்பத்து
சென்னை, கழக வெளியீடு
1981.

நச்சினார்க்கினியர் (உ. ஆ) - பத்துப்பாட்டு
சென்னை,
உ.வே.சா. நூல் நிலையம், 1974.

நச்சினார்க்கினியர் (உ. ஆ) - கலித்தொகை
சென்னை, கழக வெளியீடு
1967.

நாராயணசாமி அய்யங்கார்,
பின்னத்தூர் - நற்றிணை
சென்னை, கழக வெளியீடு
1952.

பக்தவச்சலபாரதி. சீ. - பண்பாட்டு மானுடவியல்
சென்னை,
மணிவாசகர் பதிப்பகம்,
1980.

பாலுசாமி. நா (பதி). - வாழ்வியல் களஞ்சியம்
(தொகுதி. 4)
தஞ்சாவூர்,
தமிழ்ப்பல்கலைக் கழகம், 1953.

| | | |
|---|---|---|
| பொன்னி | - | தமிழகத் திருவிழாக்கள்<br>சென்னை,<br>வசந்தா பிரசுரம், 1989. |
| முத்துப்பிள்ளை. சி. | - | இந்திய ஆலயங்கள்<br>சென்னை,<br>தமிழர் நிலையம், 1993. |
| ராசரெத்தினம். கு. | - | சங்க இலக்கியத்தில்<br>பொதுமக்கள்<br>சென்னை,<br>நாம் தமிழர் பதிப்பகம், 2011. |
| வானமாமலை. நா. | - | தமிழர் பண்பாடும் தத்துவமும்<br>சென்னை, நியூ செஞ்சுரி புக்<br>ஹவுஸ் (பி. லிட்), 1973. |
| விக்டர் ம. கோ. | - | தொல்காப்பியச் சிந்தனைகள்<br>சென்னை,<br>தி பார்க்கர் பதிப்பகம். (ப.ஆ. இ) |
| வித்தியானந்தன். சு. | - | தமிழர் சால்பு<br>சென்னை, பாரி நிலையம், 1971. |

வேங்கடசாமி நாட்டார்,
துரைசாமிபிள்ளை. ஒளவை - மணிமேகலை
சென்னை,
சாரதா பதிப்பகம், 2007.

வேங்கடசாமி
நாட்டார். ந. மு. - கார் நாற்பது
களவழி நாற்பது
சென்னை, சாரதா பதிப்பகம், 2005.

ஜானகி ரங்கா - இந்தியநாட்டு திருவிழாக்கள்
சென்னை, சகுந்தலை நிலையம், 2001.

**ஆங்கில நூல்கள்**

John Dowson - A Classical Dictionary of Hindu Mythology and Religion
New Delhi, Manu Publication,
1978.

Narayanan. C. V. - Origin and Early History of Saivam in South India
Chennai, University of Madras,
1936.

Neelakandashasthri. K. A. - History of South India

Oxford University Press, 1966.

………… - The Random house Dictionary of English language

Newyork, The unabridged Edition,

1967.

பின்னிணைப்பு - 1

## 1. இயற்கை வழிபாட்டுச் சான்றுகள்

1. அருந்தெறல் மரபின் கடவுள் காப்ப
பெருந்தேன் தூங்கும் நாடுகாண் நனந்தலை
அணங்குடை வரைப்பின் பாழ் ஆங்கண் (அகம். 372 : 1 - 3)

2. ஈர்ந்தண் சிலம்பின் இருள்தூங்கு நளிமுழை
அருந்திறல் கடவுள் காக்கும் உயர்சிமை
பெருங்கல் நாடன் பேகனும் (புறம். 158: 10 - 12)

3. அணையது அன்று அவன் மலைமிசை நாடே
நிரையிதழ்க் குவளை கடிவீ தொடினும்
வரையர மகளிர் இருக்கை காணினும்
உயிர்செல வெம்பிப் பனித்தலும் உரியர்
பல நாள் நில்லாது நிலநாடு படர்மின் (மலைபடு. 188 - 192)

4. வரையர மகளிரின் சாஅய் விழைதக
விண்பொரும் சென்னிக் கிளைஇய காந்தள்
தண்கமழ் அலரிதாஅல் நன்பல
வம்புவிரி களத்தின் கவின்பெறப் பொலிந்த
குன்று கெழு நாடன் (குறிஞ். 195 - 199)

5. மனம் கமழ் நாற்றத்த மலைநின்று பலி பெறூஉம்
அணங்கு என அஞ்சுவர் சிறுகுடியோரே (கலி. 52: 9 - 10)

6. **அணங்கொடு நின்றது மலை வான்கொள்கெனக்**
**கடவுள் செங்கு வரை வேண்மார் வேட்டு எழுந்து**
**கிளையொடு மகிழும் குன்ற நாடன்** (நற். 165: 3 - 5)

7. **தேந்தேர் சுவைய திரளரை மாஅத்து**
**கோடைக்கு ஊழ்த்த கமழ் நறுந்தீம்கனி**
**பயிர்ப்புறப் பலவின் எதிர்ச்சுனை அளைகு**
**இறாலொடு கலந்த வண்டுமூசு அரியல்**
**நெடுங்கண் கடமை பழூநி கடுந்திறல்,**
**பாம்புக் கடுப்பன்ன தோப்பி வான்கோட்டுக்**
**கடவுள் ஓங்கி வரைக்கு ஒச்சி குறவ**
**முறித்தழை மகளிர் மடுப்ப மாந்தி**
**அடுக்கல் ஏனல இரும்புனம் மறுத்துழி** (அகம். 348: 2 - 10)

8. **வரை உறை தெய்வம் உவப்ப உவந்து**
**குரவை தழீஇ யாமாட குரவையுள்**
**கொண்டு நிலை பாடிக்காண்** (கலி. 39: 27 - 29)

9. **பெடைமயி லுருவின் பெருந்தகு பாடினி**
**பாடின பாணிக்கு ஏற்ப நாள்தோறும்**
**களிறு வழங்கு அதிர கானத்தல்கி**
**இலையில மராஅத்த எவ்வந்தாங்கி**
**வலைவலந் தன்ன மெல்நிழல் மருங்கில்**
**காடுறை கடவுள் கடன்கழிப்பிய பின்றை** (பொருந. 47 - 52)

10. **ஏறுதம் கோலம்செய் மருப்பினால் தோண்டிய**
**ஞாலம் கொண்டு எழூஉம் மருந்தின் வாய்வழீஇ**

**மாலைபோல் தூங்கும் சினை** (கலி. 106)

11. **நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து**
**உடுபலி அருந்திய தொகுவிரற் காக்கை**
**புன்கண் அந்தி கிளைவயின் செறிய** (நற். 343: 4 - 6)

12. **தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்**
**கொழுப்புஆ எறிந்து குருதி தூஉய்**
**புலவுப் புழுக்கு உண்ட வான்கண் அகலறை** (அகம்.309:4 - 6)

13. **கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கி**
**கடுஞ்சூழ் தருகுவன் நினக்கே** (அகம். 110: 4 - 5)

14. **பெருங்கடற் தெய்வம் நீர்நோக்கித் தெளித்தென**
**திருந்திழை மென்றோள் மறைந்தவன்** (கலி. 131: 1 - 2)

15. **சினைச் சுறவின் கோடு நட்டு**
**மனைச் சேர்த்திய வல்லணங்கினான்** (பட்டினப். 86 - 87)

16. **அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி**
**யாயும் ஆயமொடு அலரும்** (அகம். 240: 8 - 9)

17. **வினை கவில் யானை விறற்போர்ப் பாண்டியன்**
**புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்றுறை**
**அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து**
**தழை அணிப் பொலிந்த கோடேந்து அல்குல்**
**பழையர் மகளிர் பனித்துறை பரவ** (அகம். 201: 3 - 7)

18. **………. ஞாழல்**

**வண்டுபடத் ததைந்த கண்ணி நெய்தல்**

**தண்ணறும் பைந்தார் துயில்வர அந்தி**

**கடல்கெழு செல்வி கரைநின் றாங்கு** (அகம். 270: 9 - 12)

19. **கள்ளும் கண்ணியும் கையுறையாக**

**நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅல்**

**நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி** (அகம்.156:13 - 18)

20. **உருவும் சூரும் இரைதேர் அரவமும்**

**ஒருங்கிருங் குட்டத்து அருஞ்சுழி வழங்கும்**

**கொடுந்தாள் முதலையும் இடங்கரும் கராமும்**

**நூழிலும் இழுக்கும் ஊழடி முட்டமும்**

**பழுவும் பாந்தளும் உளப்படப் பிறவும்**

**வழுவின் வழாஅ விழுமடம் அவர்**

**சூழுமலை விடரகம் உடைய வால் எனவே** (குறிஞ்சி. 255 - 261)

21. **வாடல கொல்லோ தாமே – அவன் மலைப்**

**போருடை வருடையும் பாயா**

**சூருடை அடுக்கத் கொயற்கு அருந்தழையே** (நற். 359: 7 - 9)

22. **எக்கர் நண்ணிய எம்மூர் வியன்றுறை**

**நேரிறை முன்கை பற்றி**

**சூரர மகளிரொடு உற்ற றுளே** (குறுந். 53: 5 - 7)

23. **ஆஅய் நல்நாட்டு அணங்குடைச் சிலம்பில்**

**கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்**

ஏர்மலர் நிறைசுனை உறையும்
சூர்மகள் மாதோ (அகம். 198: 14 - 17)

24. கடவுட் கற்சுனை அடையிறந்து அவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தட்
குருதி ஒண்பூ உருகெழக் கூட்டி
பெருவரை அடுக்கம் பொற்பச் சூர்மகள்
அருவி இன்னியத் தாடும் நாடன் (நற். 34: 1 - 5)

25. மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடி
கணைக்கால் வாங்கிய நுசுப்பின் பணைத்தோள்
கோபத் தன்ன தோலாப் பூந்துகில்
பல்காசு நிரைத்த சில்கா சல்குல்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை விரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனி
……………………………
சூரர மகளி ராடுஞ் சோலை (திருமுருகு. 12 - 41)

26. தண்கதிர் மதியம் போலவும்
ஒண்சுடர் ஞாயிறு போலவும்
மன்னிய பெரும நிலமிசை யானே (புறம். 6: 27 - 29)

27. செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்
வெண் திங்களும் வெயில் வேண்டினும்
வேண்டியது விளைக்கும் ஆற்றலை (புறம். 38: 7 - 9)

28. **திங்கள் அன்ன வெண்குடை**
**ஒண் ஞாயிறு அன்னோன் புகழ் மாயலவே** (புறம். 231: 5-6)

29. **கடந்தடு தானை சேர லாதனை**
**யாங்கணம் ஒத்தியோ வீங்கு செலல் மண்டிலம்**
**பொழுதென வரைதி புறக்கொடுத்து இறத்தி**
**மாறி வருதி மலை மறைந்து ஒளித்தி**
**அகலிரு விசும்பினானும்**
**பகல் விளங்குதியால் பல்கதிர் விரித்தே** (புறம். 8: 5 - 10)

30. **ஒரு கால் ஊர்திப் பருதிஅம் செல்வன்** (அகம். 362: 2)

31. **நிரை செலல் இவுளி கடைஇ**
**அகலிரு விசும்பில் பகல்செலச் சென்று**
**மழுசுடர் மண்டிலம் மாமலை மறைய** (அகம். 363: 1 - 3)

32. **நல்லிறைவன் பொருள் காக்கும்**
**தொல்லிசைத் தொழில் மக்கள்**
**காய்சினத்த கதிர்ச் செல்வன்**
**தேர்பூண்ட மாஅபோல**
**வைகல் தொறும் அசைவின்றி**
**உல்கு செயக் குறைபடாது** (பட்டினப். 120 - 125)

33. **புல் இருள் வாடிய புலம்புசேண் அகல**
**பாயிருள் நீங்க பல்கதிர் பரப்பி**
**ஞாயிறு குணமுதல் தோன்றிய அங்கு** (பதிற். 59: 4 - 6)

34. **உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**
**பலர் புகழ் ஞாயிறு கடல்கண் டாங்கு** (திருமுருகு. 1 - 2)

35. **பாயிருள் நீங்கப்பகல் செய்யா எழுதரு**
**ஞாயிறு அன்ன அவன் வசையில் சிறப்பும்** (மலைபடு.84-85)

36. **பாழ்ஊர் நெருஞ்சிப் பசலை வான்பூ**
**ஏர்தரு சுடரின் எதிர்கொண் டாஅங்கு** (புறம். 155: 4 - 5)

37. **பயம்கெழு திருவின் பல்கதிர் ஞாயிறு**
**வயங்குதொழில் தரீஇயர் வலனேர்பு விளங்கி**
**மல்குகடல் தோன்றியாங்கு** (அகம். 298: 1 - 3)

38. **………….. நம் இடை முலைச்**
**சுணங்கணி முற்றத் தாரம் போலவும்**
**சிலம்புநீடு சோலைச் சிதர்தூங்கு நளிப்பின்**
**இலங்கு வெள்ளருவி போலவும்**
**நிலங் கொண்டனவால் திங்களும் கதிரே** (அகம்.362: 11- 15)

39. **தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்**
**மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்**
**அறியா தோரையும் அறியக் காட்டித்**
**திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து** (புறம். 27: 11 - 14)

40. **குடமுதல் தோன்றிய தொன்றுதொழு பிறையின்**
**வழிவழி சிறக்கநின் வலம்படு கொற்றம்** (மதுரைக்.193- 194)

41. ……….. **பலர்தொழ**
**செவ்வாய் வானத்து ஐயெனத் தோன்றி**
**இன்னாப் பிறந்தன்று பிறையே** (குறுந். 307: 1 - 3)

42. **உவவுத் தலைவந்த பெருநாள் அமையத்து**
**இருசுடர் தம்முள் நோக்கி ஒருசுடர்**
**புண்கண் மாலை மலைமறைந் தாங்கு** (புறம். 65: 6 - 8)

43. **பாஅல் நின்று கதிர்சோரும்**
**வானுறையும் மதிபோலும்**
**மாலை வெண்குடை நீழலான்** (புறம். 22: 10 - 12)

44. **ஆம் நாள் நிறைமதி அலர்தரு பக்கம்போல்**
**நாளின் நாளின் நளிவரைச் சிலம்புதொட்டு**
**நிலவு பரந்தாங்கு நீர்நிலம் பரப்பி**
**உலகுபயம் பகர ஓம்பு பெரும் பக்கம்**
**வழியது பக்கத்து அமரர் உண்டி**
**மதி நிறைவு அழிவதின் வரவு சுருங்க**
**எண்மதி நிறை உவாஇருள் மதிபோல**
**நாள் குறைபடுதல் காணுநர் யாரோ** (பரி. 11: 31 - 38)

45. **உரவுக்கதிர் மழுங்கிய கல்சேர் ஞாயிறு**
**அரவு நுங்கு மதியின் ஐயென மறையும்** (அகம். 114: 4 - 5)

46. **விரிகதிர் மதியமொடு வியல் விசும்பு புணர்ப்ப,**
**எரிசடை எழில்வேழம் தீமையெனக் கீழிலிருந்து**
**தெருவிடைப் படுத்த மூன்று ஒன்பதிற்று இருக்கையுள்**

உருகெழு வெள்ளி வந்து ஏற்றியல் சேர
வருடையைப் படிமகன் வாய்ப்ப பொருள்தெரி
புந்தி மிதுனம் பொருந்த புலர் விடியல்
அங்கி உயர்கிற்ப அந்தணன் பங்குவின்
இல்லத் துணைக்கு உப்பால் எய்த, இறை யமன்
வில்லின் கடைமகரம் மேவ பாம்பு ஒல்லை
மதியம் மறைய வருநாளில் வாய்ந்த
பொதியில் முனிவன் புரைவரைக் கீறி
மிதுனம் அடைய விரிகதிர் வேனில்
எதிர்வரவு மாரி இயைக என இவ் ஆற்றா
புரைகெழு சையம் பொழி மழை தாழ
நெரிதரூஉம் வையைப் புனல் (பரி. 11: 1 - 15)

47. வசையில் புகழ் வயங்கு வெண்மீன்
திசை திரிந்து தெற்கேகினும்
..................
வான் பொய்ப்பினும் (பட்டினப். 1 - 5)

49. வயங்குகதிர் விரிந்து வானகம் சுடர்வர
வறிது வடக்கு இறைஞ்சிய சீர்சால் வெள்ளி
பயம் கெழு பொழுதொடு ஆநியம் நிற்ப (பதிற். 24: 23 – 25)

50. விசும்புமெய்யகல பெயல்புரவு எதிர
நால்வேறு நனந்தலை ஓராங்கு நந்த (பதிற். 69: 15 - 16)

51. மழைக்கால் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து

**அறுமீன் சேரும் அகலிரு நடுநாள்** (அகம். 141: 6 - 8)

52. **பொழில் புறவின் பூந்தண்டலை**
**மழை நீங்கிய மா விசும்பில்**
**மதி சேர்ந்த மக வெண்மீன்**
**உருகெழு திறல் உயர்கோட்டத்து**
**முருகமர் பூ முரண்கிடக்கை**
**வரியணி சுடர் வான் பொய்கை** (பட்டினப். 33 - 38)

53. **வடமீன் புரையும் கற்பின் மடமொழி** (புறம். 122: 8)

54. **வடமீன் போல் தொழுது ஏத்த வயங்கியகற்பினாள்** (கலி. 2: 21)

55. **புன்தலை இரும்பரதவர்**
**பைந்தழை மாமகளிரொடு**
**பாயிரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது**
**உவவு மடிந்து உண்டாடியும்** (பட்டினப். 90 - 92)

56. **ஓங்குதிரை வியன்பரப்பில்**
**ஒலிமுந்நீர் வரம்பாக**
**தேன் தூங்கும் உயர்சிமைய**
**மலை நாறிய வியல் ஞாலத்து**
**வலமாதித்தான் வளிகொட்ப**
**வியல் நாள்மீன் நெறியொழுக**
**பகற்செய்யும் செஞ்ஞாயிறும்**
**இரவுச் செயும் வெண்டிங்களும்**

**மைதீர்ந்து கிளர்ந்து விளங்க**
**மழைதொழிலுதவ மாதிரங் கொழுக்க**
**தொடுப்பினாயிரம் வித்தியது விளைய**
**நிலனும் மரனும் பயன் எதிர்பு நந்த** (மதுரைக். 1 - 12)

## 2. திணை வழிபாட்டுச் சான்றுகள்

1. **மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே**
(தொல். பொருள். அகத். 5)

2. **நனந்தலை யுலகம் வளைஇ நேமியோடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல்** (முல்லைப்பாட்டு. 1 – 3)

3. **கணங்கொ ளவுணர்க் கடந்த பொலந்தார்**
**மாயோன் மேய ஓண நன்னாள்** (மதுரைக்காஞ்சி, 590 - 591)

4. **தன் உரு உறழும் பாற்கடல் நாப்பண்**
**மின்னவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த**
**கவைநா அருந்தலைக் காண்பின் சேக்கை** (பரி. 13: 26 – 29)

5. **செங்கட் காரி கருங்கண் வெள்ளை**
**பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்** (பரி. 3: 81 - 82)

**6.** **திகழ் ஒளி முந்நீர் கடைந்த அக்கால் வெற்புத்**
**திகழ்பெழ வாங்கி தம்சீர்ச் சிரத்தேற்றி**

**மகரமறி கடல் வைத்து நிறுத்து** (பரி. திரட்டு. 1: 64 - 66)

7. **கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய**
**ஊழி ஒருவினை உணர்த்தலின் முதுமைக்கு**
**ஊழி யாவரும் உணரா**
**ஆழி முதல்வ நிற்பேணுதும் தொழுது** (பரி. 2: 16 - 19)

8. **புருவத்துக் கருவல் கந்தரத்தால்**
**தாங்கி இவ்வுலகம் தந்து அடிப்படுத்ததை நடுவண்**
**ஓங்கிய பலர்புகழ் குன்றினோடு ஒக்கும்** (பரி. 4: 22 - 24)

9. **வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த**
**பல்வீழ் ஆலம் போல**
**ஒலிஅவிந் தன்று இவ் அழுங்கல் ஊரே** (அகம். 70: 15 - 17)

10. **படர்சிறைப் பல் நிறப் பாம்புப் பகையைக்**
**கொடியெனக் கொண்ட கோடாச் செல்வனை**
**ஏவல் இன்முது மொழி கூறும்**
**சேவல் ஓங்கு உயர்கொடிச் செல்வ** (பரி. 13: 38 - 41)

11. **சேவல் ஓங்கு உயர்கொடி யோயே**
**சேவல் ஓங்கு உயர்கொடி**
**நின் ஒன்று உயர்கொடி பனை**
**நின் ஒன்று உயர்கொடி நாஞ்சில்**
**நின் ஒன்று உயர்கொடி யானை**
**நின் ஒன்றா உயர்கொடி ஒன்று இன்று** (பரி. 4: 36 - 41)

12. **மாயிரு விசும்பில் கடி இடி பயிற்றி**

நேர்கதிர் நிரைத்த நேமிஅம் செல்வன்
போர் அடங்கு அகலம் பொருந்திய தார்போல்
திருவில் தேஎத்துக் குலைஇ (அகம். 175: 13 - 16)

13. தெரியிணர் ஞாழலும் தேம்கமழ் புன்னையும்
புரிஅவிழ் பூவின கைதையும் செருந்தியும்
விரிஞிமிறு இமிர்ந்து ஆர்ப்ப இருந்தும்பி இயைபு ஊதச்
செருமிகு நேமியான் தார்போலப் பெருங்கடல் (கலி. 127:1 - 4)

14. தண்ணளி கொண்ட அணங்குடை நேமிமால்
பருவம் வாய்த்தலின் இருவிசும்பு அணிந்த
இருவேறு மண்டிலத்து இலக்கம் போல (பரி. 13: 6 - 8)

15. ஒடியா உள்ளமொடு உருத்து ஒருங்கு உடன் இயைந்து
இடி எதிர் கழறும் – கால் உறழ்பு எழுந்தவர்
கொடி அறுபு இறுபு; செவி செவிடு படுபு
முடிகள் அதிர படிநிலை தளர
நனிமுரல்வளை முடி அழிபு இழிபு
தலை இறுபு தாரொடு புரள
நிலை தொலைபு வேர் தூர் மடல்
குருகு பறியா நீளிரும் பனைமிசைப்
பலபதினாயிரம் குலைதரை உதிர்வபோல்
நில்லாது ஒரு முறை கொய்பு கூடி
ஒருங்கு உருண்டு பிளந்து நெரிந்து உருள்பு சிதறுபு
அளறு சொரிபு நிலம் சோர
சேரார் இன் உயிர் செகுக்கும்
போரடு குருசில் நீ ஏந்திய படையே

**ஒன்னார் உடங்கு உண்ணும் சற்றம் உடலே**
**பொன் ஏர்பு அவிர் அழல் நுடக்கு அதன் நிறனே** (பரி.2:36-51)

16. **வளர்திரை மண்ணிய கிளர்பொறி நாப்பண்**
**வைவால் மருப்பின் களிறுமணன் அயர்வு**
**புள்ளி நிலனும் புரைபடல் அரிதென**
**உள்ளுநர் உரைப்போர் உரையடு சிறந்தன்று** (பரி. 2: 32 - 35)

17. **நீடுநிலைக் காந்தள் அம்சிலம்பில் களி படிந்தாங்கு**
**பாம்பனைப் பள்ளி அமர்ந்தோன் ஆங்கன்**
(பெரும்பாண். 371 - 373)

18. **நினக்கு விரிந்து அகன்ற கேள்வி அனைத்தினும்**
**வலியினும் மனத்தினும் உணர்வினும் எல்லாம்**
**வனப்பு வரம்பு அறியா மரபினோயே**
**அணிநிழல் வயங்கு ஒளி ஈர் – எண் தீம் கதிர்**
**பிறைவளர் நிறைமதி உண்டி**
**அணி மணிப் பைம்பூண் அமரர்க்கு முதல்வன் நீ**
**திணி நிலம் கட்ந்தக்கால் திரிந்து அயர்ந்து அகன்று – ஓடி**
**நின் அஞ்சிக் கடற்பாய்ந்த பிணி; நெகிழ்பு அவிழ் தண்தார்**
**அன்னவர் பட எல்லா அவுணர்க்கும் முதல்வன் நீ**
**அதனால் பகைவர் இவர் இவர் நட்டோர் என்னும்**
**வகையும் உண்டோ நின்மரபு அறிவோர்க்கே** (பரி. 3: 48-58)

19. **சுவைமை இசைமை தோற்றம் நாற்றம் ஊறு**
**அவையும் நீயே அடுபோர் அண்ணால்**
**அவைஅவை கொள்ளும் கருவியும் நீயே**

முத்துயாம் கூறிய ஐந்துள்ளும்,
ஒன்றனில் போற்றிய விசும்பு நீயே
இரண்டின் உணரும் வளியும் நீயே
மூன்றின் உணரும் தீயும் நீயே
நான்கின் உணரும் நீரும் நீயே
ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே
அதனால் நின் மருங்கின்று – மூ – ஏழ் உலகமும்
மூலமும் அறனும் முதன்மையின் இகந்த
காலமும் விசும்பும் காற்றொடு கனலும் (பரி.13:14 - 25)

20. தீயினுள் தெறல் நீ பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணீயும் நீ சொல்லினுள் வாய்மை நீ
அறத்தினுள் அன்பு நீ மரத்தினுள் மைந்து நீ
வேதத்து மறை நீ பூதத்து முதலும் நீ
வெஞ்சுடர் ஒளியும் நீ திங்களுள் அளியும் நீ
அனைத்தும் நீ அனைத்தின் உட்பொருளும் நீ (பரி. 3: 63 - 68)

21. நின்வெம்மையும் விளக்கமும் ஞாயிற்று உள
நின் தண்மையும் சாயலும் திங்கள் உள
நின் சுரத்தலும் வண்மையும் மாரி உள
நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்து உள
நின் நாற்றமும் ஒன்மையும் பூவை உள
நின் தோற்றமும் அகலமும் நீரின் உள
நின் உருவமும் ஒலியும் ஆகாயத்து உள
நின் வருதலும் ஒடுக்கமும் மருந்தின் உள
அதனால் இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும்
ஏமம் ஆர்ந்த நிற்பிரிந்து

மேவல் சான்றன எல்லாம் (பரி. 4: 25 - 35)

22. அழல் புரை குழைகொழு நிழல்தரும் பலசினை
ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால் வழக்கு அறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேவிய வேறுவேறு பெயரோய்
எவ்வயினோயும் நீயே நின் ஆர்வலர்
தொழுதகை அமைதியின் அமர்ந்தோயும் நீயே
அவரவர் ஏவலா ளனும் நீயே
அவரவர் செய்பொருட்கு அரணமும் நீயே (பரி. 4: 66 - 73)

23. பிறங்கு மலை மீமிசைக் கடவுள் (குறிஞ்சி. 208 - 209)

24. வெறிகமழ் நெடுவேள் (அகம். 98: 27)

25. ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்
ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்
வேலன் தைஇய வெறியயர் களனும்
காடும் காவும் கவின் பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல வைப்பும்
சதுக்கும் சந்தியும் புதுபூங் கடம்பும்
மன்றமும் பொதியியலும் கந்துடை நிலையினும்
(திருமுரு. 220 - 226)

26. மறுஅறு கற்பின் மாதவர் மனைவியர்
நிறைவயின் வழாஅது நிற் சூலினரே
நிவந்து ஓங்கு இமயத்து நீலப் பைஞ் சுனைப்
பயந்தோர் என்ப, பதுமத்துப் பாயல்;

**பெரும்பெயர் முருக! நிற்பயந்த ஞான்றே**
**அரிது அமர் சிறப்பின் அமரர் செல்வன்**
**எரி உமிழ் வச்சிரம் கொண்டு, இகந்து வந்து எறிந்தென**
**அறுவேறு துணியும் அறுவர் ஆகி**
**ஒருவனை; வாழி ஓங்கு விறல்சேஎய்!** (பரி. 5: 46 - 54)

27. **அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி**
**நெடும்பெருஞ் சிமயத்து நீலப் பைஞ்சுனை**
**ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப**
**அறுவர் பயந்த ஆறமர் செல்வ** (திருமுரு. 235 - 55)

28. **சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்**
**கடுஞ்சின விறல்வேள் களிறு ஊர்ந் தாங்கு** (பதிற். 11: 5 - 6)

29. **செங்களம் படக்கொன்று அவுணர்த் தேய்த்த**
**செங்கோல் அம்பின் செங்கோட்டு யானை** (குறுந். 1: 1 - 2)

30. **பிணிமுக ஊர்தி ஒண்செய் யோனும்** (புறம். 56: 8)

31. **பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு**
**சேய் உயர் பிணிமுகம் ஊர்ந்து** (**பரி.** 5: 1 - 2)

32. **ஊர்ந்ததை எரிபுரை ஓடை இடை இமைக்கும் சென்னி**
**பொருசமம் கடந்த புகழ்சால் வேழம்** (பரி. 1 - 2)

33. **செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்**
**செயலைத் தண்தளிர் துயல்வரும் காதினன்**
**சூச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்**

**குழலன் கோட்டன் குறும்பல் வியத்தன்**
**தகரன் மஞ்ஞையன் புகரில் – சேவல் அம்**
**கொடியன் கெடியன் தொடியணி தோளன்**
**நரம்பு ஆர்த்தன்ன இன்குரல் தொகுதியொடு**
**குறும்பொறிக் கொண்ட நறுந்தன் சாயல்**
**மறுங்கில் கட்டிய நிலவேர்பு துகிலினன்**

(திருமுருகு. 206 - 214)

35. **இருள்படப் பொதுளிய பராஅரை மராஅத்து**
**உருள்பூந் தண்டார் புரளும் மார்பினன்** (திருமுருகு. 104)

36. **சுருளுடை வள்ளி இடையிடுபு இழைத்த**
**உருளிணர்க் கடம்பின் ஒன்றுபடு கமழ்தார்**
**அமர்ந்ததை** (பரி. 21: 10 - 11)

37. **நறுமலர் வள்ளிப்பூ நயந்தாயே** (பரி. 22)

38. **ஆரா உடம்பின் நீ அமர்ந்து விளையாடிய**
**போரால் வறுங் கைக்குப் புரந்தரன் உடைய,**
**அல்லல் இல் அனலன் தன் மெய்யின் பிரித்து,**
**செல்வ வாரணம் கொடுத்தோன்; வானத்து**
**வளம் கெழு செல்வன் தன் மெய்யின் பிரித்துத்**
**திகழ் பொறிப் பீலி அணி மயில் கொடுத்தோன்;**
**திருந்து கோல் ஞமன் தன் மெய்யின் பிரிவித்து,**
**இருங் கண் வெள் யாட்டு எழில் மறி கொடுத்தோன்;**

ஆஅங்கு அவரும் பிறரும் அமர்ந்து படை அளித்த
மறியும், மஞ்ஞையும், வாரணச் சேவலும்,
பொறி வரிச் சாபமும், மரனும், வாளும்,
செறி இலை ஈட்டியும், குடாரியும், கணிச்சியும்
தெறு கதிர்க் கனலியும் மாலையும் மணியும்,
வேறு வேறு உருவின் இவ் ஆறு இரு கைக் கொண்டு,
மறு இல் துறக்கத்து அமரர் செல்வன்தன்
பொறி வரிக் கொட்டையொடு புகழ் வரம்பு இகந்தோய்

(பரி.5:55– 70)

39. அங்குசங் கடாவ ஒருகை இருகை
ஐயிரு வட்டமொடு எஃகுவலந் திரிப்ப ஒருகை

(திருமுருகு.110 - 111)

40. பாய்இரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு,
சேய் உயர் பிணிமுகம் ஊர்ந்து, அமர் உழக்கி,
தீ அழல் துவைப்பத் திரிய விட்டெறிந்து,
நோயுடை நுடங்கு சூர் மா முதல் தடிந்து,
வென்றியின் மக்களுள் ஒருமையொடு பெயரிய
கொன்று உணல் அஞ்சாக் கொடு வினைக் கொல் தகை
மாய அவுணர் மருங்கு அறத் தபுத்த வேல் (பரி. 5: 1 - 7)

41. கடுந்தூள் மாமுதல் தடிந்து அறுத்த வேல் (பதிற். 9: 70)

42. **கார் நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்**
**சூர்நவை முருகன் சுற்றத்து அன்ன நின்**
**கூர்நல் அம்பின் கொடுவில் கூளியர்** **(புறம்.** 23: 3 - 5)

43. **மறுவில் கற்பில் வானுதல் கணவன்** (திருமுருகு. 5)

44. **தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்**
**ஆவினன்குடி அமர்தலும் உரியன் அதாஅன்று**
(திருமுருகு. 175 - 76)

45. **குறவர் குடமகள் கொடிபோல் நுசுப்பின்**
**மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே** (திருமுருகு.101-102)

46. **தாமரை புரையும் காமர் சேவடி**
**பாவள அன்ன மேனித் திகழொளிக்**
**குன்றி ஏய்க்கும் உடுக்கைக் குன்றின்**
**நெஞ்சுபக எறிந்த செஞ்சுடர் நெடுவேல்**
**சேவல் அம் கொடியோன் காப்ப**
**ஏம வைகல் எய்தின்றால் உலகே** (குறுந். கடவுள் வாழ்த்து)

47. **மந்திர விதியின் மரபுளி விழாஅ**
**அந்தணர் வேள்ளியோர்க் கும்மே ஒருமுகம்**
(திருமுருகு. 95 - 96)

48. **வேறுபல் உருவிற் குறும்பல் கூளியர்**
**சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி**
**அளியன் தானே முதுவாய் இரவலன்**
**வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென**

இனியவும் நல்லவும் நனிபல வேந்திந்
தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்
வான்தோய் நிவப்பின் தான்வந் தெய்தி
அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மனங்கமழ் தெய்வந் திளநலங் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவன்நின் வரவென
அன்புடை நன்மொழி அளைஇ விளிவின்று
இருள் நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒரு நீ யாகித் தோன்ற வாழுமிய
பெறலரும் பரிசில் நல்குமதி பலவுடன் (திருமுருகு. 282 - 295)

49. அருங்கடி வேலன் முருகொடு வளைஇ
அரிக்காட் டின்னியங் கறங்க நேர்நிறுத்துக்
கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேட் பேணித்தழூஉப் பிணையூஉ
மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும்
உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ (மதுரை. 611 - 616)

51. எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்
நினைமுதிர் புன்கின் பூந்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும் (குறுந். 53: 1 - 3)

52. மறிக்குரல் அறுத்துத் தினைப்பிரப் பிரீஇச்
செல்லாற்றுக் கவலைப் பில்லியங் கறங்கத்
தோற்ற மல்லது நோய்க்கு மருந்தாகா (குறுந். 263: 1 - 3)

53. கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவு ளாயினு மாக
மடவை மன்ற வாழிய முருகே (நற். 34: 8 - 11)

54. நெடுவேட் பேணத் தணிகுவள் இவளென
முதுவாய் பெண்டிர் அதுவாய் கூற
களம்நன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப்பாடி பலி கொடுத்து
உருவச் செந்தினை தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள் (அகம். 22: 6 - 11)

55. மறிக்குர லறுத்துத் தினைப்பரப் பிரீஇ
செல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்கத்
தோற்ற மல்லது நோய்க்கு மருந்தாகா
வேற்றுப் பெருந்தெய்வம் பலவுடன் வாழ்த்திப்
பேஎய்க் கொளீஇயள் இவளெனப் படுதல்
தோதக் கன்றே தோழி (குறுந். 263: 1 - 6)

56. அடுங்கடி வேலன் முருகொடு வளைஇ
அரிக்காட் டின்னியங் கறங்க நேர்நிறுத்துக்
கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேட் பேணித் தழூஉப் பிணையூஉ
மன்றுதொறும் நின்ற குரவை சேரிதொறும்
உரையுடன் பாட்டும் ஆட்டும் விரைஇ (மதுரை. 611 - 616)

57. புலராக் காழகம் புலர வுடீஇ

உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து
ஆறெழுத் தடக்கிய அருமறை கேள்வி
நாவியல் மருங்கின் நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்து
ஏரகத் துறைதலும் உரியன் அதாஅன்று (திருமுருகு. 184 - 89)

58. ஆர்வேலை யாத்திரை செல்யாறு
சுடரொடு சூழ்வரு தாரகை மேருப்
புடைவரு சூழல் புலம்மாண் வழுதி
மடமயில் ஒரும் மனையவரோடும்
கடனறி காரியக் கண்ணவரோடும் – நின்
சூர் உறை குன்றின் தடவரை ஏறிமேல்
பாடுவலம் திரு பண்பின் – பழமதிச்
சூடி அசையும் சுவல்மிசைத் தானையின்
பாடிய நாவின் பரந்த உவகையின்
நாடும் நகரும் அடைய அடைந்தனைத்தே
படுமணி யானை நெடியோய் நீமேய
கடிநகர் சூழ் நுவலுங்கால் (பரி. 19: 19 - 29)

59. சீறடியவர் சாறுகொள எழுந்து
வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்
ஆறுகெல் வளியின் அவியா விளக்கமும்
நாறுகமழ் வீயும் கூறு இசை முழவமும்
மணியும் கயிறும் மயிலும் குடாரியும்
பிணிமுகம் உளப்படப் பிறவும் ஏந்தி (பரி. 8: 96 - 112)

60. தேம்படு மலர் குழை பூந்துகில் வடிமணி

**ஏந்து இலை சுமந்து சாந்தம் விரைஇ**
**விடைஅரை அசைத்த வேலன் கடிமரம்**
**பரவினர் உரையொடு பண்ணிய இசையினர்**
**விரிமலர் மதுவின் மரம் நனை குன்றத்து**
**கோலெரி கொளை நறை புகை கொடி ஒருங்கெழ**
**மாலை மாலை அடியுறை இயைநர்**
**மேலோர் உறையுளும் வேண்டுதர் யாஅர்** (பரி. 17: 1 - 8)

61. ………………… **யாஅம் இரப்பவை**
**பொருளும் பொன்னும் போகமும் அல்ல, நின்பால்**
**அருளும் அன்பும் அறனும் மூன்றும்**
**உருளிணர்க் கடம்பின் எலிதாரோயே** (பரி. 5: 78 - 81)

62. **மறுஇல் துறக்கத்து அமரர் செல்வன்** (பரி. 5: 69)

63. **வானத்து வளம் கெழு செல்வன்** (பரி. 5: 59)

64. **இருநிலம் துளங்காமை வடவயின் நிவந்து ஓங்கு**
**அருநிலை உயர்தெய்வத்து அணங்குசால் தலைகாக்கும்**
**உருமுச்சூழ் சேணிமை உயர்ந்தவர்** (பரி. 9: 1 - 3)

65. **ஐஇருநூற்று மெய் நயனத்தவன்** (பரி. 9: 9)

66. **நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து** (திருமுருகு. 55)

67. **ஆயிரம் கண்ணேய்க்கும்** (கலி. 105)

68. **வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்** (புறம். 24: 3)

69. **அணங்குடை வச்சிரத்தோன்** (கலி. 105: 15)

70. **நூற்றுபத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்**
**வேள்வி முற்றிய வென்றுஅடு கொற்றத்து**
**ஈர் இரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடை**
**தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை**
**எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்** (திருமுருகு. 155: 59)

71. **அச்சிரக்கால் ஆர்த்து – அணிமழை – கோலின்றே**
**வச்சிரத்தான் வானவில்லு** (பரி. 18: 38 - 39)

72. **இந்திரன் பூசை இவள் அகலிகை இவன்**
**சென்ற கவுதமன் சினன் உரக் கல் உரு**
**ஒன்றிய படி இது என்று உரைசெய்வோரும்**
**இன்ன பலபல எழுத்துநிலை மண்டபம்** (பரி. 19: 50 - 53)

73. **இந்திர விழவிற் பூவின் அன்ன**
**புன்தலைப் பேடை விரிநிழல் அகவும்** (ஐங். 62: 1 - 2)

74. **கால மன்றியும் கரும்பறுத் தெழியாது**
**அரிகால் அவித்துப், பலபூ விழவிற்**
**தேம்பாய் மருதம் முதல் படக் கொன்று,**
**வெண் தலைச் செம்புனல் பரந்து வாய் மிகுக்கும்**
**பல சூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்**
**சிறை கொள் பூசலின் புகன்ற ஆயம்**
**முழவு இமிழ் மூதூர் விழவுக் காணூஉப் பெயரும்**
**செழும் பல் வைப்பின் பழனப் பாலும்** (பதிற். 30: 14 - 21)

75. **சினைச் சுறவின் கோடு நட்டு**

**மனைச் சேர்த்திய வல்லணங்கினான்**

**மடற்றாழை மலர்மலைந்தும்**

**பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும்**

**புன்றலை யிரும்பரதவர்**

**பைந்தழைமா மகளிரொடு** (பட்டினப். 86 - 92)

## 3. சிவவழிபாட்டுச் சான்றுகள்

1. அந்தி வானமொடு கடல் அணி கொளாஅ
வந்த மாலை பெயரின் (அகம். 360: 8 - 9)

2. மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்
முக்கண்ணனான் உருவேபோல் முரண்மிகு குராலும்
(கலி.104: 11 - 12)

3. ஆதிரையான் அணிபெற மலர்ந்த
பெருந்தண் சண்பகம் போல (கலி. 150: 20 - 21)

4. எரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைகண்
உருவமாலை போல (கலி. 103. 25 - 26)

5. கறை மிடற்று அண்ணல் காமர் சென்னிப்
பிறை நுதல் விளங்கும் ஒருகண் போல (புறம். 55: 4 - 5)

6. ஏற்று வலன் உயரிய எரி மருள் அவிர்சடை (புறம். 56: 1)

7. உருவ ஏற்று ஊர்தியான் ஒள் அணி நக்கன்ன நின்
(கலி.150: 13)

8. புள் மிசைக் கொடியோனும் புங்கவம் ஊர்வோனும் (பரி.8: 2)

9. மாற்று அருங் கணிச்சி மணிமிடற்றோனும் (புறம். 56: 2)

10. ஓங்கு மலைப் பெரு வில் பாம்பு ஞாண் கொளீஇ
ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றி
பெரு விறல் அமரர்க்கு வென்றி தந்த (புறம். 55: 1 - 3)

11. இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன் (கலி. 38: 1)

12. நாகம் நாணா மலைவில்லாக (பரி. 5: 24)

13. ஞாலம் நாறும் நலம் கெழு நல் இசை
நாள் மறை முது நூல் முக்கட் செல்வன் (அகம். 181: 15 - 16)

14. மாதிரம் அழல எய்து அமரர் வேள்விப்
பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான் (பரி. 5: 26 - 27)

15. நன்று ஆய்ந்து நீள் நிமிர் சடை
முது முதல்வன் வாய் போகாது (புறம். 166: 1 - 2)

16. ஆதி அந்தணன் அறிந்து பரிகொளுவ
வேதமா பூண் வையத் தேர் ஊர்ந்து
நாகம் நாணா மலை வில்லாக
மூவகை ஆர் எயில் ஓர் அழல் – அம்பின் முனிய
மாதிரம் அழலது எய்து – அமரர் வேள்விப்
பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான் (பரி. 5: 22 - 27)

17. ஓங்குமலை பெருவில் பாம்புஞாண் கொளீஇ
ஒரு கணை கொண்டு மூவெயில் உடற்றி
பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த
கறை மிடற்று அண்ணல் காமர் சென்னிப் (புறம். 55: 1 - 4)

18. படர் அணி அந்தி பசுங்கட் கடவுள்
இடரிய ஏற்று எருமை நெஞ்சு இடந்து இட்டு

குடர் கூளிக்கு ஆர்த்துவான் போன்ம் (கலி. 101: 24 - 26)

19. இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக,
ஐ இரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையின் கீழ்புகுந்து, அம்மலை
எடுக்கல் செல்லாது உழப்பவன் போல (கலி. 38: 1 - 5)

20. உமை அமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூஎயில் முருக்கிய முரண்மிகு செல்வனும் (திருமுருகு.153-154)

21. வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பின் பழையோள் குழவி (திருமுருகு.258-259)

22. பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை
அருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை இனவன் டார்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பவி ழலரி தூஉய்க் கைதொழூது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப (முல்லை. 6 - 11)

23. பூதம் காக்கும் புகல் அருங் கடிநகர்
தூதுணம் புறவொடு துச்சில் சேக்கும்
முதுமரத்த முரண்களரி” (பட்டின. 57 - 59)

## 4. பிற வழிபாட்டுச் சான்றுகள்

1. பசும்பழப் பலவின் கானம் வெம்பி
விசும்புகண் ணழிய வேனில் நீழக்
கயங்கண் ணற்ற கல்லோங்கு வைப்பின்
நானுயிர் மடப்பிடி தழீஇ வேறு நாட்டு
விழவுபடர் மள்ளரின் முழவெடுத் துயரிக்
களிறதர்ப் படுத்த கல்லுயர் கவாஅன் (அகம். 189: 1 - 6)

2. கண்ணி கட்டிய கதிர லன்ன
ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி
யாறுகிடந் தன்ன அகனெடுந் தெருவிற்
சாறென நுவலு முதுவாய்க் குயவ (நற். 200: 1 - 4)

3. வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்
கச்சை யானைப் பிடர்த்தலை போற்றி
வால்வெண் களிற்றரசு வயங்கிய தோட்டத்துக்
கால்கோள் விழவின் கடைநிலை சாற்றி (சிலம்பு.5:141 - 144)

4. இருபெருங் குரவரு மொருபெரு நாளான்
மணவணி காண மகிழ்ந்தனர் மகிழ்ந்துழி
யானை யெருத்தத் தணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் கீந்தார் மணம் (சிலம்பு. 1: 41 - 44)

5. வார்கழல் பொலிந்த வன்கண் மழவர்
பூந்தொடை விழவின் தலைநா ளன்ன
தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம் (அகம். 187: 7 - 9)

6. **மழைகால் நீங்கிய மாக விசும்பிற்**
**குறுமுயல் மறுநிறங்கிள மதிநிறைந்து**
**அறுமீன் சேரு மகலிருள் நடுதான்**
**மறுகு விளக்குறுத்து மாலை தூக்கிப்**
**பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய**
**விழவுடனயர வருகதில் அம்ம** **(அகம். 141: 6 - 11)**

7. **கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கல்**
**பெருங்களிறு உரிஞ்சிய மண் அரை யாஅத்து**
**அருஞ்சுரக் கவலைய அதர்படு மருங்கின்**
**நீள் அரை இலவத்து ஊழ்கழி பல்மலர்**
**விழவுத் தலைக் கொண்ட பழவிறல் மூதூர்**
**நெல் உமிழ் சுடரின் கால் பொரச் சில்கி**
**வைகுறு மீனின் தோன்றும்**
**மைபடு மாமலை விலங்கிய சுரனே (அகம். 17: 15 - 22)**

8. **வேனி லத்தத் தாங்கண் வானுலந்து**
**அருவி யான்ற வுயர்சிமை மருங்கிற்**
**பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்**
**இலையில மலர்ந்த இலவமொடு**
**நிலையுயர் பிறங்கல் மலையிறந் தோரே (அகம். 185: 9 - 13)**

9. **வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்**
**கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி**
**வால்வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்**
**கால்கோள் விழவின் கடைநிலை சாற்றி** (மணி. 1: 141 - 144)

10. கால மன்றியும் கரும்பறுத் தொழியாது
அரிகா லவித்துப் பலபூ விழவின்
நேம்பாய் மருத முதல்படக் கொன்று
வெண்டலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்
பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்
சிறைகொள் பூசலிற் புகன்ற வாயம்
முழவிமிழ் மூதூர் விழவுக் காணூஉப் பெயருஞ்
செழும்பல் வைப்பிற் பழனப் பாலும் **(பதிற். 30: 14 - 21)**

**11.** நின்மலைப் பிறந்து நின்கடன் மண்டும்
மலிபுன னிகழ்தருந் தீநீர் விழவிற்
பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை
மேவரு சுற்றமொ ருண்டினிது நுகரும்
தீம்புன லாய மாடும்
காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே **(பதிற். 48: 13 - 18)**

**12.** அவியம ரழலென வரைக்குநர்
நந்தொடு நள்ளி நடையிறவு வயவாளை
வித்தி யலையில் விளைக பொலிகென்பார் **(பரி. 10: 84 - 86)**

**13.** தேம்படு மலர்க்குழை பூந்துகில் வடிமணி
ஏந்திலை சுமந்து சாந்தம் விரைஇ
விடையரை அசைத்த வேலன் கடிமரம்
பரவினர் உரையொடு பண்ணிய இசையினர்
விரிமலர் மதுவின் மரம் நனை குன்றத்துக்
கோலெரி கொளை நறை புகைக்கொடி ஒருங்கெழ

**மாலை மாலை அடியுறை இயைநர்**
**மேலோர் உறையுளும் வேண்டுநர் யாஅர் (பரி. 17:1-8)**

14. **சோறு நாற்றமும் பலவின் சுளையும்**
**வேறுபடக் கவினிய தேமாங் கனியும்**
**பல்வே றுருவிற் காயும் பழனும்**
**கொண்டல் வளர்ப்பக் கொடிவிடுபு கவினி**
**மென்பிணி யவிழ்ந்த குறுமுறி யடரும்**
**அமிர்தியன் றன்ன தீஞ்சோற்றுக் கடிகையும்**
**புகழ்படப் பண்ணிய பேரூன் சோறும்**
**கீழ் செல வீழ்ந்த கிழங்கொடு பிறவும்**
**இன்சோறு தருநர் பல்வயி னுகர (மதுரைக். 527 - 535)**

15. **முறை நன்கு அறியுநர் முன்னுறப் புகழ்ந்த**
**தூயியல் கொள்கை துகளறு மகளிரொடு**
**பருதி உருவின் பல்படைப் புரிசை**
**எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்**
**வேத வேள்வித் தொழில் முடிந்ததூஉம் (புறம். 224: 5 -9)**

16. **தைஇய மகளிர்தம் ஆயமோடு அமர்ந்து ஆடும்**
**வையை வார் உயர் எக்கர் நுகர்ச்சியும் உள்ளார்கொல்**
**(கலி.27: 19 -20)**

17. **தோப்பிக் கள்ளுடன் துரூஉப் பலி கொடுக்கும்**
**நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும் (அகம். 213: 7)**